Regd. No. 2 975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 191, 192

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

## பதினூறுண்டு நிறைவு நினைவுமலர்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

குரோதிஸு கார்த்திகை, மார்கழிமீ 1964ஸு நவம்பர், டிசம்பர்மீ

# ஸ்ரீராமாநுஜன் 191, 192



சென்னை ஸத்க்ரந்தப்ராகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.


## பதினாறாண்டு நிறைவு நினைவுமலர்.


| ஸம்புடம் 16 | 1964ஆ நவம்பர், டிசம்பரீ<br>குரோதிஆ கார்த்திகை, மார்கழிமீ | ஸஞ்சிகை 11, 12 |
|---|---|---|


### திருவாய்மொழி நூற்றந்தாதி—78.

கண்ணிறைய வந்து கலந்தமா லிக்கலவி *
திண்ணிதா வேணுமெனச் சிந்தித்து—*தண்ணிதெனு
மாருயிரினேற்றமதுகாட்ட வாய்ந்துரைத்தான் *
காரிமா றன்றன் கருத்து.

| | | | |
|---|---|---|---|
| கண் நிறைய வந்து கலந்த மால் | கண்ணாரவந்து கலந்த எம்பெருமான் | ஆர் உயிரின் | அருமையான் ஆத்மாவினுடைய |
| இக்கலவி திண்ணிலை ஆவேணும் என சிந்தித்து | இந்தக்கலவியானது சாச்வதமாயிருக்க வேணுமென்றெண்ணி | ஏற்றம் அது காட்ட | ஏற்றத்தைக் காட்டிக் கொடுக்க |
| | | காரிமாறன் | ஆழ்வார் |
| | | ஆய்ந்து | ஆராய்ந்து |
| தண்ணிது எனும் | கீழே சிறியதென்பதாக ஆழ்வார் பேசின | தன் கருத்து உரைத்தான் | தமது திருவுள்ளத்தை அருளிச்செய்தார். |

* * *—இருத்தும் வியந்தென்கிற கீழ்த்திருவாய்மொழியிலே பேருவகையோடே எம்பெருமானை யநுபவிக்கிற வளவில் ஆழ்வார் * சிறியேனுடைச் சிந்தையுள் * என்று தம்முடைய சிறுமையை அநுஸந்தித்தார்; அதனால் இவர் நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலக்கூடுமென்றெண்ணின எம்பெருமான் இந்த ஸம்ச்லேஷம இடையறாது செல்லவேணுமென்று கருதி; 'ஆழ்வீர்! மிகவுயர்ந்தான ஆத்ம வஸ்துவை நீர் தண்ணிதாக நினைப்பது தகுதியன்று; இதன் ஏற்றத்தைக் காணீர்' என்று ஆத்ம ஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டிக் கொடுக்க, இனி நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலமாட்டாமையாகிற தமது திருவுள்ளத்தை வெளியிட்டாராழ்வார் * கண்கள்சிவந்துபதிகத்தில். இதில் *தெருளும் மருளும் மாய்த்தோமே" என்றதில் நோக்காக "காரிமாறன் தன் கருத்து ஆய்ந்துரைத்தான்" என்றது.

## ஸ்ரீராமாநுஜன் ஜீவியச்சந்தா செலுத்தியவர்கள்.

ஸ்ரீமான் உ. வே. K. V. ராகவாச்சாரியர், டில்லி, உயர்திரு N. வேணுகோபால நாய்க்கர், B. A., B. L., புது டில்லி. இவ்விருமஹான்களும் ஜீவியச்சந்தாதாரராகச் சேர்ந்தார்கள்.

## ஸாதாரணச் சந்தாசெலுத்தியவர்கள்.

121. ஸ்ரீ. உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீனிவாஸாசாரியர் ஸ்வாமி, ஸத்யமங்கலம்.
122. ,, T. N. மகரபூஷணமையங்கார், தென்திருப்பேரை.
123. ,, V. S. வெங்கடாசாரியர் ஸ்வாமி, விட்டலாபுரம்.
124. ,, வானமாமலை வெங்கட்ரங்காசாரியர் ஸ்வாமி, மாடுங்கா.
125. ,, T. ராமஸ்வாமி ஐயங்கார், திருவல்லிக்கேணி.
126. ,, R. துரைஸாமி ஐயங்கார், ஈரோடு.
127. ,, C. R. ராமஸ்வாமி ஐயங்கார் B. A., B. L., கோயம்புத்தூர்.
128. ,, K. S. ரங்கநாதையங்கார், கோப்பூர்.
129. ஸ்ரீமான் க. வெ. பெத்து செட்டியார், திருமங்கலக்குடி.
130. ஸ்ரீமதி A. B. முதலியார் மரகதவல்லியம்மா, கோனேரிகுப்பம்.
131. ஸ்ரீமான் M. வெங்கடபதியவர்கள், சென்னனூர்.

## ஸ்ரீராமாநுஜன் பதினாறாண்டு நிறைவு நினைவுமலர்.

அன்பர்களே! நமது ஸ்ரீராமாநுஜனுக்கு நிகழும் மார்கழித்திங்களில் பதினாறாண்டு பூர்த்தியாகி, வரும் தைத்திங்களில் பதினேழாமாண்டு தொடக்கமாகிறது. பதினாறாண்டு கழிந்தால் பால்யதசை நீங்குகின்றதென்கிற நூற்கொள்கையின்படியும் பண்டைக்காலத்து மரபின்படியும் நம் ராமாநுஜனுக்கு இப்போது பால்யதசை நீங்கி பௌவநதசாப்ராதுர்ப்பாவம் தலைகாட்ட விருக்கின்றது. இந்த ஸமயவிசேஷத்தில் கார்த்திகை மார்கழி இரண்டு மாதங்களின் ஸஞ்சிகைகளைச் சேர்த்துப் பதினாறாண்டு நிறைவு நினைவு மலராக இதனை வெளியிடுகின்றோம். பதினாறு பதினாறாகச் சில சிறந்த விஷயங்களை விசேஷித்து வெளியிட உத்தேசிக்கிறோம். பதினாறென்கிற எண்ணிக்கையை நினைத்தவுடனே ஷோடசாயுத ஸ்தோத்ரமென்பது முந்துறமுன்னம் நினைவிலெட்டியது. இது ஸ்ரீபரங்குசமாந்த மஹாகுரு பணித்த ஸ்தோத்ரநூல்களிலொன்று. திருவாழியாழ்வான் தனது திருக்கரங்களிரண்டிலும் ஏந்தியுள்ள பதினாறு படைகளைப் புகழ்ந்தது. இதற்குச் சிறந்ததொரு வியாக்கியானமிட்டு இந்த ஸந்தர்ப்ப விசேஷத்தில் வெளியிடவேணுமென்று தோன்றி அப்படியே வெளியிடுகிறோம். தவிர பதினாறு நன்மொழிகள் பக்தர்களுக்கு மிகவுபயோகமானவையும் வெளியிடப்படுகின்றன. அன்றியும், விசதவாக் சிகாமணிகளென்று விருதுபூண்ட மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்யஸ்ரீஸூக்தி மாலையிலிருந்து பதினாறு விசதவாங்மணிகளைத் தேர்ந்தெடுத்து வெளியிடுகிறோம். இவற்றால் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களில் அவருடைய விமர்சசக்தி விசேஷம் வித்யாபரிச்ராந்தர்களுக்கு விளங்கும். "ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானமும்—தாதாசார்யகுடும்பமும்" என்கிற மகுடத்தின்கீழ்ப் பதினாறு விஷயங்கள் வெளியிடுகிறோம். இவை தவிர ஸ்ரீவரவரமுநிசதகவியாக்கியானமும் தயாசதக வியாக்கியானமும் ஸசேஷமாக வெளியிடப்படுகின்றன. இவை க்ரமேண ஸ்ரீராமாநுஜனிலேயே பூர்த்தியாகி வெளிவரும். ஸம்ஸ்க்ருத நூல்களின் வெளியீட்டில் விருப்பமில்லாதவர்கள் வியாக்கியானம் தமிழிலிருப்பதைக் கொண்டு த்ருப்தியடையக் கடவர்கள். .... (*)

---

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரிய ரெழுதிய

# பரமார்த்தபூஷணம்

— இதிலடங்கிய வியாசங்கள் —

1 ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானமும்— தாததேசிக குடும்பமும்

2 ஷை ஆங்கில வியாஸம் (Sri T. A. S.)

3 விசதவாக் சிகாமணி வாக்வைசத்யம்

4 பதினாறு நன்மொழிகள்

5 பச்சைப் பசும்பொய்யைப்பற்றிப் பதினாறு

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

கிடைக்குமிடம் :

P. B. ANNANGARACHARYA

L. KANCHEEPURAM

20-12-64 ] [ விலை 1-50

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# விசதவாக்சிகாமணி வாக்வைசத்யம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய தாஸன்.

1. மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளுக்கு அநிதர ஸாதாரணமான ஒரு சிறப்புண்டு. பிள்ளைலோகாசார்யருடையவும் அவருடைய திருத்தம்பியாருடையவும் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பர விரோதமோ பூர்வ ஸ்ரீஸூக்திவிரோதமோ, ஔசித்ய விரோதமோ ஆபாதத: தோன்றுவதற்கு ஸ்வல்ப ஆஸக்தி யிருந்தாலும் எடுத்துக் களையு மழகு மாமுனிகளின் வியாக்கியானங்களிலே அஸாதாரணமாக விளங்கும். அப்படிப்பட்ட அரிய பெரிய விமர்சங்களுள் சிலவற்றை இங்கெடுத்துக் காட்டுவோம்.

## விச்லேஷத்தில் பிராட்டியின் புருஷகாரத்வம் தோற்றுவதெங்ஙனே?

1. ஸ்ரீவசநபூஷணத்தில் (3) "ஸம்ச்லேஷ விச்லேஷங்களிரண்டிலும் புருஷகாரத்வம் தோற்றும்" என்ற சூர்ணைக்கு வியாக்கியான மருளிச்செய்து தலைகட்டினபின்—

"திருவடி ராக்ஷஸிகளை அபராதாநுகுணம் தண்டிக்கும்படி காட்டித்தரவேணுமென்றவளவில் பிராட்டி அவனுடனே மன்றாடி ரக்ஷித்தவித்தனையன்றோ? * மாதர்மைதிலி!* என்று பவநாத்மஜன் நிமித்தமாக ரக்ஷித்தாளென்றன்றோ பட்டருமருளிச் செய்தது. அவ்விடத்தில் புருஷீகரித்தமை எங்ஙனேயென்னில், பலாத்காரத்தாலன்றிக்கே அநு(நய)ஸாரத்தாலேஅபராதங்களைப் பொறுப்பிக்கையாலே புருஷகாரத்வமென்கிறது."

என்றருளிச்செய்தது காண்க. ... .... ... (*)

## பிராட்டியின் ச்ராவயித்ருத்வம் சேதந விஷயத்தில் எங்ஙனே?

2. (11) "இருவரையும் திருத்துவது முபதேசத்தாலே" என்ற சூர்ணையில், "ச்ராவயிதருவம் என்கிறவிது ஈச்வரவிஷயமாகவே பூருவர்களின் க்ரந்தங்கள் பலவற்றிலும் காணப்பட்டதாகிலும்......தத்வதீபத்திலே சேதந விஷயமாகவும் ஜீயருளிச்செய்கையாலே இவ்விடத்திலும் சேதநவிஷயமாகவும் சொல்லக்குறையில்லை"

என்றருளிச் செய்ததும் காண்க. .... ... .... .... (*)

## அர்ஜுநனுக்கு தூத்ய ஸாரத்யாதிகள் பண்ணினது தோஷத்தைப் பச்சையாகக் கொண்டென்றது எங்ஙனே?

3. மேலே (22) "அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" என்ற சூர்ணைக்கு வியாக்கியானமருளிச் செய்தபின்,

"தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றுமிவளுக்காகவாகில், இவன்தோஷத்தைப் பச்சையாகக்கொண்டு அங்கீகரித்தானென்னுமது கூடாதியென்னில்; அதுக்குக் குறையில்லை. இவள்கார்யார்த்தமாக இவனைக் குறித்து இவையெல்லாம் செய்கிறவிடத்தில் இவன் தோஷங்களைப் பார்த்து முகஞ்சுளியாமல் உகப்போடே செய்கையாலே......"

என்றருளிச் செய்ததுங்காண்க. ... .... .... ... (*)

"இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப் பற்ற" என்ற விடத்து ஶங்காபரிஹாரங்கள்.

4. மேலே (43) "அஜ்ஞானத்தாலே ஶ்ரீபக்தர் ஸஹஜாதிகள்.........இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற." என்றவிடத்து வியாக்கியானத்தில்—

"இந்த யோஜனைக்கொரு குறையுண்டு; * மயர்வறமதிநலம் பெற்ற ஆழ்வார்களுக்கும் அஜ்ஞானம் சிறிது கிடக்கிறதுண்டென்று கொள்ளவேண்டி வருகையாலே; ஆனால் செய்வதென்னெனில்; (ஊற்வத்தைப்பற்றி) என்கிறவித்தை அநுஸந்தானபரமாக்கி யோஜிக்குமளவில் இவ்விரோதமில்லை."

என்றருளிச்செய்து உடனே அதை வெகு விஶதமாக விவரித்தருளி விரோத ஶமநம் செய்தருளியிருக்குமழகு காணத்தக்கது.

"இந்த ஸ்வபாவ விஶேஷங்கள்......... காணலாம்" என்றவிடத்து ஶங்காபரிஹாரங்கள்

5. மேலே (53) "இந்த ஸ்வபாவவிசேஷங்கள் கல்யாணகுணங்களிலும் திருச்சரங்களிலும் திருநாமங்களிலும் திருக்குழலோசையிலுங் காணலாம்" என்றவிடத்து

"ஞானாதிகளை ஸாதகங்களாகவும் பாதகங்களாகவும் பேசுகிறவிடத்தில் இரண்டுமொருவர் பேச்சன்றிக்கே யிருந்ததே யாகிலும், ஆழ்வார்களெல்லாரும் ஏகஸ்வபாவிகளாகையாலும், எல்லாருடைய பக்தியும் பகவத் ப்ரஸாதலப்தையான பரபக்தியாகையாலும் அந்த பக்தி ஸ்வபாவ விஶேஷங்கள் காட்டுகிறமாத்ரமே இவ்விடத்தில் அபேக்ஷிதமாகையாலே விரோதமில்லை. * சரங்களே கொடிதாயடுகின்ற * என்றவிது பராஜிதரானவர் பாசுரமன்றோ? அத்தை * சரங்களாண்ட * என்கைக்கு ப்ரதிகோடியாகச் சொல்லலாமோ வென்னில், ராமவிஜயம் தமக்கு இஷ்டமாகையாலே அந்த விஜயத்துக்கு இலக்காய்த் தோற்ற ராக்ஷஸர்களைப் பிறந்து, பிராட்டிமார் களைப்பிறந்து பேசுமாபோலே, தாமானதன்மை தோற்றாதே, தோற்ற ராக்ஷஸர் பாசுரத்தாலே விஜயத்தைப்பேசி யநுபவிக்கிறார்—என்றிறே அத்திருமொழிக்கு வியாக்கியானம் பண்ணியருளுகிற ஆசார்யர்களருளிச் செய்தது. ஆகையால் தம்முடைய ப்ரேமஸ்வபாவத்தாலே தத்பாவநாபந்நரான பின்பு திருச்சரங்கள் பாதகமாயிற்றதும் தமக்கேயாய்த் தோற்றிப் பேசுகையாலே அப்படி சொல்லக்குறையில்லை."

என்றருளிச்செய்ததுங் காண்க. ... .... ... ... (*)

"யத்யத் ஸாங்கம் தத்தத் ஸாதநம்" என்கிற நியாயத்தின் ஶிக்ஷணம்;

6. மேலே (56.) "அங்கம் தன்னை யொழிந்தவற்றைப் பொருதொழிகை" என்ற சூர்ணைக்கு அவதாரிகை இட்டருளுகிறவளவில்—

"சரமச்லோகத்தில் இத்தை ஸாங்கமாக விதிக்கையாலே 'யச்சித்ஸாங்கம் தத்ஸாதநம்' என்கிற ந்யாயம் இதுக்கும் வாராதோ வென்ன, அங்க ஸ்வரூபத்தை விஶதீகரிக்கவே அந்தந்யாயம் இங்கு வாராதென்று பார்த்து அதுதன்னை யருளிச் செய்கிறார்"

என்று அவதாரிகையிட்டு, மேலே நிர்வாஹம் செய்தருளுகிறபோது

"யத்யத்ஸாங்கம் தத்தத்ஸாதநமென்ற விடத்தில் ப்ரவ்ருத்திரூபவாம் விஹிதமானவற்றையிறே ஸாதநமாகச் சொல்லுகிறது; அப்படியன்றிக்கே இதினுடைய அங்கம் நிவ்ருத்திரூபமாகையாலே இதுதானே இதினுடைய அநுபாயத்வ ஸூசகமென்று கருத்து."

என்றருளிச் செய்ததும் காண்க. இங்ஙனே பலவுண்டு ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில். இனி தத்வத்ரய வியாக்கியானத்தில் சிறிது செல்வோம்.

பஞ்சீகரண மாமிடத்தில் பூதபேதவ்யவஹாரமெங்ஙனே யென்று ஶங்கித்து ஸமர்த்தித்தல்.

7. தத்வத்ரய அசித்ப்ரகரணத்தில் (40) "குணவிநிமயம் பஞ்சீகரணத்தாலே" என்று மூல ஸ்ரீஸூக்தியுள்ளது. பஞ்சீகரணமாவது என்னவென்றால். ஆகாசம் முதலான ஐந்து பூதங்களையும் தனித்தனியே இரண்டு கூறாகப் பிரித்து, அவற்றிலே ஒரு கூறை அப்படியே வைத்திட்டு, மற்றொரு கூறை நாலுகூறாக்கி அந்த கூறுகளை மற்ற நான்கு பூதங்களிலே கூட்டி எல்லா பூதங்களிலும் எல்லாக் குணங்களு முண்டாம்படி பண்ணுகை—என்று விவரணம் காட்டப்பட்டது. இப்படி பஞ்சீகரணத்தாலே எல்லா பூதங்களிலும் எல்லாமுமுண்டாயிருந்தால் ஆகாசம் வாயு தேஜஸ்ஸு அப்பு ப்ருதிவி யென்று பூதங்களை பேதப்படுத்தி வ்யவஹரிப்பது எங்ஙனே கூடுமென்று சங்கை யுதிக்கிறது. இதற்குப்பரிஹாரமாக மாமுனிகள் அருளிச் செய்வது பாரீர்—

"இப்படி பஞ்சீகரணமானாலும் அவிபக்தமான (ஸ்வ-உ) அர்த்தங்கள் ப்ரதானங்களாய் நிற்கையாலே ஆகாசாதி பூத பேத வ்யவஹாரத்துக்கும் குறையில்லை—" என்று. இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்து யாதெனில், ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு கூறாக்கினபோது ஒரு கூறுமட்டுமே விபாகம் செய்யப்பட்டு இதர (நான்கு) பூதங்களில் கால் கால் பாகமாகச் சேர்க்கப்பட்டது. மற்றொரு கூறு அடியோடு விபாகம் செய்யப்படாமல் அப்படியே நிறுத்தப்பட்டிருப்பதால் அதனுடைய ப்ராசுர்யத்தைக் கொண்டு இது ஆகாசம், இது ப்ருதிவி..............என்று பேத வ்யவஹாரம் செய்யப்பட்டு வருகிறதென்றதாயிற்று. ... ... ... .... (*)

சாந்தோக்யத்தில் பஞ்சீகரணத்தைச் சொல்லாதே த்ரிவ்ருத் கரணம் சொன்னதுக்கு நியாமகம் காட்டுதல்.

8. பஞ்சீகரணம் த்ரிவ்ருத்கரணம் என்று இரண்டுண்டு. சாந்தோக்யத்தில் த்ரிவ்ருத் கரணம் மட்டுமே சொல்லிற்று; பஞ்சீகரணம் சொல்லப்படவில்லை. இதைப் பற்றிச் சிலர் சங்கிக்கக் கூடுமென்று திருவுள்ளம் பற்றின மாமுனிகள் (41.) சூர்ணையின் வியாக்கியானத்திலே அருளிச் செய்திருப்பதாவது—

"சாந்தோக்யத்தில் பஞ்சீகரணம் சொல்லாதே த்ரிவ்ருத் கரணத்தைச் சொல்லுவானென்னென்னில்; அங்கு தேஜோபந்நங்கள் மூன்றினுடையவும் உத்பத்தி மாத்ரமிறே சொல்லிற்று; ச்ருத்யந்தரத்திற் சொல்லுகிற ஆகாச வாயுக்களினுடையவும் அவ்யக்த மஹதஹங்காராதிகளினுடையவும் உத்பத்தி தானும் சொல்லிற்றில்லையிறே. ஆகையால் தேஜோபந்நமாத்ரகதநம் தத்வாந்தரங்களுக்கும் உபலக்ஷணமானாப் போலே த்ரிவ்ருத்கரண கதநமும் பஞ்சீகரணத்துக்கு முபலக்ஷணம்." என்று. .... .... (*)

"ஸவிக்ரஹனாய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணு" மென்றவிடத்து ஶங்காஸமாதானங்கள்.

9. மேலே ஈச்வர ப்ரகரணத்திலேயே (40) "இவன் தான் *முந்நீர் ஞாலம் படைத்த வெம்முகில் வண்ணனே* யென்கிறபடியே ஸவிக்ரஹனாய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும்" என்று மூலத்திலருளிச் செய்யப்பட்டுள்ளது. ஈச்வரன் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணும்போது விக்ரஹ விசிஷ்டனாய்க் கொண்டே பண்ணுகிறானென்று திருவுள்ளம் பற்றின பிள்ளை லோகாசார்யர் இவ்விஷயத்திற்கு *முந்நீர் ஞாலம் படைத்த வெம்முகில் வண்ணனே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை ப்ரமாணமாகக் காட்டியருளினாராயிற்று. முகில்வண்ணனென்கிறதற்கு இங்ஙனே பூர்வாசார்யர்கள் வியாக்கியானமிட்டிருந்தாலொழிய இவ்விட

திற்கு இது ப்ரமாணமாகத் தகுதியில்லை. பூர்வாசார்ய வியாக்கியானமோ இப்படியில்லை; வேறுவிதமாகவுள்ளது; அப்படியிருக்க. இந்த சந்தை ஆக்ருத விஷயத்திற்கு எங்ஙனே ப்ரமாணமாகும்? என்கிற சங்கை மணவாள மாமுனிகளின் திருவுள்ளத்திலே தோன்றிற்று; அதையும் அதன் பரிஹாரத்தையும் அருளிச் செய்திருப்பது பாரீர்; இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—

> "*முகில்வண்ணனென்கிற விது ஔதார்ய குணபரமாக வ்யாக்யாதாக்கள் பலரும் வ்யாக்யானம் பண்ணினார்களே யாகிலும், விக்ரஹ பரமாக இவரருளிச் செய்கையாலே இங்ஙனு மொரு யோஜனை யுண்டென்று கொள்ளவேணும்; ஒன்றுக்குப் பல யோஜனையு முண்டாயிறே யிருப்பது" என்று. .... .... (*)

"லக்ஷ்மீ பூமி நீளா நாயகனாய்" என்றதை உபபாதித்தருளாமையைப் பற்றி.

10. அதற்குமேலே (3-42.)"ஈச்வர ஸ்வரூபந்தான் பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதார மென்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்" என்கிற சூர்ணைக்கு வியாக்கியான மருளிச் செய்தபின்,........."ஆகையால் விரோதமில்லை" யென்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது. அந்த ஈச்வர ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் "ஈச்வரன் அகிலஹேய ப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநைகதைக ஸ்வரூபனாய்" என்று தொடங்கி எம்பெருமானுக்கு அநேக விசேஷணங்கள் ஸாதித்து வருமவர் "விலக்ஷண விக்ரஹயுக்தனாய் லக்ஷ்மீ பூமி நீளா நாயகனா யிருக்கும்" என்று (அந்த முதல் சூர்ணையைத்) தலைக்கட்டினார். உடனே முன்னம் தாமிட்ட விசேஷணங்களைத் தாமே முறையே விவரணம் செய்து வருகிறார். அதில் 'லக்ஷ்மீ பூமி நீளா நாயகனா யிருக்கும்' என்றது விவரிக்கப்படவேயில்லை. "விலக்ஷண விக்ரஹ யுக்தனாய்" என்ற ப்ரஸங்கத்திலே ஈச்வர ஸ்வரூபத்தை யெடுத்துக் கொண்டு அது பஞ்சப்ரகார மென்று சொல்லி அந்த ஐந்து ப்ரகாரங்களை விவரித்து க்ரந்தத்தை ஸமாப்தி செய்துவிட்டார் பிள்ளைலோகாசார்யர்; லக்ஷ்மீ பூமி நீளா நாயகத்வமாகிற விசேஷணம் விவரிக்கப்படாமலே நின்றுபோயிற்று. இது குறையல்லவா வென்று சங்கித்துப் பரிஹாரமுணர்த்துகிறார் மாமுனிகள். இவ்விடத்து வியாக்கியான பங்க்திகளிவை—'லக்ஷ்மீ பூமி நீளா நாயகனா யென்றதையு முபபாதித்துவிட்டு பின்னை இது சொல்லா தொழிவானென்னென்னில், அதில் உபபாதிக்க வேண்டுவது பணியில்லாமையாலும் *வைகுண்டேது பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்தந:, உபாப்யாம் பூமி நீளாப்யாம் ஸேவித: பரமேச்வர:*என்கையாலே மேல் சொல்லுகிற பரத்வத்திலே அர்த்தாத் உக்தமா மென்னுமதைப் பற்றவும் தனித்து உபபாதித்திலர்; ஆகையால் விரோதமில்லை" என்று. .... .... .... .... (*)

பரத்வாதி பஞ்சப்ரகாரவைசிஷ்ட்யம் ஈச்வர ஸ்வரூபத்திற்கா? விக்ரஹத்திற்கா?

11. மேலே எடுத்துக்காட்டினவிடத்திலேயே மற்றொருவிளக்கமுமுள்ளது. பரத்வாதி பஞ்சப்ரகார விசிஷ்டத்வம் ஈச்வரனுடைய ஸ்வரூபத்திற்கா? அல்லது திவ்யமங்கள விக்ரஹத்திற்கா? என்றொரு விசாரம் விளைந்தது. அதை விரிவாக நிரூபித்து விரோதம் தோன்றும்படியைக் காட்டிப் பரிஹாரம் செய்தருளுகிறார் மணவாள மாமுனிகள்; இவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு—"ஈச்வர ஸ்வரூப மென்கிற விடத்தில் ஸ்வரூப சப்தத்தாலே சொல்லுகிறது ஸ்வாஸாதாரண விக்ரஹத்தை யாதல்—விக்ரஹ விசிஷ்டமான ஸ்வரூபந்தன்னை யாதல். ஸங்க்ரஹேண இட்டருளின மற்றை யிரண்டு தத்வத்ரயப் படியிலும். ஒரு படியிலே "திருமேனியும் அஞ்சுபடியா யிருக்கும்—பரத்வமும் வ்யூஹமும் விபவமும் அந்தர்யாமித்வமும் அர்ச்சாவதாரமும்" என்றும், மற்றைப் படியிலே "ஈச்வர ஸ்வரூபமும் ஹேய ப்ரதி

படமாய்'' என்று தொடங்கி "பத்நீ பரிஜந விசிஷ்டமா யிருக்கும்'' என்றத்தை உபபாதித்த வனந்தரம் 'இதுதான் அஞ்சுபடியா யிருக்கும்' என்று இதம சப்தத்தாலே ப்ரக்ருதமான ஈச்வர ஸ்வரூபத்தைப் பராமர்சித்து, அதுதான் பரத்வாதி ரூபேண பஞ்ச ப்ரகாரமாயிருக்கு மென்றும் இவர் தாமே யருளிச்செய்கையாலே.'' என்று. இத்தால் விரோத சங்கா பரிஹாரம் செய்யப்பட்டபடி யென்னென்னில்; ஈச்வர ஸ்வரூப மென்றது—ஸ்வாஸாதாரண விக்ரஹத்தைச் சொன்னதாகவு மாகலாம், விக்ரஹ விசிஷ்டமான ஸ்வரூபத்தைச் சொன்ன தாகவு மாகலாம் என்று.

வியூஹம் மூன்றா? நான்கா?

12. அவ்விடத்திலேயே அதற்குமேலே (44) "வ்யூஹபாவது ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும் ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகவும் உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை'' என்கிற சூர்ணையினாலும் வ்யூஹம் மூன்று விதமென்று தெரிவிக்கப்பட்டது. மேலே (53) "நித்யோதித சாந்தோதிதாதி பேதமும்'' என்றருளிச் செய்யுமிடத்தில் சாந்தோதித ஷாட்குண்யபூர்ணரா யிருக்கிற வ்யூஹ வாஸுதேவர் தெரிவிக்கப்பட்டாராகிறார். இதனால் வ்யூஹம் நான்கு வகை யென்றதாகத் தேறுகிறது. ஆக, ஓரிடத்தில் மூன்றுவகை யென்பதும், மற்றோரிடத்தில் நான்கு வகை யென்பதுமான விரோதம் காண்கிறது. மணவாளமாமுனிகள் இங்கே யருளிச் செய்வது பாரீர்;—வ்யூஹங்கள் நாலென்றும் மூன்றென்றும் சாஸ்த்ரங்களிலே சொல்லாநிற்க, நாலுமுண்டாயிருக்க மூன்றென்கிறது வ்யூஹ வாஸுதேவ ரூபத்துக்கு பரரூபத்திற் காட்டில அநுஸந்தேய குணபேத மில்லாமையாலே யென்று அபியுக்தர் சொல்லுகையாலே இவர் கீழ் வ்யூஹத்ரய மென்றருளிச் செய்ததுக்கும் இங்கு வ்யூஹ வாஸுதேவ ருண்டாக வருளிச் செய்ததுக்கும் விரோத மில்லை.'' இது (53) சூர்ணையின் வியாக்கியானத்தில் காணும் ஸ்ரீஸூக்தி. (44) சூர்ணையின் வியாக்கியானத்திலும் (முடிவில்)—"*சதுர்விதஸ் ஸ பகவான்* என்கிறவிடத்தில் சதுர்விதமாகச் சொல்லிற்று வாஸுதேவரையும் கூட்டுகையாலே'' என்றருளிச் செய்தருளினார்.

பத்மநாபாதிவிபவங்கள் முப்பத்தாறா? முப்பத்தொன்பதா?

13 கீழே உதாஹரித்த தத்வத்ரய (53)சூர்ணையிலேயே "ஷட்த்ரிம்சத்பேதபிந்நமான பத்மநாபாதி விபவமும்'' என்றுள்ளது. இதனால் பத்மநாபாதி விபவங்கள் முப்பத்தாறென்று காட்டப்பட்டது, இது "ஷட்த்ரிம்சத்பேதபிந்நாஸ்தே பத்மநாபாதயஸ் ஸுரா:'' என்ற ப்ரமாணத்திற்குச் சேர்ந்ததே. இங்கே மணவாளமாமுனிகளின் வியாக்கியானம்—

"விபவா: பத்மநாபாத்யா: த்ரிம்ஶந் நவ ச வை ஹி.... ... .... த்ரிம்ஶந் நவ ச வை விபவா: பத்மநாபாத்யா உதா:*'' என்று முப்பத்தொன்பதாக அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாதிகளிலே சொல்லிற்றே யாகிலும், விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிலே முப்பத்தாறாகச் சொல்லியிருக்கையாலே இவர் ஷட்த்ரிம்சத்பேத பிந்நமென்றதில் குறையில்லை; இனி அந்த முப்பத்தொன்பதிலே மூன்றைக் குறைத்துக் கொள்ளுகையிறே யுள்ளது. அவை யாவன கபில தத்தாத்ரேய பரசுராம ரூபமான ஆவேசாவதாரங்கள்'' என்று.

இத்தால் முப்பத்தாறென்றும் முப்பத்தொன்பதென்றும் சொன்னவற்றுக்கு ஸ்வரஸ்யம் காட்டியருளினாராயிற்று. இனி ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்திலே சிறிது செல்வோம்.

அருளிச்செயலில் பாடபேதமும் அர்த்தபேதமும்.

14. ஆசார்ய ஹ்ருதயத்தில் (50) "இயற்பா மூன்றும் வேதத்ரயம்போலே; பண்ணார் பாடல் பண்புரை யிசைகொள் வேதம் போலே'' என்ற சூர்ணையில் * பண்ணார் பாடலித்யாதி வாக்யத்தினால் திருவாய்மொழிக்கு ஸாமவேத ஸாம்யம் கூறப்படுகிறது. இங்கே மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்:—

"வ்யாக்யானங்களில் * பண்புடை வேதம்* என்றெழுதிய * பண்புரை வேதமென்று பாடமும் * இசைகொள் வேத மென்கிறதுக்கு ஸாமவேத பரத்வமும் கண்டதில்லையே யாகிலும் ஆப்ததமரான விவர் இப் ப்ரபந்தத்திலே இப்படி யருளிச் செய்கையாலே இப்படியும் கொள்ளவேணும்.'' என்று.

மஹான்களின் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பர விரோத சங்கை பண்ணலாகாதென்றவாறு.

## ஆழ்வாருடைய யாத்ருச்சிக ஸுக்ருத விமர்சம்.

15. ஆசார்ய ஹ்ருதயம் இரண்டாம் ப்ரகரணத்தில் ஆழ்வார்க்கு விளைந்துள்ள பரம பக்தியானது பகவந் நிர்ஹேதுக க்ருபையினு லத்தனை யல்லது கர்மஜ்ஞான பக்திகளாகிற ஸாதனங்களின் அநுஷ்டானத்தினுலன்று என்பதைப்பல சூர்ணைகளினுல் பரக்க உபபாதித்து வருகிருர் மூலகாரர்; யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்று சொல்லப்படுகிற ஸுக்ருதாபாஸங்கள்கூட ஆழ்வாரிடமில்லை யென்று பரக்க உபபாதித்தார். (107) "முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை யாழி யென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்" என்னும் சூர்ணை முக்கியமாகக் காணத்தக்கது. ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்து அருளிச் செய்திருக்கிற ஆழ்வார்க்கு அஜ்ஞாதமான தொன்று மில்லாமையாலே தம்மை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு மூலமான ஏதேனுமொரு ஸுக்ருதமுண்டாகில் அது ஆழ்வாருடைய புத்திக்கு எட்டாம லிராது; எட்டியே யிருக்கும். அதை அருளிச் செய்யாது விடமாட்டாராழ்வார்; அப்படி யருளிச் செய்யக் காணுமையாலும், கேவல நிர்ஹேதுக பகவத் ப்ரஸாதத்தையே வெளியிட வல்ல ஸ்ரீஸூக்திகளையே ஆழ்வாருளிச் செய்திருக்கக் காண்கையாலும் யாத்ருச்சிகம் முதலான ஆபாஸ ஸுக்ருதங்களும் இவர்க்கு இல்லையென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. இதற்குமேல் மூன்று சூர்ணைகளுக்கு அப்பால் "மாதவன் மலை நீர் நிழலென்று ஏறிடுமது வ்யாவ்ருத்த்யுக்தி, அந்யார்த்தம் அபுத்திபூர்வம், அவிஹிதம், ஃபலவிஸத்ருசம் ஃபலாந்தரஹேது" என்ற சூர்ணை அருளிச்செய்யப்பட்டுள்ளது. இத்தால் என்ன தெரிவிக்கப் படுகிறதென்றால், ஆழ்வாருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக் காட்டி இவர்க்கு யாத்ருச்சிகஸுக்ருத முண்டு என்று தெரிவிக்கப்படுகிறது. எங்ஙனே யென்னில்; திருவாய்மொழியில் (2-7-3) *மாதவ னென்றதே கொண்டு என்னை யினி யிப்பாற் பட்டது, யாதவங்களும் சேர்கொடே னென்று என்னுள் புகுந்திருந்து* என்கிற பாசுரத்தினுல் மாதவன் என்கிற திருநாமத்தைத் தாம் அஹ்ருதயமாகச் சொன்னதாகவும், அவ்வளவிலே இத்தையே பெரிய ஹேதுவாகக் கொண்டு எம்பெருமான் தம்மை விஷயீகரித்துத் தம்முள்ளே புகுந்திருந்து ஸகல கர்மங்களை யும் போக்கினதாகவும் சொல்லப்படுகிறது. மேலே *திருமாலிருஞ் சோலைமலை யென்றே னென்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்* (10-7-1) என்கிற பாசுரத்தி னுலே-திருமாலிருஞ்சோலைமலை யென்று அவனுடைய திவ்யதேசத்தின் பெயரை அஹ்ருதய மாகத் தாம் சொன்னதாகவும், அவ்வளவிலே அவன் தானுகந்து வர்த்திக்கிற திருமலையின் பெயரை விரும்பிச் சொன்னதாகக் கொண்டு பிராட்டியோடே கூடவந்து தம்முள்ளே பரி பூர்ணமாகப் புகுந்ததாகவும் சொல்லிற்று. ஆக இவ்விரண்டு பாசுரங்களையும் மூலகாரர் எடுத்துக் காட்டி இப்பாசுரங்களிற் சொல்ன மாதவன் மலையென்னுமுக்திகளுக்கு அஹே துத்வத்தை யருளிச்செய்கிருர். அது இருக்கட்டும். மேலே யெடுத்துக் காட்டிய இரண்டு பாசுரங்களினுலும் ஆழ்வார்க்கு யாத்ருச்சிகம் முதலான ஸுக்ருதமுண்டு என்று காட்டப் பட்டு விட்டதல்லவா? 107 சூர்ணையில் யாத்ருச்சிகாதிகள் இல்லையென்று ஸாதித்துவிட்டு 111 சூர்ணையில் அவை யிருப்பதாகக் காட்டினது பரஸ்பர வ்யாஹதமென்று சங்கிக்கக் கூடி யது. இவ்விடத்து வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள் இந்த சங்கையை உத்பாவ னம் பண்ணிப் பரிஹாரம் காட்டியிருப்பதை இனி யுணர்த்துகிறேம். மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகள் இவை—

"கீழே 'யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்' என்றதவும் இங்கே மாதவ னித்யாதியாலே அவனேறிடத் தக்கவை சிலவுண்டாக இவர் தம்முடைய உக்தியாலே கண்டெடுத்துக் கழிக்கிறவிதுவும் தன்னில் சேரும்படி யெங்ஙனே யென்னில்; யாத்ருச்சி காதிகள்தான் பலவுமுண்டாகையாலே அத்புதகடங்களாய் மஹா பலத்துக்கு உறுப்பாய் வந்து விழுமவையும் ஆபாஸங்களா யிருக்குமவையு முண்டாகையாலே அத்புதகடங்க ளாய் அவனுக்கு ஹேதுவாகக் கொள்ளலாம்படி யிருக்குமவற்றைக் கீழே சொல்லிற் றுக்கி, ஆபாஸங்களாய் அவனுரோபித்துக் கொள்ளத்தக்கவற்றை இங்கே சொல்லிற் றென்று விபஜித்துக் கொள்ளுமளவில் விரோதமில்லை" என்று.

இங்ஙனே நாமெடுத்துக் காட்டத்தக்க ஸ்ரீ ஸூக்திகள் மற்றும் பலபல. இத்தகைய ஸமந்வய ஸ்ரீ ஸூக்திகளை மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்யக்ரந்தங்களிலன்றி மற்ற எந்த க்ரந்தத்திலும் காணமுடியாதென்பது சிலாலிகிதம். "அல்லும் பகலும் அநுபவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் நல்ல மணவாளமாமுனிவன்" என்று முன்னோர்கள் திருவாய்மொழி நூற்றந்தாதிக்கு இட்டதனியன் அந்த நூற்றந்தாதியைமட்டும் பற்றியதன்று; மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி ஸமுதாயத்தைப் பற்றினது. மாமுனிகளைப்போல் பொருளையும் விவரிக்க வறியாமல் சொற்களையும் அடுக்கத் தெரியாமல் க்ரந்தமெழுதினவர்கள் பலருளர். வியாக்கியான மெழுத எழுத்தாணியைக் கையிற் கொள்ளவேணுமானால் அதற்கு மணவாளமாமுனிகளொருவர் தவிர மற்றையோர் முன் வருவது மஹத்தான ஸாஹஸமென்றே அடியேன் அறுதியிட்டிருப்பது. மாமுனிகளின் ஸர்வதோமுகமான வைதுஷ்யமும் அவருடைய திவ்ய ஸூக்திகளின் மாஹாத்ம்யமும் ஸ்ரீஸூக்தி ரசநாவைகரியும் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறொருவர்க்கு அமைந்திலது.

## நித்யசத்ருவிசிந்தந விமர்சம்

16. ஆசார்யஹ்ருதயத்திலேயே (127.) நம்மாழ்வார்க்கு சத்ருக்நாழ்வானோடு ஸாம்யம நிர்வஹிக்கிற விடத்திலே "நித்ய சத்ரு விசிந்தநம்" என்று மூலத்திலுள்ளது. அங்கு மணவாள மாமுனிகள் வியாக்கியானத்திலே "*விசிந்தயன் என்கிறபடியே" இத்யாதி யருளிச் செய்து தலைக்கட்டி, பிறகு விமர்ச ரூபேண அருளிச் செய்திருப்பதாவது—

"விசிந்தந மென்கிறவிதுக்கு இப்படி வியாக்கியானம் பண்ணிற்று; இதின் பட்டோலையானதிலே 'ஊறுமோவென்று நித்ய சத்ருவைவென்று புலன்கொள் வடிவை விசிந்தயனாயிருக்கும்' என்று விசிந்தயந் என்று ஒருவசன முண்டாகவுமெடுத்து இப்படி இவர் தாமே யருளிச் செய்து வைக்கையாலே. இவ்விடத்திலும் சிந்தன மென்னாமல் விசிந்தன மென்றது அவ்வசன ஸூசகமாகவிறே. 'விசிந்தயன்' என்கிற வசனம் இன்ன விடத்திலே யென்று த்ருஷ்டமாய்த்தில்லை; வந்த விடத்திலே கண்டு கொள்வது"......... என்று.

இங்கே மாமுனிகளின் பரம ப்ராமாணிகத்வம் விளங்கும் படியைச் சிறிது விவரிக்கிறோம். ஸ்ரீராமாயணத்தில் அயோத்யா காண்டத்தில் (89-3) * ஜாகர்மி நாஹம் ஸ்வபிமி (நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி = நாஹம் ஸ்வபிமி' ஜாகர்மி' தமேவார்யம் விசிந்தயன்* என்கிற சத்ருக்ன வசனம் ஸ்பஷ்டமாகக் காணப்படா நிற்க, "விசிந்தயந் என்கிற வசனம் இன்னவிடத்திலே யென்று த்ருஷ்டமாய்த் தில்லை" என்று ஸர்வஜ்ஞரான மாமுனிகள் அருளிச் செய்யக் கூடுமோ வென்கிற சங்கை உதிக்கின்றது. இங்கே தத்துவமென்ன வென்னில், *நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி* என்று மேலெடுத்த ச்லோகத்தில் அடுத்த பாதத்தில் பாடபேதம் நெடுநாளாகவேயுள்ளதாகத் தெரிகிறது. *தமேவார்யம் விசிந்தயந்* என்பது ஒருசாராருடைய பாடம்; *ராமமேவாநு சிந்தயந்* என்பது மற்றொரு சாராருடைய பாடம். இங்ஙனே பாடபேத முண்டென்பதைக் கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான அவதாரிகையின் அரும்பதவிளக்கத்தில் ஸ்பஷ்டமாகக் காணலாம். அங்கு "அதாகிறது பெருமாளைப் பற்றும் போதும்" என்கிற பெரிய வாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு அவதாரிகை யிடுகையில் "* சத்ருக்நச் சத்ரமாததே* என்றும் *ராமமேவாநு சிந்தயந்* என்றுமிருக்க" என்கிற பங்க்தியைக் காணலாம். இதனால் (தமேவார்யம் விசிந்தயந்) என்கிற பாடத்தின் ஸ்தானத்திலே (ராமமேவாநு சிந்தயந்) என்கிற பாடமும் ஆசார்ய கோஷ்டியில் வழங்கி வந்ததென்பதை நன்குணரலாம். ஆசார்ய ஹ்ருதயகாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்க்கு (தமேவார்யம் விசிந்தயந்) என்கிற பாடம் வந்திருப்பதால் அதைக் கொண்டு அவர் "விசிந்தயநாயிருக்கு" மென்று பட்டோலையிலும் விசிந்தன மென்று ஆசார்ய ஹ்ருதயத்திலும் அருளிச் செய்யலாயிற்று. மாமுனிகளுக்கு (ராமமேவாநு சிந்தயந்) என்கிறபாடமே கிடைத்திருந்ததனால் (விசிந்தயந்) என்பதற்கு (அநுசிந்தயந்) என்பதை யெடுத்துக் காட்ட ஔசித்ய மில்லை யாயிற்று. இது மாமுனிகளுக்கே அஸாதாரணமான பத்ததி.

மாமுனிகள் தமது வியாக்கியானங்களில் பாட விசாரம் செய்தருள்வது முண்டு; அதைப்பற்றியும் இரண்டிடம் எடுத்துக் காட்டுதும். ஆசார்ய ஹ்ருதயத்திலே (55).

"கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸும்" என்றவிடத்து வியாக்கியானத்தில்— "சந்தஸ்ஸென்கிற விது நினைவென்றே இவ்விடத்தில் கொள்ள வேணும்; சந்தமென்றே நினைவுக்கு வாசகம். சந்தஸ்ஸென்கிறவிதுவும் நினைவுக்கு வாசகமாக வந்த விடங்களிலே கண்டு கொள்வது" என்றருளிச் செய்தார். 'இங்கு சதுர்முகன் அடியும்' என்று தான் மூலமிருக்க வேண்டும். ஸ்வாமி தாராளமாகத் திருத்தியருளலாம். அது அவருடைய ஸரணியன்று. மேலே (224) *என்னையும் யாவர்க்கும் சுரர்க்காயித்யாதி சூர்ணையில் "மெய்யமர் பக்தி பூமாபலமாகவும்" என்றே அக்காலத்தில் பலரும் பாடம் செய்து சொல்லிக் கொண்டிருந்தார்கள் போலும்; இது வியாகரண சாஸ்த்ர விருத்தமான பாடம்; இதைக் கண்டிக்காமல் ஒருவழியாலும் ஸமஞ்ஜஸமாக்க முடியாதாகையாலே ஸ்வாமி இங்கு அருளிச் செய்கிறார்— "ஸமாஸத்தில் பக்தி பூமபலமென்னவேணும்; பூமாபல மென்கிறது பாட ஸ்கலனத்தாலே வந்த தாமித்தனை" என்று தவறான பாடமென்று துணிந்து கண்டித்தேயாக வேண்டிய இடமாகையாலே கண்டிக்கப் பட்டது. நித்ய சத்ரு விச்ந்தந மென்கிற விடமும், சதுர் முகன் சந்தஸ்ஸுமென்கிற விடமும் இப்படி அவசியம் கண்டித்தேயாக வேண்டிய இடங்களல்லாமையாலே அவ்விடங்களுக்குத் தக்கபடி யருளிச் செய்தாராயிற்று.

ஒரு சதுச்சாஸ்த்ரபண்டிதர் ஸ்ரீபாஷ்யப்ரவசநம் பண்ணுகின்றார். *லோகவத்து லீலா* என்கிற ஸூத்ரபாஷ்ய ப்ரவசனம் நடைபெறுகிறது. ப்ரயோஜநம் கேவலா லீலைவ என்கிற ஸ்ரீபாஷ்யஸூக்தியை அவர் விசிகித்ஸாமேஹமுமின்றிக்கே நிர்வஹித்துப் போராநின்றார். அவரைநோக்கி 'லீலையாவது என்ன?' என்று கேட்டோம். விளையாட்டு என்றார். சாஸ்த்ரஜ்ஞரான நீர் ஸம்ஸ்க்ருத பாஷையாலே அதை நிர்வசிக்கலாகாதோ? என்றோம். தலைகாலில்லாதபடி எதையோ சொன்னார். அவர் மணவாள மாமுனிகள் திறத்து மர்ச்சரியங்கொண்டிருந்தவர். அவர்க்கு நாம் தத்வத்ரயத்தில் (162) *ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவல லீலையென்னுமிடத்து மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக் கையில் தந்தோம். திருப்பித் திருப்பிப் பார்க்கிறார்; ஒன்றும் விள்ளவில்லையவர்க்கு. பங்க்திகளின்மீது பொருளை உபபாதித்துக் காட்டினோம். "மணவாள மாமுனிகளைப்போல் மிகத் தெளிவுபட சாஸ்த்ரார்த்தங்களை நிரூபிக்கவல்லார் *நபூதோ நபவிஷ்யதி என்று கைகூப்பிச் சென்றார். பாஷ்யகாரர் எழுதியருளின ஸம்ஸ்க்ருதவாக்யமும், அதைதடியொற்றிப் பிள்ளை லோகாசாரியர் அருளிய [மேலே காட்டிய] வாக்யமும் சிறிது திருத்தப்பட்டாலொழிய ஸமந்விதமாகாதென்று மாமுனிகளின் உபபாதநம். ஸ்ரீபாஷ்யத்தைப் பரிஷ்கரித்துக் காட்டியருளி, இங்ஙனேயாமிடத்து ஸ்ருஷ்டிரூபவ்யாபாரஸ்ய வ்யாபார: ப்ரயோஜநம் என்று கூறினதாகத் தேறுகிறதென்றும், இது அந்விதமென்றும் காட்டியருளி, உபபந்நமாகும் வழியும் காட்டியுள்ளார்;

> "லீலையாவது தாதாத்விகரஸ மொழிய காலாந்தரத்தில் வருவதோரு ஹேதுத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் (மூலத்தில்) ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநமென்று ஸ்ருஷ்டிரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜநமாகச் சொல்லுகையாலே தாதாத்விகரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக்கடவது."

என்றுள்ள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திபோல் எங்கேனுங் கண்டதுண்டோ? இங்கு சங்கையென்ன? ஸமாதானமென்ன? என்று கூட அறியமாட்டாத ப்ரவக்தாக்கள் எத்தனைவருளர்! ஸ்ருஷ்டி: பகவத: கேவலலீலா" என்னலாமே யொழிய "ஸ்ருஷ்டே: ப்ரயோஜநம் கேவலலீலா" என்னத்தகாது என்று இன்னமும் அறியப்பெறுதார் எத்தனைவருளர்! ஆழ்ந்து கூர்ந்து ஆராய்ந்து வியாக்கியானித்தருளும் பல்லாண்டு.

உபஸம்ஹாரம்;— ஸ்வாமியினுடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை வாக்யந்தோறும் பதந்தோறும் எழுத்துத்தோறும் ஆழ்ந்து ஊன்றி நோக்குமளவில் *ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி—ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி* என்று ஆளவந்தாரால் கொண்டாடப்பட்ட திருவனந்தாழ்வானே ஸ்வாமியென்னுமிடம் ஸர்வாத்மநா ஸம்ப்ரதிபந்நமாகும்......*

———

# பதினாறு நன்மொழிகள் P. B. A.

## (உபந்யாஸக ஸௌபாக்யம் இருபத்தோராவது மலர்)

1. சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்குப் பல நியமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. புண்ணிய க்ஷேத்ரத்தில் செய்ய வேணும், வேறிடத்தில் செய்யலாகாது என்கிற தேசநியமமும், வஸந்தாதி காலங்களிலே செய்யவேணும், மற்ற காலங்களிலாகாது என்கிற காலநியமமும், ஸ்நாநம் பாதப்ரக்ஷாளநம் முதலியவற்றைச் செய்தபின் செய்யவேணும், வேறுபடியாகச் செய்யக்கூடாதென்கிற ப்ரகார நியமமும், த்ரைவர்ணிகரா யிருக்கவேணும், அத்ரைவர்ணிகர் கூடாதென்கிற அதிகாரி நியமமும், இன்ன பலனைத்தான் இது தரும், மற்ற பலனைத் தாராதென்கிற பல நியமமுமாகிற இந்த நியமங்களெல்லாம் ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்கு உள்ளனவேயன்றி சரணாகதிக்கு இந்த நியமங்களொன்றுமில்லை; இன்ன விஷயத்திலே செய்யவேணுமென்கிற விஷய நியமமொன்று மாத்திரமே இதற்குள்ளது. அதாவது— பரத்வம் முதலிய ஐந்தினுள்ளும் ஸௌலப்யாதி குணங்கள் பூர்ணமாயிருக்கப்பெற்ற இடமே விஷயமாகை. ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் தானே சொல்லப் புகுந்தாலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி குணங்கள் பூர்த்தியாயிருப்பது அர்ச்சாவதாரத்திலே யாகையாலே ஆழ்வார்கள் சரணாகதியை அர்ச்சாவதாரத்தில் செய்தருளுகிறார்கள்.

2. திருவாய்மொழி யாயிரத்தில் நூறு பதிகங்களன்றோவுள்ளன. அவற்றுள் ஒரு பதிகத்திற்கும் அமையாத அதிசயமொன்று *உலகமுண்ட பெருவாயா* என்னும் பதிகத்திற்கு அமைந்துள்ளது. அஃதாவது என்னென்னில்; ஒவ்வொரு பாட்டிலும் விடாமல் திருவடியைப்பற்றின சொல் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. முதற்பாட்டில் *குலதொ லடியே னுனபாதம் கூடுமாறு கூறாயே. 2. *ஆறுவன்பி னடியேன் உன்னடி சேர் வண்ண மருளாயே. 3 *அண்ணலே! உன்னடி சேர அடியேற்கு ஆவாவென்னாயே. 4. *பூவார் கழல்க ளருவினையேன் பொருந்துமாறு புணராயே. 5. *திணரார் சார்ங்கத் துனபாதம் சேர்வ தடியே னெந்நாளே. 6. *மெய்ந்நா னெய்தி யெந்நா ளுன்னடிக்க ளடியேன் மேவுவதே. 7. *நொடியார் பொழுது முனபாதங் காண நோலாதாற்றேனே. 8. *நோலா தாற்றே னுனபாதங் காண. 9. *அந்தோ! அடியே னுனபாதம் அகலகில்லே னிறையுமே. 10. *புகலொன்றில்லா வடியே னுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே. 11. *அடிக்கீ ழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின். ஆக இப்பதிகம் முழுவதும் திருவடி ஸம்பந்தம் இடையறாது வரப்பெற்றதென்று மதிசயம் குறிக்கொள்ளத்தக்கது. இதற்கொரு முக்கியமான கமகமுண்டு. அதாவது, "முமுக்ஷுவுக்கறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்னப்பட்ட திருமந்த்ரம் த்வயம் சரம ச்லோகமாகிற மூன்று ரஹஸ்யங்களில், திருமந்த்ரத்திலும் சரம ச்லோகத்திலும் திருவடியைப்பற்றின ப்ரஸ்தாவமே கிடையாது; அஃதுள்ளது மந்த்ரரத்னமென்கிற த்வயத்தில் மட்டுமேயாம். அந்த த்வயத்தின் அர்த்தாநுஸந்தான பரமான *இவ்வுலகமுண்ட பதிகத்தில் திருவடியின்

ப்ராதாந்யத்தை ஆழ்வார் இங்ஙனே காட்டியருளினது சாலச் சிறக்கும். அன்றியும், மற்ற இரண்டு ரஹஸ்யங்களிலும் பிராட்டியின் ஸம்பந்தமும் ஸ்பஷ்டமாகத் தோற்றிற்றில்லை. அக்குறையும் தீர த்வயத்தில் இரண்டு கண்டங்களினுடையவும் தொடக்கத்தில் ஸ்ரீசப்த விந்யாஸமுள்ளது அதற்குச் சேர *அகலகில்லேன் இறையுமென் றலர்மேல் மங்கை யுறை மார்பா* என்றருளிச் செய்தா ராழ்வார். அதற்கிணங்கத் திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்திலும் " அலர்மகளை முன்னிட்டு " என்றருளிச் செய்யலாயிற்று.

3. வடமொழியில் வழங்கும் காலக்ஷேபமென்கிற சொல்லுக்குத் தமிழில் போதுபோக்கென்பது பொருள். ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தல் பகவத் விஷயம் ஸேவித்தல் என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் பகவத் விஷய காலக்ஷேபம் என்றே தொன்றுதொட்டுப் பெரியார்கள் வழங்கிவருகிறார்கள். காலக்ஷேப மென்கிற சொல்லுக்கு 'ஸேவிப்பது' என்கிற பொருள் எப்படி கூடுமென்றும், இந்த ப்ரயோகம் எப்படி பொருந்துமென்றும் சில வ்யுத்பந்நர்கள் விமர்சிப்பதுண்டு. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபமென்றால் ஸ்ரீபாஷ்யத்தைக்கொண்டு போதுபோக்குவது என்றுதான் பொருள். ஸ்ரீராமாயண காலக்ஷேபம் ஸ்ரீவசநபூஷண காலக்ஷேபம் இத்யாதிகளான ஸகல வ்யவஹாரங்களுக்கும் இதுதான் பொருள். இப்படி வ்யவஹரிக்கத் தொடங்கின பெரியார்களின் திருவுள்ளம் யாதெனில், விஷயங்களை க்ரஹிக்கிறோமோ இல்லையோ அது எப்படியாயினுமாகுக ; நல்லபடியாகப் போதைப் போக்கினால் போதும்—என்பதேயாம். ஆர்த்தியில் "முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுது நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்" என்று மணவாளமாமுனிகள் பணித்தபடியே பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளால் போதுபோக்குவதென்பது ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயன்.

4. *காவ்ய சாஸ்த்ர விநோதேந காலோ கச்சதி தீமதாம். அந்யேஷாம் து மநுஷ்யாணாம் நித்ரயா கலஹேந வா* என்கிற ச்லோகமொன்று யாவருமறிந்ததே. ஆங்காங்கு அவரவர்கள் தம் தம் போதுகளை எப்படி போக்கி வருகிறார்களென்று நாற்புறமும் பார்ப்போமாயின், உத்யோகஸ்தர்கள் வியாபாரிகள், பயிர்த் தொழிலாளர்கள், வக்கீல்கள் முதலானாருடைய போதுபோக்குகள் ஒவ்வொருவிதமாக நிகழ்ந்துவருகின்றன. சிலபேர்கள் தேச வ்ருத்தாந்தப் பத்திரிகைகளைப் படித்தல், நாவல்களைப் படித்தல், சூது சதுரங்கமாடுதல்......முதலிய காரியங்களிலே காலத்தைச் செலவிடுகிறார்கள். இது தவிர, நால்வர் எண்மர் பதின்மராகக் கூடி ஒரு காசுக்கு முதவாத வம்பு வார்த்தைகளை வெகு அட்டஹாஸங்களுடன் பேசிக் கொண்டும், தங்கள் திரளிலே அந்வயிக்கப் பெறாமல் சுவடிகளிலும் பகவத் பாகவத பரிசர்யைகளிலும் போதுபோக்கிவரும் மஹான்களைப்பற்றி ஏதேனும் பழிமொழிகளைப் பறைசாற்றிக்கொண்டும் பத்து மணி காலத்தைப் பத்து நிமிஷமாகக் கழிக்கின்றவர்கள் சிறிய கிராமம் முதல் பெரிய நகரம் வரையில் எங்குமுள்ளார்கள், அன்னவர்கள் பெறுமானந்தம் அளவுகடந்தது. அவர்களுக்கு உலகமெல்லாம் த்ருணம்.

5. ஆழ்வார்களுள் இரண்டு ஆழ்வார்கள் போதுபோக்கைப்பற்றி வெகு இன்பமாகப் பேசியுள்ளார்கள். திருமழிசை யாழ்வாரும் நம்மாழ்வாரும். இவ்விருவருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக்காட்டுகிறோம் காண்மின். திருமழிசையாழ்வார் நான்முகன்

திருவந்தாதியில் (63)* தரித்திருந்தே னுகவே......தெரிந்தெழுதி வாசித்துங்கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்றருளிய பாசுரம் ஒவ்வொருவரும் நிச்சலும் நினைக்கத்தக்கது. போதுபோக்கும் விதத்தை இவரைப்போல் எடுத்துரைத்தவர் மற்று யாருமில்லை. தெரித்தல், எழுதுதல், வாசித்தல், கேட்டல், வணங்குதல், வழிபடல், பூசித்தல் ஆகிய இவற்றினுலேயே தாம் போதைப் போக்கினதாகவும் இவையில்லையாயின் தம்மால் உயிர்தரிக்க முடியாதாகவும் வ்யக்தமாக விளம்பியுள்ளார். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியின் முடிவில் (பா. 86) *கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்ருன் பாம்பணையான்—சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையி னுழ்துயரை, என்னினைந்து போக்குவரிப்போது* என்றுள்ள பாசுரம் சுவைமிக்க பொருளுடைத்து. எம்பெருமானுடைய திருக்குணங்கள் நிரம்பிய ஸ்ரீஸூக்திகளை யநுஸந்தித்தால் பாவங்களும் துன்பங்களும் தொலையுமென்று சில பெரியார் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு; ஆழ்வார் என்ன சொல்லுகிருரென்ருல், பாவங்களும் துன்பங்களும் தொலைந்தால் தொலையட்டும் வளர்ந்தாலும் வளரட்டும், அதைப்பற்றி என்ன கவலை? இவ்வுலகில் நாம் வாழ்கிறவரையில் நம்முடைய போது போகவேண்டுமே; போதை எப்படி போக்குவது? பகவத்குணங்கள் மலிந்த ஸ்ரீஸூக்திகளைக் கொண்டுதானே போதைப் போக்கவேண்டும்; வேறு எதைக்கொண்டு போதைப் போக்குவது! ஒவ்வொருவனும் போதைப் போக்கியாகவேண்டுமே, குணுநுபவம் தவிர வேறு எந்தக் காரியஞ்செய்தால் போதுபோகும்? வேருென்ருலும் போதுபோக்க வரிதன்ருே. சீர்கலந்த சொல்நினைந்து சூழ்வினையி னுழ்துயரைப் போக்காரேல் போக்காதொழிக; இப்போதை என்னினைந்து போக்குவர்! என்று அருளிச்செய்கிற அழகு என்னே! உலகத்தில் ஒவ்வொருவனும் பகவத் குணுநுபவம் பண்ணியா போதைப் போக்குகிருன்? இல்லையே. சூது சதுரங்கமாடியும் உண்டியே உடையே உகந்தோடியும் மாரனுர் வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்தும் மற்றும் பல பல செய்துமன்ருே அவரவர்கள் போதுபோக்கி வருவது. குணுநுபவத்தால் போதுபோக்குவாராக ஒருவரையும் கண்டிலோமே; "ஸாக்ஷாத்க்ருத் ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச்செய்கிறபடி உலகியற்கையை ஒன்றுதப்பாம லுணர்ந்தவரான ஆழ்வார் "என்னினைந்து போக்குவ ரிப்போது" என்று குணுநுபவத்தாலன்றிப் போதுபோக்க முடியாதென்று ஏன் சொல்லுகிருர்? என்று கேட்கலாம்; *ஆத்மவத் ஸர்வபூதாநி ய: பச்யதி ஸ பச்யதி* என்றதைக்கண்டு தெளிக.

6. *நலத்தால் மிக்கார்* என்றும் *கலையிலங்குமொழியாளர்* என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு லக்ஷ்யபூதர்களாய் விளங்கும் மஹநீயர்களைக்குறித்து *அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே* என்கிறபடியே நிந்தனை மொழிகளைப் பலவகைகளாலும் பரவச்செய்துகொண்டு அதுவே போதுபோக்காக இருப்பவர்களைக் குறித்து இங்கு நாம் தெரிவிக்கவேண்டியதொன்றுமில்லை. ஈச்வரனுடைய ஜகத் ஸ்ருஷ்டியானது மிக விசித்திரமானது. பொய் சொல்வது, களவு செய்வது, வஞ்சனை பண்ணுவது முதலான தீய குணங்களையும், அஹிம்ஸை இந்த்ரிய நிக்ரஹம் க்ஷமை ஸத்யம் முதலிய நற்குணங்களையும் ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் நாம் பார்த்துவருகிருேம். நற்குணங்களோ தீய குணங்களோ அவரவர்கட்கு இயற்கையாக அமைகின்றனவென்பதே

பெரும்பான்மையான கொள்கை வேம்புக்குள்ள கசப்பும் மாதுளைக்குள்ள புளிப்பும் கரும்புக்குள்ள தித்திப்பும் முதலியன எப்படி ஒரு நாளும் மாறுவதில்லையோ அப்படியே மனிதர்களுக்கும் ஜன்ம ஸித்தங்களான குணங்கள் (நல்லவையோ தீயவையோ) பேர்க்கவும் பேரா என்றே பெரியார் கூறுவர். இளமையில் பொய் சொல்லியும் களவாடியும் வழக்கம் பெற்றவர்கள் அந்த வழக்கத்தை ஒருநாளும் விடமுடிகிறதில்லை யென்பதையும், இயற்கையாகவே ஸத்யம் முதலிய நல்ல குணங்கள் அமையப் பெற்றவர்கள் ஒருநாளும் அஸத்யவழியில் செல்கின்றிலர் என்பதையும் எந்தவூரிலும் எந்த ஜாதியிலும் எக்காலத்திலும் பார்க்கலாம்.

7. மாதவாரியாக அநுஸந்திப்பதற்குப் பாங்கான நன்மொழி கேளீர். ஐப்பசி மாதத்திலிருந்து புரட்டாசி மாதம்வரை வரிசையாக அநுபவிக்கவேண்டிய விஷயங்கள். ஐப்பசியில் பொய்கை பூதம் பேயாழ்வார்களெனும் முதலாழ்வார்கள் பிள்ளை லோகாசார்யர் மணவாளமாமுனிகள். (2) கார்த்திகையில்-திருமங்கையாழ்வார் திருப்பாணாழ்வார் அருளாளப் பெருமாளெம்பெருமானார் நம்பிள்ளை. (3) மார்கழியில்-தொண்டரடிப்பொடியாழ்வார், திருவத்யயநோத்ஸவப் பெருமை. (4) தையில்-திருமழிசையாழ்வார், எம்பார். கூரத்தாழ்வான். (5) மாசியில் குலசேகராழ்வார் திருக்கச்சிநம்பிகள். (6) பங்குனியில்-பெரியபிராட்டியார்; நஞ்சீயர். (7) சித்திரையில்-மதுரகவியாழ்வார், எம்பெருமானார் முதலியாண்டான் அனந்தாழ்வான். (8) வைகாசியில்-நம்மாழ்வார், பட்டர். (9) ஆனியில்-பெரியாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகள், வடக்குத் திருவீதிப்பிள்ளை (10) ஆடியில்-ஆண்டாள், ஆளவந்தார். (11) ஆவணியில்-கீதாசார்யன், பெரியவாச்சான்பிள்ளை. (12) புரட்டாசியில். வேதாந்தவாசிரியர்......ஆக இவர்களைப்பற்றி விசேஷமாகச் சிந்தனை செய்வது.

8 திருமாலையில் *வேதநூற் பிராயம் நூறு* என்கிற பாசுரத்தில் அருளிச்செய்யப் பட்ட விஷயம் இவ்விருள் தருமாஞாலத்திற் பிறந்து வருந்தும் அனைவர்க்கும் ஒக்குமாதலால் ஸாம்ஸாரிகரீதியில் கழியும் காலம்போக மிகுந்த காலத்தை ஒரு நொடிப்பொழுதும் பழுதாக்காமே "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று கீழே காட்டின திருமழிசைப்பிரான் கட்டளையிலேயே போக்கி வரவேணும். *யந் முஹூர்த்தம் க்ஷணம்வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச் சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா* என்கிற ச்லோகத்தையும் *ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்* என்கிற ச்லோகத்தையும் பல பெரியயர்களிடம் பல கால் கேட்டுத் தரித்து அடிக்கடி அவற்றையே சிந்திப்பதும் பிறர்க்குரைப்பதுமான இயல்புகொண்டிருக்க வேணும். இதில் ஆத்மானந்தமும் அதிகமாகும்.

9. ஆண்டாள் தமது திருத்தகப்பனாகிய பெரியாழ்வாரையே பல படிகளிலும் பின்சென்றிருக்கின்றாள். சில படிகளை ஈண்டெடுத் துரைப்போம். பெரியாழ்வாருக்கு மங்களாசாஸநத்திலேயே பரிவு பொங்கியிருப்பது ப்ரஸித்தம். இது காரணமாகவே பெரியாழ்வாரென்னும் பெயர் அவர்க்கு நிகழ்ந்ததென்பதும் ப்ரஸித்தம். ஆண்டாளுக்கும் மங்களாசாஸநத்திலேயே ஊற்றமென்பது திருப்பாவையில் வெளிப்படை. "சீரிய சிங்காசனத்திருந்து யாம் வந்த காரிய மாராய்ந்தருள்" என்றவாறே 'வந்த காரியம் யாது?

சொல்லவேணும்' என்று கண்ணபிரான் கேட்க; *அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி* என்று தொடங்கி மங்களாசாஸநமே தனக்கும் தொழில் என்னுமிடம் காட்டினுள் கோதை. ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணினுர்கள்" என்றருளிச்செய்தபடியே இடைத் தனத்தில் முறுகிநின்றமை இவ்விருவர்க்கும் அஸாதாரணம். ஸ்ரீவில்லிபுத்தூரைப் பாடினவர்கள் இவ்விருவரே. "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூ ரினிதமர்ந்தாய்" என்கிற ஒரு பாசுரமே பெரியாழ்வாருடையது. ஆண்டாளுடையதும் ஒரு பாசுரமே; "மென்னடை யன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூருறைவான்றன்" இத்யாதி. திருமாலிருஞ் சோலையிலே அதிக ஈடுபாடு இவ்விருவர்க்குமாம். அங்குள்ள நூபுர கங்கை யென்னும் சிலம்பாற்றை இவ்விருவருமே பாடினர்; "சிலம்பாறு பாயுந்தென்திருமாலிருஞ் சோலையே" என்றுர் பெரியாழ்வார். *சந்தொடு காரகிலுஞ் சுமந்து தடங்கள் பொருது, வந்திழியுஞ் சிலம்பாறுடை மாலிருஞ் சோலை* என்றுள் கோதை ("சிலம்பியலாறுடைய" என்று பிறகு கலியனும் பாடினர்.) இந்தீரகோபம் என்னும் [வட சொல்லின் திரிபான] சொல்லை இவ்விருவருமே பிரயோகத்தில் கொண்டனர்; அதுதன்னையும் திருமாலிருஞ்சோலைப் பதிகங்களிலேயே இருவரும் கொண்டனர். "இந்திரகோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான் சிந்தும் புறவில் தென்திருமாலிருஞ்சோலை" என்றுர் பெரியாழ்வார். "சிந்துரச் செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும், இந்திரகோபங்களே யெழுந்தும் பரந்திட்டனவால்" என்றுள் ஆண்டாள். இந்திரகோபமாவது பட்டுப்பூச்சி. அதனை எம்பெருமானுடைய திருவதரத்தில் பழுப்புக்கு உவமையாகவே பெரியாழ்வாரும் ஆண்டாளும் அநுஸந்தித்தார்கள்.

10. இன்னமும் கேளீர். தமிழில், பாணித்தல் என்று அபூர்வமாக ஒரு சொல் உண்டு; காலதாமதம் என்பது அதன் பொருள். இச்சொல்லை இவ்விருவருமே பிரயோகத்திற்கொண்டனர். "பாணிக்கவேண்டா நடமின் பண்டன்று பட்டினங்காப்பே" என்பது பெரியாழ்வார் பிரயோகம். "பாணியாது என்னை மருந்து செய்து பண்டுபண்டாக்க வுறுதிராகில்" என்பது ஆண்டாள் பிரயோகம். ஒட்டரா என்பது ஒரு சொல். (ஒட்டம், தரா) என்கிற இரண்டு சொற்கள் ஒன்று சேர்ந்து ஒட்டரா என மருவிற்று. ஓடிவந்து என்பது இதன்பொருள். [செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்.] இச்சொல்லை இவ்விருவருமே பிரயோகத்திற்கொண்டனர். "என்னிடைக்கு ஒட்டரா அச்சோ வச்சோ" என்பது பெரியாழ்வார் திருமொழி. "ஒட்டரா வந்து என் கைப்பற்றி" என்பது நாச்சியார் திருமொழி. தமிழில் குப்பாயம் என்பது ஒரு அபூர்வமான சொல். சட்டையென்பது இதன் பொருள். பெரியாழ்வார்திருமொழியில் "குப்பாயமென நின்று காட்சிதருங்கோவர்த்தன மென்னுங் கொற்றக்குடையே" என்று பிரயோகம். நாச்சியார் திருமொழியில் "போர்த்த முத்தின் குப்பாயப் புகர்மால் யானைக்கன்றே போல்" என்று ஆண்டாளுடையவும் பிரயோகம். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தினுள் இவ்விரண்டிடங்கள் தவிர வேறெங்கும் இச்சொல் காணக்கிடைக்காது.

11. ஒருவரே இருவராக வடிவெடுத்துப் பாசுரம் பேசும் திறன் இவ்விருவர் பக்கலிற் காண்பதாம். ஆழ்வார், *என்னுதன் தேவிக்கு* என்னும் திருமொழியில் இரண்டு

4

கன்னிகைகளின் வடிவைத் தாமொருவர் பூண்டு, கண்ணபிரானைப்பற்றி ஒரு கன்னிகை புகழ்ந்து பேசுவதாகவும் இராமபிரானைப்பற்றி மற்றொரு கன்னிகை புகழ்ந்து பேசுவதாகவும் வைத்துப் பாடினர். *கதிராயிரமிரவி யென்னும் திருமொழியில் 'எம்பெருமானைக் கண்டவர்களுண்டோ?'' என்று கேட்கிற வொருவருடைய பாசுரமாக முன்னடிகளும், 'இன்ன இடத்திலே கண்டதுண்டு' என்று விடை கூறுவார் பாசுரமாகப் பின்னடிகளும் அமையவைத்தார். ஆண்டாளும்* பட்டி மேய்ந்தோர் காரேறு* என்கிற திருமொழியில் *இங்கே போதக்கண்டீரே* என்று கேட்பார் பாசுரமாக முன்னடிகளையும்,* விருந்தாவனத்தே கண்டோமே* என்று விடை கூறுவார் பாசுரமாகப் பின்னடிகளையும் அமைத்திருப்பது காண்க. பிறகு திருமங்கையாழ்வாரும் இங்ஙனே தோழிமார் இருவரின் ஸம்வாதமாக *மானமரு மென்னோக்கி பதிகம் பாடினர்.

12. திருவாய்மொழியில் நம்மாழ்வார் அற்புதமாக ஒரு பாசுரம் அருளிச் செய்கிறார்; அதாவது (5—3—5) *கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்ட வடியன், அறிவரு மேனி மாயத்தன்* இத்யாதி. இதன் பொருளின்பத்தைச் சிறிது விவரிப்போம். ஆழ்வார் ஆண்மை தவிர்ந்து பெண்மையடைந்து பேசும் பாசுரமிது. பராங்குசநாயகியென்று இப்போது ஆழ்வார்க்குத் திருநாமம். இப் பெண்பிள்ளைக்கும் தோழிக்கும் பேச்சு நடந்துவருகிறது. தோழியானவள் இப்பெண்மணியை நோக்கி "பேதாய்! நீ பகவான் பகவானென்று எப்போதும் வாய் வெருவி வீணாக வருந்துகிறாயே; இந்த கஷ்டம் உனக்கு ஏதுக்காக? அவன் குணசாலியாயிருந்தால் அவனிடத்தில் நீ எவ்வளவும் ஈடுபடலாம்; குணஹீநனான அவனிடத்தில் நீ வீணாக ஆசைவைத்துத் தவிப்பது வேண்டாமே'' என்று கூறினளாக, அதற்குப் பராங்குச நாயகி மறுமொழி கூறுகின்றாளிப்பாட்டினால். தோழீ! எம்பெருமானை நான் மஹா குணசாலியென்கிறேன், நீயோ அவனை குணஹீநனென்கிறாய் நான் சொல்லுகிறபடி யன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என் நெஞ்சம் அவனையல்லது அறியாது. அவனிடத்தில் நின்றும் என்னை மீட்பதற்காகவன்றோ நீ அவனை குணஹீநனென்பது. மிகவும் ஸந்தோஷம். குணஹீநனென்பதுபற்றியே அவனை நான் மேல் விழுந்து விரும்புகிறேனென்று திண்ணமாகக் கொள்ளவேணும் நீ; அவனிடத்தில் குணமில்லையென்பதைச் சொல்லவேண்டுமானாலும் தோழீ! நான் சொல்லவேணுமேயல்லாது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டிவைத்தது மாத்திரமேயன்றோ உன் காரியம்; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானேயல்லது நீயல்லையே; அவனிடத்திலுள்ளது தோஷமோ குணமோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே. ஆகையாலே குணமில்லாமையையும் தோஷமுடைமையையும் என் வாயால் நான் சொல்ல நீ கேளாய் என்று பீடிகை போட்டுக்கொண்டு *கடியன் கொடியனென்று தொடங்கி இரண்டடிகளாலே அவனுடைய குணக்கேட்டைச் சொல்லுகிறாள் பராங்குச நாயகி (ஆழ்வார்). சொல்லுகிற குணக்கேடுகள் எவையென்னில்; கேண்மின்;—

[கடியன்] தன் காரியத்தை ஸாதித்துக்கொள்வதிலே கனவேகமுடையவன். அதாவது, தனக்கு விருப்பமுண்டானால் தானேவந்து மேல்விழுந்து விரைந்து கலக்குமவன் என்கை. [கொடியன்] எதிர்த்தலைபடுகிற கஷ்டம் பாராதே கல்நெஞ்சனாய்ப் பிரிந்துபோமவன், [நெடியமால்] மிகவும் பெரியவன் என்பது இச்சொல்லின் பொருள். இதன் கருத்தாவது,

மேல்விழுந்து கலக்கும்போது பிரியவேணுமென்று நினைப்பன். அப்படி அவன் நினைத்ததை யறிந்து 'என்னையனே! பிரியலாகாது பிரியலாகாது' என்று கால்கட்டி விலக்கப் பார்க்கலாமே, அப்படி விலக்குவதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்கவேண்டும்படி திடீரென்று பரத்துவம் பாராட்டி நிற்பவனென்கை [உலகங்கொண்ட வடியன்] பிறருடைமையைத் தனக்காக்கிக்கொள்ள நினைத்தால் பின்னை அவர்களுக்கு ஒன்றும் மிச்சப்படாதபடி பண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன். [அறிவரு மேனி மாயத்தன்] வடிவைக் கண்டால் ஸர்வஸ்வதானம் பண்ணவிருக்கிறானோ? அன்றி ஸர்வஸ்வமும் கொள்ளை கொள்ளவிருக்கிறானோவென்று தெரிந்துகொள்ள முடியாதபடி ஆச்சரியமான தன்மையையுடையவன். அடியேன் குடியேனென்று சில சொல்லி மயக்கிக் கண்ணிலே மணலைத் தூவியோடிப்போமவன். இப்படிப்பட்ட குணக்கேடு களைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவேணும், எனக்கன்றோ மருமம் தெரியும். தோழீ! இவை உன்னாலும் சொல்லமுடியாது. இதற் கென்றே இட்டுப் பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்லமுடியாது இவ்வளவு குணக் கேடுகளையும் நான் அறிந்துவைத்தேயன்றோ இவ்விஷயத்திலீடுபட்டுக் கிடக்கிறது. இவை தோஷங்களேயானாலும் அவனுடைய தோஷங்களாகையாலே அவன் ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களேயென்று என்னெஞ்சு கொள்ளு கின்றது; (அல்லது) கீழ்ச்சொன்ன விசேஷண பூதங்களான குணக்கேடுகளில் நோக்கு இல்லாமே விசேஷ்ய பூதனான அவனை மாத்திரமே என்னெஞ்சு பற்றியிருக்கின்றது. மாயாவாதிகள் "நிர்விசேஷ சிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்று விசேஷண ஸம்பந்த கந்தமுமற்ற விசேஷ்ய அம்சத்தை மாத்திரமே அங்கீகரிக்கிறப்போலே குணமோ குணக்கேடோ ஆகிய விசேஷணாம்சத்தில் கண் செலுத்தாமல் வெறும் விசேஷ்யமான அவனளவில் மாத்திரமே என்னெஞ்சு ஊன்றியிருக்கின்றது என்பதாக [ஆகிலுங் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்கு மெல்லே] என்கிற மூன்றாமடி அமைந்தது

13. இவ்வுலகில் பிறக்கின்றவர்கள் யாவரும் தோஷமே நிரம்பியவர்கள் என்றாவது குணமே நிரம்பியவர்கள் என்றாவது யாரும் சொல்லமுடியாது. உயர்ந்த பதவியில் இருக்கின்ற மஹான்கள் முதற்கொண்டு மிகவும் தாழ்ந்திருப்பவர்கள் வரையில் யாரை யெடுத்துக்கொண்டாலும் ஒவ்வொருவரிடத்திலும் குணங்களும் தோஷங்களும் கலந்திருக்குமே யல்லது பரிபூர்ண குணசாலியாகவும் பரிபூர்ண துஷ்டனாகவும் ஒரு மனிதனையும் காட்டமுடியாது. எவரும் அயலாரை வஞ்சித்து விடலாமானாலும் தம்முடைய ஆத்துமாவைத்தாம் வஞ்சித்து விடமுடியா தாதலால் தம் தம்மிடத்திலுள்ள குணதோஷங்களை உள்ளபடி அவரவர்கள் கட்டாயம் அறிந்தேயிருப்பார்கள் அப்படி யறிந்திருந்தும், உள்ள குணங்களை மிகவும் அதிகப்படுத்திக் காட்டுவதற்கும், உள்ள தோஷங்களை அடியோடு மறைத்துக் கொள்வதற்குமே ஒவ்வொருவரும் முயற்சி செய்வது வழக்கம் அதில் ஸாமான்ய ஜனங்கள் ஏமாந்து போய்விடுவதும் நிபுணர்கள் உண்மையை அறிந்துகொள்வதும் இயல்பு.

14. பொதுவில் ஒவ்வொருவருடைய நோக்கமும் எப்படிப்பட்டதென்றால் நம்மிடத்தில் எல்லாருக்கும் நல்ல மதிப்பு உண்டாகவேணும்; நம்மை நல்ல குணசாலி யென்றே எல்லாரும் கொள்ளவேண்டும்; நம்மிடத்தில் தீமையிருப்பதாக யாரும் கருதக்

கூடாது' என்றே ஆசைகொண்டு அதற்கு ஏற்றாப்போல் நடந்துகொள்வதிலேயே பெரும்பாலும் ஜனங்களின் நோக்கம் காண்கிறது ஞானம், செல்வம், அழகு முதலானவை மிகச்சிறிதளவு இருந்தாலும் அவற்றை மிகவும் அதிகமாகவே காட்டிக் கொள்ள விரும்புவாரும் உண்டு. அவை அதிகமாகவே யிருந்தும் அவற்றை டம்பமாகக் காட்டிக்கொள்ள விரும்பாமல் வெகு அடக்கத்தோடு இருப்பவர்களும் உண்டு. சில பேர்கள் தங்களுடைய நிலைமையை நன்றாகத் தெரிந்துகொண்டு 'நாம் எப்படி குற்றங் களுக்குக் கொள்கலமாக இருக்கிறோமோ இப்படித்தான் உலகில் பலரும் இருக்க நேரிடும்; இவ்வுலகுக்கு இது ஆச்சரியமன்று; ஆதலால் பிறருடைய குற்றங்களைப் பற்றி நாம் கவனிப்பது வேண்டா' என்று கொண்டு பிறரது குற்றங்களில் சிறிதும் புத்தியைச் செலுத்தாமல் தங்கள் காரியத்தோடே நிற்பர்கள் இப்படிப்பட்ட அதிகாரிகள் அதிகமாகத் தேறமாட்டார்கள். நூற்றில் ஒருவர் தேறினால் விசேஷம். 99 பேர்களின் இயல்வு எப்படிப்பட்டதென்றால் தம்முடைய நிலைமையைத் தாம் அடியோடு மறந்து எப்போதும் பிறரைப் பற்றிய பழிப்புரையே போது போக்காக இருப்பதாம். அன்னவர்கள் வாய்கொண்டு பேசத் தொடங்கினாலும் கை கொண்டு எழுதத் தொடங்கினாலும், இன்னாரைப்பற்றி இன்னவிதமாகத்தான் பேசுவர்கள் என்கிற வரம்பு சிறிதும் இராது. ஒன்றுமறியாத மூடர்களை உயரத்தூக்கி வைத்திடவும் புகழ்பெற்ற பெரியோர்களைப் பாதாளத்திலே தள்ளிவிடவும் வல்லவர்களே.

15. சில நபர்களிடத்தில் தூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங் கூட தூஷிக்கும் வழியைக் கனவிலுமறியாமல் பூஷிப்பதே செய்வார் நல்லோர். பூஷிக்க வேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங்கூட தூஷிப்பதையே தொழிலாகக் கொள்வர் தீயோர். எங்கும் தூஷிப்பவர்கள், பலபல மஹான்களால் கொண்டாடப் படுகின்றவர்களைத்தான் தூஷிப்பர்கள். யோக்யதை யில்லாதவர்களை தூஷிப்பதனால் என்ன லாபம்? என்ன த்ருப்தி? அதை யார் கவனிப்பார்கள்? அது பயனற்ற பணியாகுமே. நிறையப்பழங்கள் பழுத்துத் தொங்கப்பெற்ற மரங்களின் மீது கல்லடி தடியடி விழுமேயல்லது மொட்டை மரத்தையும் மலட்டு மரத்தையும் அடிப்பாரார்? அதுபோல் ஞானனுட்டானங்கள் நிரம்பியும், பலவகைகளில் புகழ்பெற்றும், பலரால் வணங்கப் பட்டும் விளங்குகின்ற மஹான்கள்பேரில்தான் தூஷணைகள் ஏற்படுமேயல்லது, 'யாரோ வழிப்போக்கன்' என்னும்படியான ஸாமான்ய ஜனத்தின்மீது பைத்தியக்காரன்கூட தூஷணைகள் செய்ய மனங்கொள்ளமாட்டான். ஆகவே, எந்த நபரின்மீது விசேஷ தூஷணைகள் ஏற்படுகின்றனவோ அதுவே காரணமாக அந்த நபர் மிக்க பெருமை வாய்ந்தவர் என்பது உறுதியாகும். உண்மையில் அவர் பெருமை வாய்ந்தவராக இல்லா விடினும், தூஷணைகள் ஏற்படுவது காரணமாகவே அவர்க்குச் சிறந்த பெருமை அவசியம் ஒப்புக்கொள்ள வேண்டியதே. அமுதனார் அருளிய இராமானுச நூற்றந்தாதியில் "பழிக்கில் புகழ்" என்றது காண்க. இப்பாசுரத்தை விவரித்தயடியே யிது.

16. மஹான்களைப் பிறர் தூஷிப்பதானது உண்மையில் பூஷிப்பதாகவே முடிவு பெறும். அவர்களுடைய கீர்த்தி எங்கும் நன்றாகப் பரவுவதற்கு தூஷணைகளே பெரிய கருவியாகும். பூஷிப்பது ஒரு மூலையில் அடங்கிப்போகும். தூஷிப்பதுதான் உலக மெல்லாம் பரவும். பாகவத தூஷணையாக ஒரு புத்தகம் வெளிவந்தால் அது எத்தனை பக்கமாயிருந்தாலும் எவ்வளவு வேலையிருந்தாலும் விட்டிட்டு வெகுரஸமாக வாசிக்க ருசியுண்டாகும், மெய்ஞ்ஞான விளக்கம்' என்று ஒன்று வெளிவந்தால் அது நாலே பக்கமாயிருந்தாலும் வாசிக்கத் தொடங்கும்போதே கண்ணுறக்கமதாகும். உலகப் போக்கு இது. ... ... ... ... ... ...

பதினாறு நன்மொழிகள் முற்றுப்பெற்றன.

shall be liable for the fine that may be imposed by the Sirkar. Thus is the Kararnama executed by us with our free will.

19th Feb. 1809. (Signed) Kumaratatachariar.

" Tirumala Sundaravaradatatacharyulu.

இதில் ஷெ தேவஸ்தானத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரம்தான் நீண்டகால வழக்க மென்றும், ராமானுஜ தயாபாத்திர தனியன் எக்காலத்திலும் வழங்கியதில்லையென்றும், வழக்கத்திற்கு விரோதமாக நடந்துகொண்டால், அல்லது நடத்திவைத்தால் சர்க்காரால் ஏற்படுத்தப்படும் தண்டனைக்கு உள்ளாகக் கடவோமென்று ஒப்புக்கொண்டதாகவும் சில தாதாசார்யர்களே சர்க்காருக்கு உடன்படிக்கை எழுதிக் கொடுத்திருக்கிறார்கள்.

இது விஷயமாய் நேர்ந்த கிளர்ச்சிகளும், உடன்படிக்கைகளும், வியாஜ்ஜியங்களும், தண்டனைகளும் அபரிமிதமாக உள்ளன. இத்தகைய ரிகார்டுகளை ஆதாரமாகக்கொண்டே A. S. No. 175 of 1910ல் ஹைகோர்ட்டில் கனம் ஸ்ரீ. சங்கரநாயர் அவர்களால் தீர்ப்பு கூறப்பட்டிருக்கிறது. ஆக, தாததேசிக குடும்பஸ்தர்களின் பிரபாவம் ஸ்ரீ ராமாயண பாரதாதிகள் போலே மிகவும் விரிவாக விளக்கவேண்டியதேயாகும். ஹிண்டு பேப்பரில் ஒரு வருஷகாலம் தொடர்ச்சியாக வெளியிடுவதற்குப் போதுமான விஷயங்களுண்டு. தற்காலம் இவ்வளவோடு நிற்கிறேன். ... ... *

## —உபஸம்ஹாரம்—

இவ்வாராய்ச்சி வியாஸத்தில் இன்னும் பல பல தத்துவங்கள் தெரிவிக்கப்படவேண்டியவையுண்டு. தற்காலம் ஸம்க்ஷேபமாகத் தெரிவித்தபடி. முடிவில் முக்கியமாக இரண்டு விஷயங்களைத் தெரிவித்து இதனை முடிக்கிறேன்.

(1) இந்த தேவஸ்தானத்தில் ஆழ்வாராசாரியர்களின் வருஷத் திருநக்ஷத்ர பரிபாலனங்களை தாதாசாரியர்கள் அறவே நிறுத்தியிருந்தார்களென்பதும், ஸ்கீம்ஸூட் தொடுத்த தென்கலையார்களின் விடா முயற்சியினால்தான் 25 வருஷகாலமாக அவ்வாழ்வாராசாரியர்களுக்கு நல்லகாலம் பிறந்ததென்றும் கீழே விரிவாக நிரூபிக்கப்பட்டது. நம்மாழ்வார், உடையவர், வேதாந்ததேசிகர், மணவாளமாமுனிகள், திருக்கச்சி நம்பிகள், கூரத்தாழ்வான் ஆகிய ஆறு திருநாமங்களின் சாத்துமுறைக்குமட்டுமே தேவப்பெருமாள் அவரவர்களின் ஸன்னிதிகளுக்கெழுந்தருளித் திருவோலக்கம் நடப்பது புராதன வழக்கம். மற்றுள்ள ஆழ்வாராசாரியர்களின் சாத்துமுறை தினங்களில் அவரவர்கள் பெருமாள் ஸன்னிதிக்கெழுந்தருளி ஸேவை சாத்துமுறை நடந்து மரியாதைபெற்றுத் திரும்பி யெழுந்தருள்வதும் மாமூல் வழக்கம். இப்போது இருபதாண்டுகளாக நடைபெற்றுவருகிற வழக்கம் யாவரும் காண்பதே. ஸகல ஆழ்வாராசாரியர்களுக்கும் பெருமாளெழுந்தருளி விசேஷ மஹோத்ஸவம் நடந்து வருகிறது. ஸேனை முதலியார் திருநக்ஷத்திரத்திற்கு ஒருநாளுமில்லாத விசேஷோத்ஸவமும் நடந்துவருகிறது. இந்த நூதன மஹோத்ஸவங்களெல்லாம் 75 ரூ: 100 ரூ. திட்டத்தில் நடக்க உபயக்காரர்களை யேற்படுத்தப் பெருமுயற்சி கொண்டவர்கள் தாதாசாரியர்களும் வடகலையார்களுமே. மணவாளமாமுனிகளுக்குமட்டும் விசேஷமல்ல; எல்லா ஆழ்வாராசாரியர்களுக்குமுள்ளதே என்று காட்டுவதற்காகவே இந்த முயற்சி. மணவாள மாமுனிகளோ அவரடியார்களோ மிக மிக உகப்பதே இது. ஸ்ரீ ராமாயணத்தின் ஸாரமாக ஒரு சுலோக முண்டு;—"ஸுந்தரீ ரகுநாதஸ்ய ஸுரஸ்த்ரீ துக்கசாந்தயே, தசாநல்ய பவநே தச மாஸாநுவாஸ ஹ" என்பதாக. இதன் பொருளாவது, தேவமாதர்களின் சிறையை விடுவிக்கைக்காக ஸீதாபிராட்டி தான் இலங்கையில் பத்துமாதம் சிறையிருந்தாளென்பது. இதேபோல, மணவாளமாமுனிகள் மற்றுள்ள எல்லா ஆழ்வாராசாரியர்களுடையவும் நன்மையைக் கோரியே தாம் சில பல

வாண்டுகள் நன்மை யிழந்திருந்தார். இப்போது தாம் பரிபூர்ண மனோரதராயினர்: மாமுனிகளுக்குமட்டுமே உத்ஸவாதிகள் நடைபெற வேணுமென்று யாரும் கோரியிருந்ததில்லை.

(2) இந்த தேவஸ்தானத்தில் நாலாயிர திவ்யப்பிரபந்த ஸேவையுடன் பத்துநாள் மஹோத்ஸவம் நடைபெறுவது நம்மாழ்வார், மதுரகவிகள், ஸ்ரீமந் நாதமுனிகள், எம்பெருமானார், மணவாள மாமுனிகள் ஆக ஐவர்க்கே; இவற்றுக்கு தேவஸ்தான திட்டம் விசேஷமாகவுண்டு. இவ்வைவருள்ளும் விசேஷ விபவமாக நடைபெறுவது மணவாள மாமுனிகளொருவர்க்கே யென்பது ஜகத்ப்ரஸித்தம். இந்த தேவஸ்தானத்திலிருந்து சில வருஷங்களாக ஆண்டுதோறும் உத்ஸவங்களின் ஜாபிதாவாக ஒரு சிறு புத்தகம் அச்சிட்டு வெளியிடப்படுகிறது. இதை வெளியிடவேண்டிய பொறுப்பு எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியினுடையது. அவர் ஸ்மார்த்தராக இருப்பதால் நாமகார்த்த டிரஸ்டிகளான இரு தாதாசாரியர்களின் உதவியை நாடுகிறார்போலும். அவர்களுக்கு ஆழ்வாராசாரியர்களிடத்திலுள்ள பகை நாபிவரையில் நிரம்பி ஊறியிருப்பதாலும், இதன் பலனை அநுபவித்துக்கொண்டே யிருந்தும் மருந்தில்லா வியாதியான மாச்சரியத்தை மாய்த்துக்கொள்ள முடியாமையாலும், நம்மாழ்வார் மதுரகவிகள் நாதமுனிகள் உடையவர் மணவாள மாமுனிகட்கு சாத்துமுறைமட்டுமே நடப்பதாகவும், தேசிகருக்கும் தாததேசிகருக்கும் பத்துநாளுத்ஸவம் நடைபெறுவதாகவும் அச்சிட்டு வருவதை அறியாதாரில்லை.மேற்சொன்னஜாபிதாவில் உத்ஸவங்கள் பெரும்பாலும் மாறுபாடாகவே அச்சிடப்பட்டுவருவதால் அந்த அபத்த பஞ்சாங்கத்திற்கு இது தலையான அபத்தம். அதிஸமீபத்தில் நிகழ்ந்த திருமங்கையாழ்வார் சாத்துமுறை, திருக்கார்த்திகை, திருப்பாணாழ்வார் சாத்துமுறை முதலானவற்றை மேற்சொன்ன ஜாபிதாவில் எவ்வளவு தலைகீழாக அச்சிட்டிருக்கிறதென்பதை மத்யஸ்தர்கள் கவனித்தால் இது அபத்த பஞ்சாங்கமே யென்பதைத் தாராளமாக ஏற்றுக்கொள்வார்கள். இத்தகைய அபத்தங்களின் அபிவிருத்திக்காகவே தாதாசாரியர் இருவர் நாமகார்த்த டிரஸ்டியாக இருந்து வருகிறார்களென்று உணர்க.

இந்த வியாஸத்தை ஒருவாறு தழுவியும், இன்னும் அனேக விஷயங்களைச் சேர்த்தும் என்னுடைய பெரிய மாப்பிள்ளை ஸ்ரீ உவே. வித்வான் T.A.ஸம்பத்குமாராசாரியர்M.A. எழுதியுள்ள ஆங்கில வியாஸமும் மஹான்களுக்கு விருந்தாகும். ... ...

இப்படிக்கு

**P. B. அண்ணங்கராசாரியர்.**

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது ஸ்ரீ ராமாநுஜ பத்ரிகையின் ஆசிரியரான ஸ்ரீ உ. வே. P. B. A. ஸ்வாமிகள் திருப்பாவை யுபந்யாஸத்தை யுத்தேசித்து நிகழும் மார்கழி-மீ பூராவும் சென்னைமாநகரில் எழுந்தருளி யிருப்பதால் ஸ்வாமிக்குத் தற்கால விலாஸம் கீழ்க்கண்டவாறு :—

**P. B. ANNANGARACHARYA**

**48, Govindappa Naicken Street,**

**MADRAS—1**

# THE KANCHIPURAM DEVARAJASWAMI TEMPLE AND THE TATACHARIS.

An article under the heading "Sri Lakshmikumara Tatadesika, written by Sri R. Varada Tatachari, is published in the *The Hindu*, dated 29—11—1964. As it is full of incorrect and misleading statements, which go against well-established judicial records, we shall now try to acquaint the general public with the actual state of affairs, as proved by unquestionable documents.

1. The birth-place of Tata Desika is a village called "Yetur"; as is established in many records and by his surname "Yeturimmadi" which is found in an agreement executed in the year 1711. So it is wrong to make Kumbakonam, his birth-place. To say that the sage SATHAMARSHANA was born as saint NAMMALWAR is against all established facts. Nobody has, till now, made such a statement, anywhere. So is, the statement, that Tirukkurugaippiran Pillan was the son of Sri Thirumalai Nambi. Sri Vedantacharya specifically mentions in his Guruparamparasara, that Sri Thirumalai Nambi had only two daughters (and no male issue). So Pillan has no connection with Tirumalai Nambi. Sri Ramanuja directed Pillan to write a short gloss on the Tiruvoimoli, but it is wrong to say that he bestowed on the latter, the sole right to expound either the Prabandhas or Sri Bhashya. No biographer of Sri Vedantha Desika has made mention of any such person, such as Thirumalai Sreenivasacharya, as the chief disciple of Desika. The statement that the trusteeship of Sri Devaraja Swamy Temple was conferred on him by Sri Desika, is a mere fiction, as there is no record to prove it. In fact, the Thathachari family acquired management of the temple just in the year 1842- The hundred-pillared Mantapam bears Tenkalai Namams from the very foundation to the top, and so, it cannot have been constructed by a Vadakalai. To say that a temple for Sri Rama was built at Iyengar-Kulam is the most blatant lie, as no such thing exists there. There is but a Hanuman temple. To say that he prepared all the costly jewels for Sri Devaraja. is also false, because the majority of the more important jewels were made by Athan Jeeyar, Alagia Manavala Jeer, Venkatadri Swami, Karanai P.B. Ananthacharya Swami, etc., and are even today bearing their names. These are some of the glaring untruths expressed in the said article.

2. Now we shall give a picture of the origin of the connection of the Thathacharis, with this temple, as established by unimpeachable records. It would appear that in the beginning, the management of the temple was in the hands of the "STHALATTARS", comprising of the Archakas, Paricharakas, Swayampaki, Mudaliars, Kanakupillai, etc., but not the Thathacharis. But during the times of the Mohammedan invasion, the temple was closed and the "Uthsava

Vigraha" taken away from the place. It was one Athan Jeer, a Tenkalai Sanyasi, who, with the help of his disciple, Lala Todurmalji, brought the vigraha back from "Udayarpalayam", and got it consecrated. In return for this yeoman service, the Sthalattars, referred to above, conferred the right of management of the temple upon Todurmulji, who transferred it to his Guru, Athan Jeer. The latter and the successive generations managed it well, for a long time. In 1711, Sri Lakshmi Kumara Thathachari was allowed to receive the "Agra thambulam", i. e. he was made the first "Theerthakara", because he was a learned person and Rajaguru of the Vijayanagaram royal family, and certain benefits to the temple, were expected of him. But he had to execute an agreement to the said Jeer, affirming that he would honour the Tenkalai Mamool, and venerate the great Tenkalai Acharya, Sri Varavara Muni by reciting his manthra "Sri Sailesadayapatram —" not only in the temple. but also in his own private house and those of the temple servants. The Thathachari was only made the first Thirthakarar and and not the trustee, which office, was still vested in the Jeer. Even at that time, there were several other Thirthakarars, exclusively all Tenkalais who held those rights from several centuries ago. It would appear that at some later date, the management came to the hands of the Government, who handed it over, in 1842 to one Thathachari who was a learned man of status and of course, the first Thirthakar. Thus, the management came to the hands of and was in the possession of the Thathacharis for 65 years, until a scheme suit was filed in the court, against them in 1917 and a receiver was appointed. There have been many changes in the scheme later on and the present position is that a non-Sri Vaishnava Brahmin is appointed as an executive trustee and two Thathacharis as honorary trustees.

3. It is funny indeed, to hear the writer speaking in glowing terms about the greatness of Alwars Prabandams, Ubhaya-vedanta and so on, while, in his heart of hearts, he and his people have the greatest contempt for all these. Here is the proof for the same. This same writer, Sri R. Varatha Thathachari, filed a written statement in O. S. No. 17 of 1945 (before the Sub Judge of Chingleput), in which he stated — "These Tamil prabandams, being primarily intended only for non-brahmins and females, who are not familiar with Sanskrit Vedas. the Vadakalai Thathachariars parted with their right to Tamil Prabandam office, in favour of one Athan Jeer, a Tenkalai gentlemen." This statement needs no explanation. Commenting upon it Mr. Shumshudeen, sub-judge, writes in his judgement, "This statement by the parties to the suit, who support the plaintiff in the recent times, would show the contempt, in which they hold prabandams in Tamil—One is struck by the unique claim of the Vadakalais to recite Tamil Prabandam." While, in their hearts of hearts, they thus despise the Alwars and their "Divya prabandas", they are second to none in shouting, at the top of their voice, that the Alwars and their prabandams are very great and sacred !

4. At the Kancheepuram temple, the Thathacharis have discredited the Alwars and their prabandas in the most savage manner. They stopped their poojas, monthly and annual festivals and even the famous "Adhyayana utsavam" of the Lord, just because, they did not like to honour the Alwars. The criterion, which distinguishes a Srivaishnavite temple from others, is the celebration of these Uthsavams but the Thathacharis cared not a jot for it, all because, they despised the Alwars. Some fortyfive years ago, when, during the "Tiruvadippuram" (Birthday of Andal), festival, Sri Periyalwar was honoured with Parivattam, etc., one Paiyakannu Thathachari, who was trustee at that time, forcibly prevented the honour, because, a few days before, he had filed a statement in the court, stating," In this temple no Utsavam is ever held for any Alwar, and no honours are ever done to any of them." Similarly he discredited Thiruppanalwar, on another occasion. Another trustee, Sri Sonam Thathachari, once stopped the Dwadasaradhanam of the Lord during the Brahmotsavam, just because Thiruvoymoli of Nammalwar was going to be sung at that time! Thousands had gathered, eagerly awaiting to witness the great utsavam. But the said trustee, quite unexpeetedly, ordered the Archakas, through the Maniyakar, to take the Lord to the Kannadi Arai and cancel the Dwadasaradhanam, an integral part of the Brahmotsavam. For this, he was ordered to pay a fine of Rupees two hundred out of his pocket and had actually to beg in the streets, to procure the sum.

5. We now publish an extract from the agreement of 1711 mentioned in para 1, which has been filed as exhibit A in A. S. No. 175 of 1910.

"Sreemathe Ramanujaya namaha"

Odambadikka (agreement) executed on the 18th day of Chitrai Month of the current Khara year, being the 1633rd year of Swasti Sri Vijayabhudaya Sali Vahana Sakam and 4812 of the Kali yuga and 24th after Prabhava, to Srimat veda marga pratishtapana Acharyobaya ... Athan Thiruvenkata Ramanuja Jeeyangar, Sakala Sri Karyadhurandharalu of the Sannidhi of Sri ... ... Davarajaswami of ... ... Kanchi ... ... by Srimat ... ... Yeturumbadi Lakshmi Kumara Thirumala Thathacharyulu, in the presence of Maharaja Rajasry Lala Thondarmul Srinivasa dasagaru is to the following effect:– We shall, as has been done under existing mamul for a very long time of beginning with "Srisylesa dayapathram" (Srisailesathayapatram Thodangi) for Divya Prabandham Thodakkam (at the commencement of the recital of the prabandam) during Nithya Niyamithika Varashochavams daily, periodical and yearly Uchavams in Sri Devaraja Swami and other 18 Divya Dhesulu (temples), in the Sanidhis (temple) of Nammalwar and all other Alwar Acharyalu, and in those of Srimath Thirukkachi Nambi, Koorathalwan, Velakkadi Emberuman and that of Vedantacharyulu Varu, situated in front of the Sannidhi Gopuram (temple tower) and then of performing all Uthsavams, get Srisailesathayapatram commenced as at the Koil (temple), by Sriramaiyengar in our Thirumaliga (house) and then perform al

Uthsavams: Besides this, I shall get Srisailesa thayapatram commenced, as at the koil by Sriramaiyengar at the auspicious and inauspicious ceremonies in the Thirumaligais (house) of our people ... ... and all servants, as is done in the koil, and we shall get our maryada such as Agra Tamboolam (first betal nut) done to us. To this effect is the Odambadikkai got executed and delivered with consent, in Nammalwar Sannidhi.

6. The most important fact that is to be noted in this is, that it is not a mutual agreement, but only an one-sided one, executed by the Thathachari, binding himself to good behaviour towards the temple in general and to continue the various modes of workship with all their details, in strict accordance with hoary custom. It has been expressly agreed that the poojas and festivals in all the 18 temples of Kanchi, including their subordinate shrines would be properly conducted. The most important factor is, that the Tenkalai mode of workship should be continued to be strictly adhered to, in all these places. Athan Jeeyar is herein stated as the Sakala Srikarya Dhurandara, or the sole manager. This explodes the myth that the Thathacharis were made the managers by Sri Vedanta Desika himself. The title Koti Kanyakadanam is also conspicuous, by its absence. Be it as it may; we are not, at present, much concerned with this title. The one point that is proved beyond doubt is, that the Thathacharis were connected with this temple, as first Thirthakaras, (and certainly not as trustees) in the year 1711.

7. The Thathacharis held the honour in all these temples, as also in mofussil ones, like that at Sriperumbudur, for quite a long time and would have continued to do so even to-day, had they not gone against the letter and spirit of the abovesaid agreement. They began to dis-respect the great Sri Vaishnava Acharya, Sri Manavalamamunigal and his sacred prayer, Sri Sailesadayapatram. But, when once they began to play their dirty game, they lost their honours in all the other temples, except that of Sri Devaraja Swami, because, they had become the trustees of the same, by that time. This fact has been specially mentioned by the late Sri V. Krishnaswamy Iyer, Judge of the Madras High Court, in the Sriperumbudur case, where he says, " By-the-way, I may remark that the Tathacharis had to lose their honours in this temple, just because they departed from the custom of their ancestors and tried to recite a new verse, as against the ancient Srisailesadayapatram."

8. The said agreement also explodes the myth, often given expression to, by the Tatacharis (vide para 3 above) that their forefathers conferred upon Athan Jeer, the right to recite the verse, Srisailesadayapatram. Of-course, even in that case, they were bound to honour the agreement. But the actual fact is, that the said prayer was being sung in the temple from olden times and the said Tatachari had pledged

to honour and continue the practice. But, unfortunately they lent their ears to malicious advice and began, not only to disrespect the great Acharya, Sri Varavara-muni, and his mantra, but also to tease the Tenkalai Srivaishnavas, who hold many rights and miras in the temple, such as Adhyapakam (chanting of the Divya Prabandhams), Thirtham and so on. In short, they tried their level best to oust these people out of the temple, but thanks to Divine Grace, they have not been successful in their nefarious activities. They destroyed many ancient Tenkalai Namams, introduced many new ones, stopped the honours of the Tirthakars, the Adhyapaka and others, hindered the pujas and festivals of Nammalwar and Manavala Mamunigal, carried away the idols of these Acharyas, tried to change their namams or destroy them out-right and did a thousand and one other evil things, which are too numerous to mention.

9. In this connection we like to quote an extract from the judgement of a court, which is self-explanatory.

In the Court of the additional Dt. Munsiff of Chingleput

O. S. Nos. 6&7 of 1912

Present:— M. R. Ry. R. V. Krishna Ayyar M. A. B. L.,
Additional Dt. Munsiff

Monday 31—8—1914.

" In this connection, the facts which immediately gave rise to and culminated in this litigation become pretty important ... ... ... ... ; The plaintiff's case is that at a time, when the outer gates of the temple were closed for the purpose of restraining a temple elephant which had gone mad, the Vadagalais forcibly entered the suit shrine and carried away the Utsavar Idols of Nammalwar and his attendants with a view to alter their namams. The defendants, on the otherhand, state that in connection with Pagalpathu festival ... ... ... ... it was usual to take Nammalwar idols up the hill every year and that it was in accordance with the custom, and not for any sinister purpose that the idols were removed from the suit shrine ... ... ... ... . The parties have consequently adduced a very considerable body of evidence in respect of the events of the 27th of December, 1908 and the following days.

It appears to me to be unnecessary to discuss this evidence at length, and I will content myself with stating a few facts established by it.

There were immediately complaints by the plaintiffs to the Police and Magistrate against the Vadagalais whose motives were then and there attacked as improper. The police forth-with appeared on the scene with Sub-Inspector Neela-kanta Iyer, P. W. 1, at their head. Neelakanta Iyer discovered the idols in the uphill- shrine and on the same day, drew up the Mahazar, Exhibit A, in the presence

of the Vadagalai Receiver and several others. In that mahazar, there is referen ce to the fact that, though the idols, for the time being, wore Vadagalai Namams, yet, when washed out and inspected they contained doubtful Thengalai traces. As regards the plaintiff's complaint to the Magistrate, it ended in the conviction of several of the Vadagalais, Exhibit N. One of the grounds on which the conviction was upheld on appeal was, that the vehicle called Tholukkinian on which, if the idols had been removed in connection with the festival they must have been carried, was found on inspection, to have been totally unused. Now all thses facts, the immediacy of the Plaintiff's complaints, the alleged Thengalai traces on the idols, the unused character of the Tholukkinian, greatly probablise the plaintiff's version of a forcible removal.

Side by side with these facts there is also the incredibility of the justification, attempted by the Defendants for the removal of the idols in question. From exibits L, EE, GG and RR and from the oral evidence in the case, it is clear that, for long years, the Alwars and Acharyars have never taken part in the Pagalpattu festival at Conjeeveram. As regards the suit year itself, the receiver had admittedly not given any permision to carry the idols up hill. It is therefore impossible to suppose that the Defendants' removal of the idols from the Nammalwar shrine was a bonafide act, done in the ordinary course of the Pagalpathu festival.

On 28—12—1908 the idols were restored to the suit shrine by an order of the stationery Sub-Magistrate of Conjeeveram.

But the police continued to guard the shrine until 6—1—1909. On that day, the shrine itself was handed over to the Plaintiffs and a mahazar, Exhibit T, was drawn up. In that mahazar it is stated that the Moolavar of the Nammazhwar had clearly visible Thenkalai Namam on his forehead, that Thenkalai Namams were also found on various articles and vessels within the shrine and on the Brindavanam opposite to it and that the namams of Mathurakavi and Nathamuni were not clearly visible. It is agreed, by the way, that Mathurakavi and Nathamuni could not have namams different from what Nammalwar wore.

* * * * * *

It is unnecessary to discuss the Namam question further.

From all the facts and the circumstances of the case, it is conclusively established that the namams customarily worn by Nammalwar and his attendant deities were only Thengalai namams and not Vadagalai namams."

10. With regard to the stoppage of Utsavams to Alwars and Acharyas, also, the late Justice T. M. Swaminatha Iyer of the Madras High Court, observes in S.A. Nos. 137, 138 and 2691 of 1902, "It is also clear that seeing how strange and unsound the theory that Manavala Mamuni is not entitled to any procession will

look, when the other Alwars and Acharayas have such processions, the plaintiffs (Vadakalai Thathachar trustees) have evidently thought it best to stop such processions to all, for the present." Strange is the policy of these people, who in practice, obstruct the poojas and festivals of the Alwars and Acharyas, but nevertheless try to earn name and material benefit for themselves, by singing their praise and prolaiming themselves as their earnest followers!

11. The cruelty to which the shrine of Manavala Mamunigal was put to, during the Thathacharis' regime, is beyond description. They tried to stop all the utsavams, nay, even the erection of a pandal in front of the shrine, during the annual festival and stopped the usual procession of Shri Perumdevi Thayar, during this period, for the simple reason, that it has to pass in front of this shrine. They also tried their utmost to stop the procession of Manavala Mamunigal, even just within the limits of the pandal. One Bundi Thathachari, who was trustee, came to the place on one such occassion and pushed aside, the Tholukkiniyan (Palanquin) of Sri. Varavaramuni, although he was under pollution, because of the death of a relative.

12. The culmination of these crimes lay in the theft of the Utsava Vigraham of Manavala Mamunigal, which was thrown into the Pothamarai, the pond near the eastern gate of the temple. When the matter was taken to the court, one Thiruppu-kuli Appaswami, a very learned and famous Thathachari Vidwan, deposed before the judge, "in this shrine of Manavala Mamunigal, there has been only a moola-vigraham and no utsava vigraham has ever existed. I am prepared to make an Aghora Pramanam (the most terrible swearing) and thereby prove this fact." The judge was shocked to hear such a glaring lie from the lips of such a great pandit and immediately ordered him to vacate his chair. (Out of respect to his great learning, the judge had given him a seat during his examination). Later on, this pundit repented for his crime, came to the shrine of Manavala Mamunigal, prostrated before him 12 times, calling it a Sukritha Pranama, and prayed for mercy.

13. Similarly the troubles and tribulations, which the Tenkalai Adhyapakas were put to, during the Thathachari regime are all, beyond description. Contrary to the agreement of 1711, they began to recite a rival verse, "Ramanuja Dayapatram" while commencing the recital of Divya Prapandams. This forced the Tenkalai Adhyapakas to go to the Civil and Criminal courts and an endless string of litigations ensued. The lower courts had held that they could not poke their nose into this matter, which is entirely a religious one and the state was bent upon keeping aloof from it. Of course, some intermediate courts had remarked that the trustees, who were responsible for the maintenance of the temple, could not infringe upon the rights of any mirasdar, unless it was absolutely necessary to do so, in the cause of justice. But the High Court upheld the theory of the state's non-interference with religion. So, the case was taken to the Privy Council, where it was decided in favour of the Tenkalais with the remarks " the Adhyapaka Miras, is not entirely a religious matter, but an office of profit, held by the Thenkalai Sri Vaishnavas. Therefore, it is the bounden duty of the state to protect that right." Thus the case was remanded to the lower court for proper enquiry and orders on 22—3—1879, with a cost of £ 140–13–4.

14. When the case was thus taken up at the lower court, the Thathacharis filed their answer thus " The Adhyapaka miras is held by just four or five members and not by the whole Thenkalai community, of Kanchipuram: Even this service is limited to the main temple. and that during certain occasions only, and does not extend to the attached shrines. The remuneration they get for this, is almost negligible. Moreover, we have already dismissed them." After passing through various stages, this case was decided thus— " The Adhyapaka miras in the Sri Devaraya swami temple with all the attached shrines, including the one at Vilakkoli perumal and Vedanta Desika, belongs to the Thenkalai Srivaishnava community in general; the recitation should begin with Srisailesadayapatram. Vadakalai Srivaishnavas may, if they so desire, join this Goshti in their individual capacity and recite the Prabandams, strictly in chorus with the mirasdars; even then, they cannot go in the front two lines, but only from the third, onwards." But still, now and then certain vadakalai people began to enter the Adhyapaka Gosthi and cause all kinds of obstruction to the proper recitation of the Divya Prabandams. This, naturally, led into several Civil and criminal litigations, which resulted in the conviction of intruders. So, they had filed a suit in the District Munsiff's court of Kanchipuram, praying that (1) They (Vadakalais) should also be permitted to mix in the Adhyapaka Ghosti, even in the prohibited front rows, (2) that no other Taniyan except " Srisailesadayapatram and no Valithirunamam, Upadesaratnamala or Thiruvoimozhi Noothandadi should be recited, and (3) the practice of the Thenkalais of reciting the Divya Prabandams and thereby obstructing the other services on each and every occasion, should be put an end to, by fixing a definite time for their service. After passing through several course this was taken up by the High Court where these prayers were summarily dismissed by the court, which passed orders thus— (1) the Vadakalais should not enter the first two rows of the Divyaprabanda Ghosti (2) The Thenkalais can recite all the usual tanians, Valithirunamam, Upadesaratnamala etc. as per custom and (3) the time for Divyaprabandasevai is co-extent with that of the pooja i. e. from the ringing of the initial bell, right up to the distribution of thirtham and prasadam. This is the essence of the High Court judgement delivered on 13—9—1938.

15. As already stated above, the Thathacharis were made the Thirthakaras in all the temples of Kancheepuram and some outside places too. But they lost the honours, because they began to dis-respect and go against the established custom. As if, to take revenge upon this, they tried to stop the honours and services of other Thenkalai thirthakaras and Kainkarya Parars of the Sri Devarajaswami temple, of which they had become trustees. So every one of the Thenkalai thirthakaras and kainkaryaparas had to go to the courts and establish their rights afresh. This cost both the parties lots of money; but the Thathacharis did not spend a pie from their pocket, but spent cart-loads of money from the Davasthanam funds; and often made some profit also. The money thus mis-used would have been sufficient to build quite a number of new temples, with all the usual paraphernalia! In fact, they have been raising up some trouble or other, incessantly, for the last hundred years and more, and driving others to the court.

16. It is not possible, to describe in such a short essay as this, the full history of all these litigations and mis-deeds of the Tatacharis. They have been published on various occasions. This is, but a very short synopsis of these books and articles. It is proposed to bring out, in the near future, a legal documentary book-let explaining these matters connectedly and vividly.

ஸ்ரீரஸ்து.

श्रीहस्तिशैलशिखरोज्वलपारिजाताय नमः

॥ अस्मद्गुरुपरम्पराभ्यो नमः ॥

ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு பணித்த

# 1. ஷோடசாயுத ஸ்தோத்ரமும்
# 2. தயாசதகமும்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

வியாக்கியானத்துடன் கூடியவை

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

கிடைக்குமிடம் :

P. B. ANNANGARACHARYA

*GRANTHAMALA OFFICE*

L. KANCHEEPURAM

விலை மூன்று ரூபாய்

1964—65

# ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரால்

இதுகாறும் எழுதியச்சிட்டப்பட்டு வெளிவந்த
வியாக்கியான ஸநாத தேசிக ஸ்தோத்ரங்கள்

1. ஹயக்ரீவஸ்தோத்ரம்
2. பரமார்த்தஸ்துதி
3. கோதாஸ்துதி
4. ந்யாஸதசகம்
5. வைராக்யபஞ்சகம்
6. (தேசிகமங்களம்)
7. பகவத்த்யாந ஸோபாநம்
8. தசாவதாரஸ்தோத்ரம்
9. யதோக்தகாரிஸ்தோத்ரம்
10. அஷ்டபுஜாஷ்டகம்
11. காமாஸிகாஷ்டகம்
12. சரணாகதிதீபிகை
13. ஷோடசாயுதஸ்தோத்ரம்
14. தயாசதகம்

## இதராசார்ய ஸ்தோத்ரங்களின் வியாக்கியானங்கள்

1. முகுந்தமாலை
2. ஸ்தோத்ர ரத்னம்
3. சதுச்ச்லோகி
4. தேவராஜாஷ்டகம்
5. கத்யத்ரயம்
6. பஞ்சஸ்தவங்கள் 5
7. ஸ்ரீ ஸுதர்சந சதகம்
8. ஸ்ரீ ரங்கராஜஸ்தவம்—பூர்வசதகம்
9. „ உத்தரசதகம்
10. ஸ்ரீ குணரத்நகோசம்
11. யதிராஜவிம்சதி
12. வரவரமுநிசதகம்
13. வரவரமுநி திநசர்யாத்வயம்
14. ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்
15. ஸ்ரீ ரங்கநாதஸ்தோத்ரம்
16. நக்ஷத்ரமாலிகை
17. க்ஷமாஷோடசி
18. அஷ்டச்லோகி (பட்டர்)

கிடைக்குமிடம் :

**P. B. அண்ணங்கராசாரியார்**

க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்

॥ श्रीरस्तु ॥

श्रीहस्तिशैलशिखरोज्ज्वलपारिजाताय नमः ।
भगवते सुदर्शनाय हेतिराजाय नमः ।
श्रीमते निगमान्तमहागुरवे नमः ।

श्रीमान् वेङ्कटनाथार्यैः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे संनिधत्तां सदा हृदि ॥

ஸ்ரீமந்நிகமாந்த மஹாசார்யனருளிச்செய்த

# ஷோடசாயுதஸ்தோத்ரம்

## ॥ षोडशायुधस्तोत्रम् ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரெழுதிய
ஹேதிராஜப்ரஹர்ஷிணி வியாக்கியானத்துடன் கூடியது.

त्रय्यन्तसूरिरचितां षोडशहेतिस्तुतिं समृद्धार्थाम् ।
व्याख्याति वादिभयकृद्दासस्त्वण्णङ्करार्य इह भक्त्या ॥

अनाघ्रातदोषां गुणस्तोमजुष्टां महिष्ठां महाविद्वदुत्तंसनीयाम् ।
स्वयं देशिकेन्द्रो दयालुः कराग्रे स्थितस्सन् सृजत्याशु टीकामनर्घाम् ॥

वेदान्तदेशिककृतस्तुतिरत्नटीकाः कामं लिखन्तु कतिचित्पथिकाः प्रयासैः ।
मद्धस्तजा स्सुविशदा विवृतीर्विनाऽन्याः कस्यापि नैव नयनाध्वनि संपतेयुः ॥

### வியாக்கியான அவதாரிகை

சததூஷணீ ந்யாய ஸித்தாஞ்ஜந தத்வ முக்தாகலாபாதி திவ்யக்ரந்த ரத்னங்களாலே வேதாந்த தத்வார்த்தங்களைப் பரமகருணையோடு வெளியிட்டருளின ஸ்வாமி வேதாந்தவாசிரியர் சாஸ்த்ர பரிச்ரமாலஸர்களான கோமலமதிகளையும் அநுக்ரஹிக்கத் திருவுள்ளம்பற்றிப் ப்ல பல ஸ்தோத்ர நூல்களையு மருளிச் செய்தாரென்பது ப்ரஸித்தம். அந்த நூல்களினுல் பக்தர்களுக்கு விளையும் பலன் ஒவ்வொரு ஸ்தோத்ரத்தின் முடிவிலும் பெரும்பாலு மருளிச் செய்யப்பட்டிருந்தாலும், தசாவதார ஸ்தோத்ராவஸாநத்தில் *वक्त्रे तस्य सरस्वती बहुमुखी भक्तिः परा मानसे शुद्धिः काऽपि तनौ दिशासु दशसु ख्यातिः शुभा जृम्भते-வக்த்ரே தஸ்ய ஸரஸ்வதீ பஹுமுகீ பக்திர்: பரா மாநஸே சுத்தி: காபி தநௌ திசாஸு தசஸு க்க்யாதிச் சுபா ஜ்ரும்பதே* என்றருளிச் செய்த பலன் ஸகலஸ்தோத்ர ஸாதாரணமென்று கொள்ளக்கடவது.

ஸுதர்சனாஷ்டகமும் ஷோடசாயுத ஸ்தோத்ரமும் அனைவர்க்கும் அநிஷ்ட நிவாரணபூர்வக் இஷ்ட ப்ராபணார்த்தமாகவே யருளிச் செய்தவையாம். இந்த ஷோடசாயுத ஸ்தோத்ரத் திற்குப் பலன்பணிக்கும் நிகமன ச்லோகத்தில் "ஸ்ரீமத்வேங்கடநாதேந ச்ரேயஸே பூயஸே ஸதா; க்ருதேய மாயுதேந்த்ரஸ்ய ஷோடசாயுதஸம்ஸ்துதி:" என்றருளிச் செய்திருக்கையாலே பக்தர் களுக்கு ஸகலச்ரேயஸ்ஸையு மளிக்கும் இந்த ஸ்துதிநா லென்னுமிடம் நிஸ்ஸந்தேஹம்.

ஸ்ரீஸுதர்சனாழ்வானுடைய ஸ்துதியாக ஸ்ரீகூர நாராயண ஜீயரருளிச் செய்த ஸுதர்சன சதகத்தில் (80)* चक्रं कुन्तं कृपाणं परशुहुतवहावङ्कुशं दण्डशक्ती शंखं कोदण्डपाशौ हलमुसलगदा वज्रशूलांश्च हेतीन्। दोर्भिस्सव्यापसव्यैर्दधत्— சக்ரம் குந்தம் க்ருபாணம் பரசு ஹுதவஹாவங்குசம் தண்டசக்தீ சங்கம் கோதண்டபாசௌ ஹலமுஸலகதா வஜ்ர சூலாம்ச்ச ஹேதீந், தோர்ப்பிஸ் ஸவ்யாபஸவ்யைர் ததத்* என்று ஹேதிராஜனான ஸ்ரீஸுதர்சனாழ் வான் இரு திருக்கரங்களிலும் பதினாறு திவ்யாயுதங்களை ஏந்தியிருப்பதாகச் சொல்லிற்று. அஹிர்புத்ந்யஸம்ஹிதாதிகளில் கூறியபடியும் அர்ச்சையில் ஆங்காங்கு ஸேவைஸாதிக்கிற படியும் ஸுதர்சனாழ்வான் தரிக்குமிவ்வாயுதங்களிலே ஸுதர்சனமு மொன்றாயிருக்கும். எம்பெருமானுடைய ரூபாந்தரமே ஸுதர்சனனாக வடிவெடுத்ததென்கிற தத்துவம் இதனால் விளங்கும்.

சுலோகங்களெல்லாம் அநுஷ்டுப்பாயிருந்தாலும் வர்ணாநுப்ராஸங்களாலும் அர்த்த புஷ்டியாலும் நிகரற்று விளங்குமிந்த ஸ்துதிக்கு ஏற்றதொரு வியாக்கியானமில்லாத குறைதீர ஹேதிராஜ ப்ரஹர்ஷிணி யென்னும் வியாக்கியானத்தை அடியேனை நிமித்தமாத்ர மாகக் கொண்டு அவதரிப்பிக்கிறார் ஸ்வாமிதேசிகன். இதில் குற்றங்குறைகள் புக அவகாச மில்லாமையாலே ப்ரார்த்தனா விசேஷங்களுக்கு அவஸரமில்லையாயிற்று. ... *

பம்பாய் மாநகரைச் சேர்ந்த மாதுங்காவில் வேதாந்த தேசிக ஸம்பிரதாய ஸபை யொன்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாம். அதன்மூலமாக தேசிக ஸ்தோத்திரங்களை ஒருபக்கம் தேவநாகரலிபியிலும் மற்றொருபக்கம் தமிழ்லிபியிலுமாக அச்சிட்டு இவ்வாண்டிலே வெளி யிட்டிருக்கிறார்கள் அந்த ஸபையார். இது பக்தர்களுக்கு மஹோபகாரமான செய்கையே யென்பதில் ஐயமில்லை. ஆனால் "செய்வன திருந்தச் செய்" என்னும் பழமொழியைக் கடந்து செய்வதனால் இவர்கள் ஏராளமாகச் செய்யும் பொருட்செலவு பரிமளிக்க வழியில்லாமற் போகிறதென்னும் வருத்தம் நம் முள்ளத்தில் அடங்குகின்றதில்லை. இப் பதிப்பில் ஒவ்வொரு ஸ்தோத்திரத்திற்கும் முன்னே தமிழில் ஒரு சிறு குறிப்பு தரப்பட்டுள்ளது. அது நூலின் தன்மையைச் சுருக்கமாக விளக்குவதாம். இந்த ஷோடசாயுத ஸ்தோத்ரத்தைப்பற்றி அதி லுள்ள குறிப்பாவது, "ஸ்ரீஸுதர்சனாழ்வானின் ஒவ்வொரு ஆயுதத்திற்கு ஒவ்வொரு சுலோக மாக 16 சுலோகங்களும் ஆரம்பத்தில் பொதுவாக 2 சுலோகங்களும், பலச்ருதியாக ஒரு சுலோகமும் ஆக 19 சுலோகங்கள் அடங்கியது" என்பதாம். வடமொழி வாஸனையையே அறி யாதவர்களைக்கொண்டு எழுதுவித்தால் இங்ஙனேயல்லது வேறுவிதமாக அமையுமோ? "ஆரம் பத்தில் பொதுவாக இரண்டு சுலோகங்கள்" என்பது மருள். ஷோடசாயுத ஸ்தோத்ரமானவிது ஸுதர்சனாழ்வானுடைய பதினாறு திவ்யாயுதங்களைப் பற்றியது. அந்த பதினாறில் சக்கரம் என்பது ஒன்று. அதுதான் முதலது. அந்த சக்கராயுதத்தைப்பற்றியே இரண்டாவது சுலோகம் அமைந்தது, அதிலிருந்தே ஆயுதவர்ணனம் தொடக்கமாயிற்று. முதல் சுலோகம் ஹேதிராஜனுடைய மங்களா சாஸனம். "ஆரம்பத்தில் பொதுவாக இரண்டு சுலோகங்கள்" என்றது நிர்மூலமான மருள். இப்படி இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிற தீய குணங் களுக்குக் கொள்கலமானவர்களைக் கொண்டு இவர்கள் உலகுக்குச் செய்ய நினைக்கும் உப காரங்கள் அபகாரங்களாகவே தலைக்கட்டும். இவர்களுக்கு வீண் ப்ரவ்ருத்திகள் வேண்டா வென்று பலகால் தெரிவித்தும் பயன்படுவதில்லையந்தோ! ... (*)

வியாக்கியானாவதாரிகை முற்றிற்று,

ஸ்ரீ

# ஷோட சாயுத ஸ்தோத்ராரம்பம்

स्व सङ्कल्प कलाकल्पैरायुधैरायुधेश्वरः । जुष्टः षोडशभिर्दिव्यैर्जुषतां वः परः पुमान् ॥ १ ॥

ஸ்வ ஸங்கல்ப கலா கல்பைராயுதைராயுதேச்வர: |
ஜுஷ்ட: ஷோடசபிர் திவ்யைர் ஜுஷதாம் வ: பர: புமாந் ‖ (1)

ஸ்வஸங்கல்பகலா கல்பை: ஷோடசபி: திவ்யை: ஆயுதை: ஜுஷ்ட: ஆயுதேச்வர: பர: புமாந் வ: ஜுஷதாம். — தன்னுடைய ஸங்கல்பைகதேசம் போன்ற பதினாறு திவ்யாயுதங்களாலே ஸேவிதனான ஹேதிராஜனாகிற பரம புருஷன் உங்களை யுகப்பிக்கக் கடவன்.

***அஹிர்ப்புத்ந்யஸம் ஹிதையில் *संकल्पादेव पूर्वस्मात्सुदर्शनमयाद्धरेः-ஸங்கல்பாதேவ பூர்வஸ்மாத் ஸுதர்சநமயாத் ஹரே:* என்று சொல்லியிருப்பதை யடியொற்றி ஸுதர்சந சதகத்தில் (76) *वाणी पौराणिकी यं प्रथयति महितं प्रेक्षणं कैटभारेः— வாணீ பௌராணிகீ யம் ப்ரதயதி மஹிதம் ப்ரேக்ஷணம் கைடபாரே:* என்றருளிச் செய்யப்பட்டது. அதாவது எம்பெருமானுடைய ஸங்கல்பமே திருவாழி யாழ்வானாக வடிவெடுத்த தென்கை. அந்தத் திருவாழி யாழ்வானுடைய ஸங்கல்பத்தின் ஒவ்வொருகலையும் ஒவ்வோராயுதமாக வடிவெடுத்ததோ! என்னலாம்படியுள்ளவை ஷோடசாயுதங்கள் என்கிறது. கலா சப்தம் அநேகார்த்தகம்; சதுஷ்ஷஷ்டி கலைகளென்னும்போது வித்யாஸ்தானவாசகம்; கலா காஷ்டாதிகளென்னும்போது காலத்தின் ஏகதேசவாசகம். கலாநிதி யென்னும்போது ஷோட சகலாபரிபூர்ணனான சந்திரனைச் சொல்லுகையாலே பதினாறில் ஒருபாகத்திற்குக் கலையென்று பெயராகிறது. இப்பொருளே இங்கு விவக்ஷிதம். "கலா து ஷோடசோ பாக:" என்று அமர கோசமு முள்ளது. 'ஸ்வஸங்கல்ப' என்ற விடத்தில் ஸ்வசப்தார்த்தம் ஸுதர்சநாழ்வான். கலாகல்பை: என்றது கலாஸத்ருசை: என்றபடி. ईषदसमाप्तौ कल्पब्देश्यदेशीयरः— ஈஷதஸமாப்தௌ கல்பப் தேச்ய தேசீயர:" என்கிற அநுசாஸனம் காண்க. கல்பப். என்றொரு ப்ரத்யயமென்று கொள்க. இந்த ஸ்தோத்ரத்தில் ஒவ்வொரு சுலோகத்திலும் (வ:) என்று வருமிடங்களிலெல்லாம் (ந:) என்று பாடபேதமுள்ளதாக அர்வாசீநர்கள் காட்டியிருப்பது அஸாது. பிறருடைய ச்ரேயஸ்ஸைக் கோலியே இந்த ஸ்துதியருளிச் செய்யப்பட்டதாதலால் ஸுதர்சந சதகத்திற்போலவே இதிலும் (வ:) என்பதே ஸ்வாமி திருவாக்கில் அவதரித்த பாடமாகும். ஐந்தாவது சுலோகத்திலும் பதினேழாவது சுலோகத்திலும் பவதாம் என்றிருப்பதை அஸ்மாக மென்று திருத்தாதது போலவே எங்கும் திருத்தாதிருக்க வடுக்கும். ... (1)

यदायत्तं जगच्चक्रं कालचक्रं च शाश्वतम् । पातु वस्तत् परं चक्रं चक्ररूपस्य चक्रिणः ॥ २ ॥

யதாயத்தம் ஜகச்சக்ரம் கால சக்ரம் ச சாச்வதம் |
பாது வஸ் தத் பரம் சக்ரம் சக்ர ரூபஸ்ய சக்ரிண: ‖ (2)

ஜகச்சக்ரம் சாச்வதம் காலசக்ரஞ்ச யத்ஆயத்தம், சக்ரரூபஸ்ய சக்ரிண: தத் பரம் சக்ரம் வ: பாது. — இருபத்துநான்கு தத்வாத்மகமான ஜகச்சக்ரமும் சாச்வதமான காலசக்ரமும் எந்த சக்ரத்தினுடைய அதீனமோ, ஸுதர்சநரூப பரமபுருஷனுடைய அந்த சிறந்த சக்ரமானது உங்களைக் காத்தருள்க.

*** ஷோடசாயுதங்களில் முதலாயுதம் சக்ரமாகையாலே அதுதன்னை உபச்லோகிக்கிருரிதில். கீழ்சுலோகம் இந்நூலுக்கு மங்களா சரணத்தில் சேருமத்தனை. இந்த சுலோகத்தையே ஸ்தோத்ராரம்ப மென்று கொள்க. திருவாழியாழ்வான் திருக்கையிலேந்தும் சக்கரம் எப்படிப்பட்டதென்னில்; ஜகச் சக்ரத்தையும் கால சக்ரத்தையும் தன்னதீனமாக வுடையது. சாச்வதம் என்கிற விசேஷணத்தை இரண்டிடத்திலும் அந்வயிக்கலாம். ஜகச்சக்ரமானது ப்ரவாஹநோரித்யம்; கால சக்ரமானது ஸ்வரூபதோரித்யம். * त्रिणाभियुक्तं षण्णेमि पञ्चारं चक्रमव्ययम्। संवत्सरमयं यत्तत् कालचक्रमिति स्थितम्॥ तद्वशे वर्तते नित्यं चेतनाचेतनात्मकम्। परिवर्तयते देवस्तदेतच्चक्ररूपधृत्॥* என்றும் *अव्यक्तादिविशेषान्तैः स्वरूपैरपरैर्वृतम्। चतुर्विंशतिसंख्याकैः पुरुषात्मकनेमि यत्। जगच्चक्रमिति ख्यातं तच्च प्रेरयते स्वयम्॥ என்றும் அஹிர்புத்ந்யஸம்ஹிதையிற் கூறப்பட்டவை இங்கே அநுஸந்தேயம். வடிவார் சோதிவலத்துறையும் சுடராழி* என்கிறபடியே. [சக்ரரூபஸ்ய சக்ரிண: சக்ரம்] திருவாழியாழ்வான் எம்பெருமானுக்கு திவ்யாயுதமா யிருக்கச் செய்தேயும், எம்பெருமானுடைய ஒரு வடிவமென்றும் நூற்கொள்கை யிருக்கையினாலே "சக்ரரூபஸ்ய சக்ரிண:" என்றருளிச் செய்யக்குறையில்லை. (2)

यत्प्रसूति शतैरासन् रुद्राः परशुलाञ्छिताः। स दिव्यो हेतिराजस्य परशुः परिपातु वः॥ ३॥

யத்ப்ரஸூதி சதைராஸந் ருத்ரா: பரசு லாஞ்சிதா: |
ஸ திவ்யோ ஹேதி ராஜஸ்ய பரசு: பரிபாது வ: ‖ (3)

ருத்ரா: யத்ப்ரஸூதிசதை: பரசு லாஞ்சிதா: ஆஸந், ஹேதிராஜஸ்ய ஸ: திவ்ய: பரசு: வ: பரிபாது. } ருத்ரர்கள் எந்த பரசுவிடமிருந்து தோன்றிய பலபல பரசுகளாலே பரசுவை அடையாளமாக வுடையவர்களாக் ஆயினரோ, ஆயுதேச்வரனுன திருவாழி யாழ்வானுடைய திவ்யமான அந்த பரசுவானது உங்களைக் காக்கக்கடவது.

*** இதில் பரசுவென்னும் மழுப்படையை உபச்லோகிக்கிருர். [யத்ப்ரஸூதி சதை:] ப்ரஸூதி சப்தம் இங்கு தர்மவாசகமன்று, தர்மிவாசகம். பஹுவ்ரீஹியுங் கொள்ளலாம். "अष्टौ वसवः, एकादश रुद्राः, द्वादशादित्याः" என்று வேதமோதினபடியும்* पश्यैकादश मे रुद्रान्* என்று விச்வரூபத்தில் காட்டினபடியும் பல ருத்ரர்களுண்டே; * भूतेशः खण्डपरशुः— பூதேச: கண்டபரசு:* என்ற அமரகோசத்தின்படி ஒரு ருத்ரனுக்குள்ள பரசு மற்றுமுள்ள ருத்ரர்களுக்கெல்லாமுண்டே. அந்த பரசுக்கள் எங்கிருந்து பெற்றவையென்ன, சக்ரராஜனுடைய பரசுவென்னும் படையின் ப்ரஸூதிகளென்கிறது. சக்ரராஜனை யாராதித்துப் பரசுவைப் பெற்றதாக இதிஹாஸமுமுண்டு. ... ... (3)

हेलया हेतिराजेन यस्मिन् दैत्याः समुद्धृते। शकुन्ता इव धावन्ति स कुन्तः पालयेत वः॥ ४

ஹேலயா ஹேதி ராஜேந யஸ்மிந் தைத்யா: ஸமுத்த்ருதே |
சகுந்தா இவ தாவந்தி ஸ குந்த: பாலயேத வ: ‖ (4)

ஹேதிராஜேந யஸ்மிந் குந்தே ஹேலயா ஸமுத்த்ருதே (அபி) தைத்யா: சகுந்தா இவ தாவந்தி, ஸ: குந்த: வ: பாலயேத. } திருவாழியாழ்வானல் எந்த குந்தம் அவலீலையாக எடுக்கப்பட்டாலும் அசுரர்கள் பறவைகள் போலப் பறந்தோடுகின்றுர்களோ, அந்த குந்தப்படை உங்களைக் காக்க வேணும்.

*** ஈட்டி யென்கிற படைக்குக் குந்தமென்று பெயர். திருவாழியாழ்வான் அவ்வாயுதத்தைப் பிரயோகிக்க வேணுமென்கிற விருப்பத்துடன் எடாமல் விளையாட்டாக வெடுத்தாலும்

தடியைத் தொடும்போதே பறவைகள்பறந்தோடுமாபோலே அசுரர்கள் பாறியொழிகின்ருர் களாம். அப்படிப்பட்ட குந்தாயுதம் உங்களை ரக்ஷிக்கக்கடவதென்ருராயிற்று. *குந்தமோடு சூலம் வேற்கள் தோமரங்கள் தண்டுவாள் பந்தமான தேவர்கள் பரந்து வானகமுற* என்று திருச்சந்த விருத்தத்தி லருளிச் செய்தபடியே குந்தம் முதலான படைகளுக்குத் தேவர்களே சிதறியோடும்போது அசுரர்களைப்பற்றிச் சொல்லவேணுமோ? ஹேலயா—லீலயா என்றபடி.(4.)

दैत्य दानव मुख्यानां दण्ड्यानां येन दण्डनम्। हेतिदण्डेशदण्डोऽसौ भवतां दण्डयेद् द्विपः ॥ ५ ॥

தைத்ய தாநவ முக்யாநாம் தண்ட்யாநாம் யேந தண்டநம்।
ஹேதி தண்டேச தண்டோzஸௌ பவதாம் தண்டயேத் த்விஷ: ॥ (5)

தண்ட்யாநாம் தைத்ய தாநவ முக்யாநாம் தண்டநம் யேந (பவதி), அஸௌ ஹேதிதண்டேசதண்ட: பவதாம் த்விஷ: தண்டயேத். } தண்டிக்கத் தக்கவர்களான தைத்யர் தாநவர் முதலானுருடைய தண்டனம் எந்த தண்டத்தினுலாகிறதோ, இந்த ஹேதிராஜனுடைய தண்டாயுதமானது உங்களுடைய வைரிகளைத் தண்டித் தொழிக்கட்டும்.

***தண்டமென்னும் படையைத் துதிக்கிருரிதில். *தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்ய மதிதைவதம்* என்று எம்பெருமான் ஸர்வஸமனுயிருந்தாலும் விட்டில்கள் விளக்கிலே தாமாக வந்து விழுந்து சாமாபோலே தாமாக மடிய வருகின்ற தைத்யதானவர்களைத் தண்டிக்க ப்ராப்தமாகின்றது. "வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன்பெற்ற மரதகமணித்தடம்" என்ருரிறே நம்மாழ்வாரும். தசரதசக்ரவர்த்தி ஒரு புதல்வனைப் பெற்றிலன்; ஒரு தடாகத்தையே பெற்றனன்; அதிலே அரக்கரு மசுரரும் தாமாக வந்து விழுந்து மடிகிருர்கள் என்ருயிற்று இப் பாசுரத்தில் சொல்லிற்று. அப்படிப்பட்டவர்கள் ஸ்வயமேவ தண்டநீயர்களாகின்றனர். அன்னவர்களைத் தண்டிக்கவல்லதான ஸுதர்சந தண்டாயுதம் உங்கள் பகைவர்களைத் தண்டிக்கக் கடவதென்ருராயிற்று.

தைத்யர்களென்பதும் தானவர்களென்பதும் பர்யாயமன்ருேவென்று சங்கிக்கவேண்டா; दितिसुताः—दैत्याः, दनुसुताः—दानवाः என்கிற தத்துவமுணர்க. ஹிரண்யகசிபு முதலானுர் திதிபுத்திரர்களென்றும், விப்ரசித்தி முதலானுர் தநுபுத்திரர்களென்றும், மஹாபாரதத்தில் விளக்கப்பட்டுளது. एक एव दितेः पुत्रो हिरण्यकशिपुः स्मृतः * என்றும், चत्वारिंशद्दनोः पुत्राः ख्याता स्सर्वत्र भारत। तेषां प्रथमजो राजा विप्रचित्तिर्महायशाः॥ என்றும் சொல்லிவைத்தது. (5)

अनन्यान्वय भक्तानां रुन्धन्नाशामतङ्गजान्। अनङ्कुश विहारो वः पातु हेतीश्वराङ्कुशः ॥ ६ ॥

அநந்யாந்வய பக்தாநாம் ருந்தந்நாசா மதங்கஜாந்।
அநங்குச விஹாரோ வ: பாது ஹேதீச்வராங்குச: ॥ (6)

அநந்யாந்வய பக்தாநாம் ஆசா மதங்கஜாந் ருந்தந் அநங்குச விஹார: ஹேதீச்வர அங்குச: வ: பாது } அநந்யார்ஹ பக்தர்களுடைய ஆசையாகிற யானைகளை அடக்கியாள்வதும் தட்டுத் தடையில்லாத விஹாரமுடையதுமான ஹேதிராஜனுடைய அங்குசமென்கிற ஆயுதமானது உங்களைக் காக்கவேணும்.

*** மாவட்டியென்னுமாயுதம் இதனல் துதிக்கப்படுகின்றது. மாவட்டியின் காரியம் யானைகளைத் தகர்ப்பதேயாதலால் "வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும் சேரிதிரியாமல்" என்று பொய்கையாழ்வா ரருளிச்செய்தபடியே பக்தர்களின் விஷய வாஞ்சைகளாகிற மதயானைகளை அடக்கியாளவல்லதாம் இந்த ஹேதிராஜாங்குசம். ஆசாமதங்கஜமென்று திக்கஜங்களையும் சொல்லக்கடவது.* आशास्तु ककुभः काष्ठाः— ஆசாஸ்து ககுப: காஷ்டா:* என்று கோசமாகை

யாலே ஆசையென்று திக்குக்கும் பெயருண்டு. "आशामतङ्गजगणानविषह्यवेगान् पाद यतिक्षितिभृतः प्रसभं निरुन्धन्" என்ற யதிராஜஸப்ததி (72) ஸூக்தியிலே இவ்விரண்டு பொருளும் விவக்ஷிதயென்பதை இங்கு நினைப்பூட்டுகிறோம். நிரங்குசவிஹார: என்றது—அங்குசாயுதம் லீலை செய்யும்போது எங்கும் எவ்விதமான உபரோதமும் விளையப்ரஸக்தி யில்லையென்கை. சப்தாநுப்ராஸம் ஒரு சமத்கார விசேஷம். अन्येष्वन्वयो येषां न, ते अनन्यान्वयाः। * மறந்தும் புறந்தொழாமாந்தரென்றபடி. தேவதாந்தராந்வயம் சிறிது கிடக்கிலும் அது அங்குச விஹாரத்திற்கு அங்குசமாமென்கை. ... .. ... (6)

संभूय शलभायन्ते यत्र पापानि देहिनाम्। स पातु शत वक्त्राग्नि र्हेतिर्हेतीश्वरस्य वः ॥ ७ ॥

ஸம்பூய சலபாயந்தே யத்ர பாபாநி தேஹிநாம் |
ஸ பாது சத வக்த்ராக்நி ர்ஹேதிர் ஹேதீச்வரஸ்ய வ: ‖ (7)

யத்ர தேஹிநாம் பாபாநிஸம்பூய சலபாயந்தே, ஹேதீச்வரஸ்ய ஸ: சதவக்த்ராக்நி ஹேதி: வ: பாது. — யாதொரு சதமுகாக்நி யென்கிற திவ்யாயுதத்தில் பிராணிகளின் பாபங்கள் திரண்டு விட்டில்படும்பாடு படுகின்றனவோ, சக்ரராஜனுடைய அந்த சதமுகாக்நியென்கிற திவ்யாயுதம் உங்களைக் காக்கவேணும்.

*** சதமுகாக்நியென்று ஒரு ஆயுதம். நூறு வாய்களினால் தீயை உமிழ்கின்ற வாயுதமாம் அது. நூறு என்பது அநேக பர்யாயமாகவு மிருக்கத்தகும். தேஜ:பதார்த்தத்திலே சலபங்கள் திரண்டு விழுந்து தாமாக நசித்துப் போவது இயல்வாகையாலே இந்த சதமுகாக்நியில் விழுந்து நசிக்கும் சலபங்கள் எவை யென்ன [தேஹிநாம் பாபாநி] கர்ம நிபந்தனமாகப் பாபிஷ்ட தேஹங்களைக் கொண்டவர்களின் ஸகல பாபங்களும் இதில் சலபவ்ருத்தியை யடைகின்றனவாம். திருவாழி யாழ்வானுடைய இந்த திவ்யாயுதத்தைச் சிந்தனை செய்தவாறே ஸகலபாபங்களும் உருமாய்ந்து தொலையுமென்றவாறு. ... ... (7)

अविद्यां स्व प्रकाशेन विद्यारूपश्छिनत्ति यः। स सुदर्शन निस्त्रिंशः सौतु वस्तत्व दर्शनम् ॥ ८ ॥

அவித்யாம் ஸ்வ ப்ரகாசேந வித்யாரூபச் சிநத்தி ய: |
ஸ ஸுதர்சந நிஸ்த்ரிம்ச: ஸௌது வஸ் தத்வ தர்சநம் ‖ (8)

வித்யாரூப: ய: ஸுதர்சநநிஸ்த்ரிம்ச: ஸ்வப்ரகாசேந அவித்யாம் சிநத்தி, ஸ: வ: தத்வ தர்சநம் ஸௌது. — ஜ்ஞான ரூபமான யாதொரு ஸ்ரீஸுதர்சநகட்காயுதமானது தனது ஒளியினாலே அஜ்ஞானத்தை யடியறுக்கின்றதோ, அந்த கட்கமானது உங்களுக்கு தத்வஜ்ஞானத்தை யுண்டாக்குக.

*** நிஸ்த்ரிம்ச மாவது கட்கம்; கத்தியென்பது. அதற்குப் பணி அறுப்பதேயாதலால் ஸ்வப்ரகாசத்தாலே பக்தர்களின் அஜ்ஞானத்தை யடியறுக்கவல்லது. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் அஸ்த்ரபூஷணாத்யாயத்தில் கட்காயுதம் ஜ்ஞாநாதிதைவத மென்றும் அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞானஸாம்ராஜ்ய மளிக்கவல்லதென்றும் சொல்லிற்று. அதை யடியொற்றி இந்த ச்லோக மருளிச்செய்தபடி. இஷ்டப்ராபண அநிஷ்ட நிவாரணங்களுள் அஜ்ஞாந நிவர்த்தந பூர்வக ஜ்ஞாநப்ரதானமே மிகச் சிறந்ததாதலால் அதுதன்னைச் சொல்லிற்று. (8)

क्रिया शक्ति गुणो विष्णोर्यो भवत्यतिशक्तिमान्। अकुण्ठ शक्तिः सा शक्तिरशक्तिं वारयेत वः ॥ ९ ॥

க்ரியா சக்தி குணோ விஷ்ணோர் யோ பவத்யதிசக்திமாந்
அகுண்ட சக்தி: ஸா சக்திரசக்திம் வாரயேத வ: (9)

அதிசக்திமாந் ய: விஷ்ணோ: க்ரியாசக்திகுண: பவதி, ஸா சக்தி: வ: அசக்திம் வாரயேத்.

மிக்க சாமர்த்தியத்தையுடைய யாதொரு சக்தியென்கிற ஆயுதமானது ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்கு உலகப் படைப்புக்கு இன்றியமையாத சக்தியென்னும் குணமாக ஆகின்றதோ, தட்டுத் தடங்கலற்ற சக்தியையுடைய அந்த சக்திப்படையானது உங்களுடைய அசக்தியைப் போக்கடிக்கக்கடவது,

*** சக்தியென்னு மாயுதத்தைத் துதிக்கும் சுலோகமிது. ஷாட்குண்ய பரிபூர்ணனுக்கு பகவானென்று பெயர். भगवान् भग इतीरणा என்னக்கடவதிறே. ஜ்ஞானம், சக்தி பலம், ஐச்வர்யம், வீரியம், தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்களுடைமைபற்றி எம்பெருமானைப் பகவானென்கிறது. இந்த ஆறு திருக்குணங்களும் ஸ்ருஷ்டிகார்யத்திற்கு இன்றியமையாதவை. அவற்றுள் அகடித கடனாஸாமர்த்தியமாகிற சக்தியென்னும் குணம் மிக முக்கியமானது. இந்த ஷாட்குணங்களுக்கும் பட்டர் ஸ்ரீ ரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் லக்ஷணமருளிச் செய்கிறார். *ஸா தே சக்திஸ் ஸுகரமிதரச் சேதி வேலாம் விலங்க்ய* என்றதை இங்கே அநுஸந்திப்பது. இது ஸுகரம் இது துஷ்கரம் என்கிற வாசியின்றிக்கே எதையும் நிர்வஹிக்கக்கூடிய ஆற்றலே சக்தியெனப்படும். அந்த சக்திதான் இந்த ஸுதர்சநாழ்வானுடைய சக்திப்படையாகப் பரிணமித்ததோ? அன்றி இந்த சக்திப்படைதான் அந்த சக்தி குணமாகப் பரிணமித்ததோ! என்று உல்லேகிக்கலாம்படியுள்ளது இந்தகைய பெருமை வாய்ந்த சக்திப்படையானது உங்களுக்கு அசக்தியைப் போக்கி சக்தியை வளர்க்கக் கடவதென்றாராயிற்று. அநுஷ்டேய க்ருத்யங்களில் அசக்தி தொலையவேணுமென்கை. அக்ருத்யங்களில் அசக்தியும், க்ருத்யங்களில் சக்தியும் ஆவச்யகமென்க. ... (9)

तारत्वं यस्य संस्थाने शब्दे च परिदृश्यते । प्रभोः प्रहरणेन्द्रस्य पाञ्चजन्यः स पातु वः ॥ १० ॥

தாரத்வம் யஸ்ய ஸம்ஸ்தாநே சப்தே ச பரித்ருச்யதே
ப்ரபோ: ப்ரஹரணேந்த்ரஸ்ய பாஞ்சஜந்ய: ஸ பாது வ: (10)

யஸ்ய ஸம்ஸ்தாநே சப்தே ச தாரத்வம் பரித்ருச்யதே, ப்ரஹரணேந்த்ரஸ்ய ப்ரபோ: ஸ: பாஞ்சஜந்ய வ: பாது.

யாதொரு சங்கத்தினுடைய உருவத்திலும் ஒலியிலும் தாரத்வம் காணப்படுகிறதோ, ஹேதிராஜனுடைய அந்த பாஞ்சஜந்யமானது உங்களைக் காத்தருளக்கடவது,

*** ஸ்ரீ பாஞ்சஜந்யமென்னு மாயுதம் உங்களுக்கு க்ஷேமங்கரமாக வேணுமென்கிறாரிதில். [தாரத்வம் பரித்ருச்யதே] இங்கு சிலேடையுள்ளது. தாரமென்று பிரணவத்திற்கும் உச்சத்வநிக்கும் பெயர். ஸம்ஸ்தாநே தாரத்வமென்றபோது ஸ்ரீ பாஞ்சஜந்யம் ப்ரணவாகார முடையதென்னுமிடம் சொல்லிற்றாகிறது. சப்தே தாரத்வமென்ற போது (यस्य नादेन दैत्यानां बलहानिरजायत) ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்* என்றும் *யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத* என்றும் சொல்லுகிறபடியே எதிரிகள் குடல் குழம்புமாறு செய்யும் பெரு முழக்கம் சொல்லப்படுகிறது. [ஸ பாஞ்சஜந்ய: வ: பாது] *பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி—தலைப்பெய்வதென்று கொலோ! *என்று ஆண்டாள் கோலினது உங்களுக்குப் பலிக்கக்கடவதென்றதாயிற்று. ... ... ... (10)

यं सात्त्विकमहङ्कारम् आमनन्त्यक्ष साधकम् । अव्याद् वश्चक्ररूपस्य तद्धनुः शार्ङ्ग धन्वनः ॥ ११ ॥

யம் ஸாத்விகமஹங்காரம் ஆமநந்த்யக்ஷ ஸாதகம்
அவ்யாத் வச் சக்ர ரூபஸ்ய தத்தநு: சார்ங்க தந்வந: (11)

யத் அக்ஷஸாதகம் ஸாத்விகம் அஹங்காரம் ஆமநந்தி, சக்ர ரூபஸ்ய சார்ங்கதந்வந: தத் தநு: வ; அவ்யாத்.

யாதொரு தநுஸ்ஸை இந்திரியங்களுக்குக் காரணமான ஸாத்விகாஹங்காரமாகச் சொல்லுகின்றார்களோ, திருவாழியாழ்வானுகிற பரமபுருஷனுடைய அந்த வில் உங்களைக் காத்திடுக.

*** சார்ங்கமென்னும் வில்லாண்ட பெருமாளே திருவாழியாழ்வானாக விளங்கி அவனுடைய திருக்கையிலும் சார்ங்கவில் திகழாநின்றதாயிற்று; அதனால் நீங்கள் ரக்ஷைபெறுவீராக வென்கிறாரிதில். ஆமநந்தி என்னும் க்ரியாபதத்திற்கு பராசராதிமஹர்ஷய: என்னும் கர்த்ருபதம் வருவித்துக் கொள்ளவேண்டும். பராசரபகவான் ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே *பூதாதிமிந்த்ரியாதிஞ் ச த்விதாஹங்காரமீச்வர:, பிபர்த்தி சங்கரூபேண சார்ங்கரூபேண ச ஸ்திதம்:* என்றும், *யாநீந்த்ரியாண்ய சேஷாணி புத்திகர்மாத்மகாநி வை, சரரூபாண்ய சேஷாணி தாநி தத்தே ஜநார்தந:* என்றும் சொல்லிற்றிறே. இதில் பூதாதியென்று தாமஸாஹங்காரமும், இந்த்ரியாதியென்று ஸாத்விகாஹங்காரமும் சொல்லப்படுகிறது. இவ்விரண்டும் அடைவே சங்கரூபமாகவும் சார்ங்கரூபமாகவு மிருப்பதாகச் சொல்லிற்று. ஆக, இந்திரிய காரணபூதமாயும் ஸாத்விகாஹங்கார ரூபமாயு மிருக்கிற சார்ங்கவில் உங்களைக் காக்கக்கடவதென்றாராயிற்று. ... ... ... (11)

आयुधेन्द्रेण येनैव विश्वसर्गो विरच्यते । स वः सौदर्शनः कुर्यात् पाशः पाशविमोचनम् ॥ १२ ॥

ஆயுதேந்த்ரேண யேநைவ விச்வஸர்கோ விரச்யதே
ஸ வ: ஸௌதர்சந: குர்யாத் பாச: பாச விமோசநம் (12)

ஆயுதேந்த்ரேண யேந ஏவ பாசேந விச்வஸர்க்க: விரச்யதே, ஸ: ஸௌதர்சந: பாச: வ: பாசவிமோசநம் குர்யாத்.

ஆயுதச் ரேஷ்டமான எந்த பாசத்தினாலேயே விச்வஸ்ருஷ்டியானது பண்ணப்படுகிறதோ அந்த ஸுதர்சந பாசாயுதமானது உங்களுக்குப் பாச விமோசனத்தைச் செய்யக்கடவது.

*** திருவாழியாழ்வானுடைய திவ்யாயுதங்களில் ஒன்றான பாசமானது உங்களுக்கு ஸம்ஸாரபந்த விமோசனத்தைச் செய்யக்கடவதென்று ஆசாஸித்தருளுகிறாரிதில். முதல் பாதத்தில் "யேந ஆயுதேந்த்ரேண" என்று ஸமாநாதிகரணமாக அந்வயிக்கும் வழி தவிர வ்யதிகரணாந்வயமும் கொள்ளற்பாலது. 'ஆயுதேந்த்ரேண' என்பது கர்த்தரி த்ருதீயையாய், 'யேந' என்பது கரணேத்ருதியையாய், ஆயுதச்ரேஷ்டனான திருவாழியாழ்வான் யாதொரு பாசத்தைக் கருவியாகக் கொண்டு ஜகத்ஸர்க்கம் பண்ணுகிறானோ—என்றதாகக் கடவது. ஸமாநாதிகரணாந்வயம் கொள்ளுமளவில் ஆயுதச்ரேஷ்டமான பாசமே ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுவதாகச் சொல்லிற்றாகும். வ்யதிகரணாந்வயம் கொள்ளுமளவில் ஸுதர்சநாழ்வானே ஜகத்ஸர்க்கம் பண்ணுவதாகவும், அதற்குப் பாசாயுதம் உபகரணமாக நிற்பதாகவும் சொல்லிற்றாகும். ஸுதர்சநாஷ்டகத்தில் ஐந்தாம் சுலோகத்தில் "असितविश्वक्रियामय அமிதவிச்வக்ரியாமய!" என்கிற ஸம்போதனம் நோக்கத்தக்கது. திருவாழியாழ்வான் பகவத்ஸங்கல்ப பர்யாய பூதனாகையாலே, ஸங்கல்பத்தினால் ஜகத்ஸர்க்கம் நடைபெறுகின்றதென்றபோதே திருவாழியாழ்வானால் அது நடைபெறுகின்றதென்றதாகத் தட்டில்லையே. அவயவியின் காரியத்தை அவயவத்திலே ஏற்றிச் சொல்லவும் குறையில்லையே. [ஸ: ஸௌதர்சந: பாச: வ: பாசவிமோசநம் குர்யாத்.] *आशापाशशतैर्बद्धाः – ஆசாபாச சதைர் பத்தா:* என்று கீதையிற் சொன்னபடியே நாம் ஆசாபாச சத பத்தர்களாயிறே யிருப்பது; இந்த் பந்தத்தினின்றும் நாம் விடுபட்டொழிய வேணுமென்று ஆசாஸித்தபடி. ... (12)

विहारो येन देवस्य विश्व क्षेत्र कृषीवलः । व्यज्यते तेन सीरेण नासीर विजयोऽस्तु वः ॥ १३ ॥

விஹாரோ யேந தேவஸ்ய விச்வ க்ஷேத்ர க்ருஷிவல:
வ்யஜ்யதே தேந ஸீரேண நாஸீர விஜயோஸ்துவ: (13)

| | |
|---|---|
| யேந தேவஸ்ய விச்வ க்ஷேத்ர க்ருஷீவல: விஹார; வ்யஜ்யதே, தேந ஸீரேண வ: நாஸீர விஜய: அஸ்து. | யாதொரு ஹலாயுதத்தினாலே பத்தியுழவனான பகவானுடைய ஸகல க்ஷேத்ரங்களையும் பயிரிடும் விஹாரம் விளங்குகின்றதோ. அந்த ஹலாயுதத்தினால் உங்களுக்கு சேனைத் தலையில் வெற்றியுண்டாகக் கடவது. |

*** ஹலமென்னும் ஆயுத விசேஷத்தை [அதாவது கலப்பையை] உபச்லோகிக்கிறுரிதில். திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் "வித்துமிடவேண்டுங் கொலோவிடை யடர்த்த பத்தியுழவன் பழம்புனத்து" என்றருளிச் செய்ததை யடியொற்றி பட்டர் ஸ்ரீ ரங்க ராஜஸ்தவத்தில் உத்தர சதகத்திலே தசாவதார ஸ்துதி ப்ரகரணத்தில் நம்பி மூத்த பிரானுக்காக இட்டருளின சுலோகத்தில் *त्वां क्षेमकृषीवलं हलधरं रङ्गेश! भक्तास्महे—தம் த்வாம் க்ஷேமக்ருஷீவலம் ஹலதரம் ரங்கேச! பக்தாஸ்மஹே* என்றருளிச் செய்தார். அதனை யடியொற்றி இந்த சுலோக மருளிச்செய்கிறபடி. எம்பெருமான் விச்வக்ஷேத்ர க்ருஷீவலன்; ஆசார்ய ஹ்ருதயத்தில் "பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய்" என்று தொடங்கியுள்ள மிகப் பெரிய சூர்ணையின் பொருள் இங்கே யுணரத்தக்கது. "உழுவதோர் நாஞ்சில்கொண்டு பெருக முயலும் பத்தி யுழவன் க்ருஷிபலமிறே" என்று அந்த சூர்ணை தலைக்கட்டுகிறது. க்ருஷிக்குக் கலப்பை இன்றியமையாதது. எம்பெருமான் செய்தருளும் யோகக்ஷேம க்ருஷிக்கும் அது வேண்டியிராநின்றது போலும். [தேவஸ்ய] திவு தாதுவில் நின்று தோன்றிய பதம்; அந்த தாதுவுக்குள்ள பத்துப் பொருள்களில் க்ரீடை யென்பதே முதற்பொருள். ஆகவே தேவஸ்ய என்றது க்ரீடாபரஸ்ய என்றபடி. இவன்தானே விச்வக்ஷேத்ர க்ருஷீவலனாயிருக்க, இந்த க்ருஷீவலத்வத்தை விஹாரத்தின்மேல் அதிதேசித்தது கவி சமத்காரம். "ஸீரேண நாஸீரவிஜய:" என்றது சப்தாநுப்ராஸம். "सेनामुखं तु नासीरम्" इति कोशः॥ (13)

आयुधानामहं वज्र इत्यगीयत यः स वः। अव्याद्धेतीश वज्रोऽसावदधीच्यस्थि संभवः॥ १४॥

ஆயுதாநாமஹம் வஜ்ரம் இத்யகீயத ய: ஸ வ:
அவ்யாத்தேதீச வஜ்ரோஸாவததீச்யஸ்தி ஸம்பவ: (14)

| | |
|---|---|
| ய: ஆயுதாநாம் அஹம் வஜ்ரம் இதி அகீயத; அததீச்யஸ்தி ஸம்பவ: அஸௌ ஹேதீச வஜ்ர: வ: அவ்யாத். | யாதொரு வஜ்ராயுதமானது 'ஆயுதங்களுக்குள்ளே நான் வஜ்ராயுதமாகிறேன்' என்று கீதாசார்யனாலே பேசப்பட்டதோ, ததீசி முனிவனுடைய அஸ்தியில் நின்றும் பிறவாததான அந்த ஹேதிராஜனுடைய வஜ்ராயுதமானது உங்களைக் காத்தருள்க. |

*** வஜ்ராயுதத்தை உபச்லோகிக்கும் சுலோகமிது. பகவத்கீதையில் பத்தாவது அத்யாயம் விபூத்யத்யாயமென்று ப்ரஸித்தமானது. அதில் கீதாசார்யன் பருப்பருத்தவற்றை யெல்லாம் தானாகச் சொல்லிவருமிடத்து (10-28) *ஆயுதாநாமஹம் வஜ்ரம் * என்று பணித்தனனாதலால் ஆயுதங்களுக்குள்ளே வஜ்ரம் மிகச் சிறந்ததென்னுமிடம் ஸ்பஷ்டமாகிறது; இவ்விடத்தில் இதை யெடுத்துக் காட்டுவதே போதும் இதன் சிறப்புக்கென்று திருவுள்ளம்பற்றினர் ஆசிரியர். கீதாபாஷ்யத்தின் அவ்விடத்துத் தாத்பர்ய சந்திரிகையில் "आयुधानामिति अर्वाचीनायुधपरम्! सुदर्शनाद्यपेक्षया दधीचेरस्थिसंभवस्य वज्रस्यापि निकृष्टत्वात्." என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்திருக்கையாலே இங்கு 'ததீச்யஸ்தி ஸமுத்பவ:' என்று காணப்படும் பாடம் ஒவ்வாதென்றும், "அததீச்யஸ்தி ஸம்பவ:" என்கிறபாடமே ஆசிரியர் திருவாய் மலர்ந்தருளியதென்றும் அறுதியிடலாகும். தேவேந்திரனுடைய வஜ்ராயுதமே ததீசியின் எலும்பினின்று தோன்றியது; அவ்வண்ணமாக ச்ருதிதி ஹாஸபுராணங்களிற் கூறியிருப்பதுமுண்டு; அதில் வ்யாவ்ருத்தியையே இங்கு அருளிச்செய்தபடி. (14)

विश्व संहृति शक्तिर्या विश्रुता बुद्धि रूपिणी। सा वः सौदर्शनी भूयात् गद प्रशमनी गदा॥ १५॥

விச்வ ஸம்ஹ்ருதி சக்திர்யா விச்ருதா புத்தி ரூபிணீ
ஸா வ: ஸௌதர்சநீ பூயாத் கத ப்ரசமநீ கதா (15)

| | |
|---|---|
| புத்திரூபிணி யா விச்வஸம்ஹ்ருதி சக்தி: விச்ருதா, ஸௌதர்சநீ ஸா கதா வ: கதப்ரசமநீ பூயாத். | புத்திக்கு அதிஷ்டாந தேவதையானதுபற்றி புத்திஸ்வரூபமாயிருக்கின்ற யாதொரு கதையானது எம்பெருமானுடைய லோகஸம்ஹாரசக்தியாக ப்ரஸித்தி பெற்றிருக்கின்றதோ, திருவாழியாழ்வானுடையதான அந்த கதையானது உங்களுடைய நோய்களைத் தீர்க்கவல்லதாக ஆகக்கடவது. |

*** ஹேதிராஜனுடைய கதாயுதத்தை உபச்லோகிக்குமிதில். "புத்திரூபிணி" என்றது மஹத்தத்வரூபிணி என்றபடி. ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் "बुद्धिरास्ते गदारूपेण माधवे- புத்திரத்யாஸ்தே கதாரூபேண மாதவே" என்ற விடத்தில் "புத்தி:—மஹத்தத்வம்" என்று எங்களாழ்வான்வியாக்கியானம். அதை யடியொற்றியே இங்கு புத்திரூபிணி என்றருளிச் செய்தது. அதுதான் விச்வப்ரபஞ்ச ஸம்ஹார சக்திரூபமாயிருக்கும். அத்தகைய பெருமை வாய்ந்த கதாயுதமானது [वः गदप्रशमनी भूयात्] கதமென்று வியாதிக்கு வாசகம். *கொன்றுயிருண்ணும் விசாதி பகை பசிதியன வெல்லாவற்றையும் கடிந்திடுகவென்கை. 'பயப்ரசமநீ' என்கிறபாடம் நூதனம். ... ... (15)

यात्यतिक्षोद शालित्वं मुसल्या येन तेन वः। हेतीशमुसलेनाशु भिद्यतां मोह मौसलम् ॥ १६ ॥

யாத்யதிக்ஷோத சாலித்வம் முஸலோ யேந தேந வ:
ஹேதீச முஸலேநாசு பித்யதாம் மோஹ மௌஸலம் (16)

| | |
|---|---|
| யேந முஸல்யா: அதி க்ஷோத சாலித்வம் யாந்தி, தேந ஹேதீச முஸலேந வ: மோஹ மௌஸலம் ஆசு பித்யதாம். | யாதொரு முஸலாயுதத்தினாலே முஸலஹஸ்தர்கள் பொடி பொடியா யொழிகின்றனரோ, அந்த ஸுதர்சந முஸலப்படையினால் உங்களுடைய மோஹமாகிற முஸல யுத்தமானது விரைவில் தொலையட்டும். |

*** திருவாழியாழ்வானுடைய உலக்கையென்னும் படையை வருணிக்குமிந்த சுலோகத்தில் இரண்டு மூன்று வகையான பாட பேதங்கள் காண்கின்றன. அர்த்த நிர்வாஹங்களும் அப்படியே. முஸலனென்று ஓர் அஸுரனிருந்ததாகவும் அவன் முஸலப்படையினால் பொடிபட்டொழிந்ததாகவும், அதை இங்கு ஸாதிப்பதாகவும் சிலர் சொல்லுவர்கள். அப்போது 'யாதி...முஸல:' என்று பாடம். ஆனால் நடந்ததொரு கதையைச் சொல்லுவதாகக் கொள்ளில் யாதி என்கிற வர்த்தமானக்ரியை ஸ்வரஸமாகாது. முஸல: என்பதற்கு உலக்கையென்றே பொருள்கொண்டு, போர்க்களத்தில் அவ்வோ வீர சூரர்கள் பிரயோகிக்கும் முஸலமானது இந்த முஸலத்தினால் பொடிபட்டொழிகிறதென்று சிலர் சொல்லுவர்கள். "विष्यो विषेण यो वध्यो मुसल्यो मुसलेन यः" என்கிற அமரகோசத்தின்படி முஸல்யபத மொன்றுண்டு; முஸலத்தாலே வதம் செய்யத் தகுந்தவர்கள் முஸல்யர்கள். அதனால் முஸல்யா: என்று பன்மையாகப் பாடங்கொண்டு அதற்குச் சேர க்ரியாபதத்தையும் யாந்தி என்று பன்மையாகக் கொள்ளுவர்கள். இப்பாடம் பொருத்தமாக இருக்கக்கூடும். ... (16)

शूलि दृष्ट मनोर्वाच्यो येन शूलयति द्विषः। भवतां तेन भवतात् त्रिशूलेन विशूलता ॥ १७ ॥

சூலி த்ருஷ்ட மநோர்வாச்யோ யேந சூலயதி த்விஷ:
பவதாம் தேந பவதாத் த்ரிசூலேந விசூலதா (17)

| | |
|---|---|
| சூலித்ருஷ்டமநோ: வாச்ய: யேந த்விஷ: சூலயதி, தேந த்ரிசூலேந பவதாம் விசூலதா பவதாத். | சிவனால் காணப்பட்ட மந்த்ரத்திற்குப் பொருளாயிருக்கின்ற திருவாழியாழ்வான் யாதொரு சூலாயுதத்தினால் பகைவர்களை வியாதி பிடித்தவர்களாக ஆக்குகின்றாரோ, அந்தத்ரிசூலாயுதத்தினாலே உங்களுக்குப் பிணியில்லாமையுண்டாகக் கடவது. |

*** சூலப்படையை உபச்லோகிப்பதிந்த சுலோகம். சூலத்தை த்ரிசூலமென்றும் வழங்குவதுண்டு. [சூலித்ருஷ்டமநோ: வாச்ய:] சூலியென்று சிவனுக்குப் பெயரென்பது ப்ர ஸித்தம். அவன்றனக்கே அஹிர்ப்புத்நியனென்றும் ஒரு பெயருண்டு. அவனால் காணப்பட்ட மந்த்ரம் ஸுதர்சந மந்த்ரம். அதற்குப் பொருளாயிருப்பவர் திருவாழியாழ்வான். அவர் தம் முடைய ஆயுதங்களில் அந்யதமமான சூலாயுதத்தைக்கொண்டு சத்துருக்களை அபிபவிக்கிறார். அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த சூலப்படை உங்களுக்குப் பிணியொழித்துச் சுகமளிக்கக் கடவதென்றாராயிற்று. ... ... ... (17)

अस्त्रग्रामस्य कृत्स्नस्य प्रसूतिं यं प्रचक्षते । सोऽव्यात् सुदर्शनो विश्वम् आयुधैः षोडशायुधः ॥ १८ ॥

அஸ்த்ர க்ராமஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ப்ரஸூதிம் யம் ப்ரசக்ஷதே (18)
ஸோவ்யாத் ஸுதர்சநோ விச்வம் ஆயுதை: ஷோடசாயுத:

க்ருத்ஸ்நஸ்ய அஸ்த்ர க்ராமஸ்ய யம் ப்ரஸூதிம் ப்ரசக்ஷதே, ஷோடசாயுத: ஸ: ஸுதர்சந: ஆயுதை: விச்வம் அவ்யாத் } ஸமஸ்தமான ஆயுத மண்டலங்களுக்கும் யாவரொரு திருவாழியாழ்வானை ஆகரமாகச்சொல்லுகிறார்களோ, பதினாறு படைகளையுடையரான அத் திருவாழியாழ்வான் உலகத்தைக் காத்தருள்க.

*** கீழ் சுலோகத்தோடு திருவாழியாழ்வானுடைய பதினாறு திவ்யாயுதங்களையும் துதித்துத் தலைக்கட்டினாராயிற்று, அவயவஸ்துதியை நிகமித்து அவயவிஸ்துதியிலே இழிகிறாரிதில், க்ருத்ஸ்நஸ்ய அஸ்த்ரக்ராமஸ்ய என்றது ப்ரஸ்துதங்களான ஷோடசாயுதங்களை மட்டும் விவக்ஷித்தன்று; உலகிலும் நூல்களிலும் எத்தனை அஸ்த்ரங்கள் வழங்கப்படுகின்றனவோ அவையெல்லாவற்றையும் விவக்ஷித்தென்க. ஸர்வாஸ்த்ரங்களும் திருவாழியாழ்வானுடைய ப்ரஸூதிகள் [ஸந்தானங்கள்] என்னத் தட்டில்லை. அவரை ப்ரக்ருதத்தில் ஷோடசாயுத விசிஷ்டராகக்கொண்டு ஒவ்வொரு சுலோகத்தில் ஒவ்வோராயுதத்தைப் புகழ்வதாக வைத்து ஈட்டருளினபடி. அந்தத் திருவாழியாழ்வான் விச்வ ப்ரபஞ்சரக்ஷகராகக் கடவரென்கை. திருவிருத்தத்தில் * அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும், இருளார் வினை கெடச் செங்கோல் நடாவுதிர் * என்றருளிச்செய்த பாசுரம் இங்கே அநுஸந்தேயம். (18)

श्रीमद्वेङ्कटनाथेन श्रेयसे भूयसे सताम् । कृतेयमायुधेन्द्रस्य षोडशायुध संस्तुतिः ॥ १९ ॥

ஸ்ரீமத்வேங்கடநாதேந ச்ரேயஸே பூயஸே ஸதாம்
க்ருதேயமாயுதேந்த்ரஸ்ய ஷோட சாயுத ஸம்ஸ்துதி: (19)

ஆயுதேந்த்ரஸ்ய இயம் ஷோடசாயுதஸம்ஸ்துதி: ஸதாம் பூயஸே ச்ரேயஸே ஸ்ரீமத் வேங்கடநாதேந க்ருதா. } திவ்யாயுதத் தலைவரான திருவாழியாழ்வானுடைய ஷோடசாயுதங்களைப் பற்றின இந்த ஸ்துதியானது ஸத்துக்களுக்குச் சிறந்த நன்மையின் பொருட்டு ஸ்ரீமத் வேங்கடநாதார்யரால் அருளிச்செய்யப்பட்டது.

*** ஒவ்வொரு ஸ்தோத்ரத்தின் அவஸாநத்திலும் ஸ்வாமி பலச்ருதியாகவொரு சுலோகமருளிச் செய்வதுண்டே. அதுதானிது. ஸ்ரீமத் வேங்கடநாதேந க்ருதா இயம் ஸ்துதி: ஸதாம் பூயஸே ச்ரேயஸே (ஸ்யாத்) என்று அந்வயித்துப் பலனுரைப்பதாகவே கொள்வது மிகப்பொருந்தும். ... ... ... (19)

काञ्चीवादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यसंकलिता ।

षोडशहेतिस्तुतिवरविवृतिस्सैषा विभातु बुधहृदये ॥

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியரியற்றிய உரை முற்றிற்று.

श्रीहस्तिशैलशिखरोज्ज्वलपारिजाताय नमः ।

अस्मद्गुरुपरम्पराभ्यो नमः ।

श्रीमन्निगमान्तमहागुरुवरकृतिषु

# ॥ दयाशतकम् ॥

श्रीकाञ्चीप्रतिवादिभयङ्कर—अण्णङ्गराचार्यविरचितया सहृदयहृदयोल्लासिनीव्याख्यया सनाथम् ॥

ஸ்ரீமந்நிகமாந்த மஹாசார்யர் அருளிச் செய்த

# தயா சதகம்

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

ஸஹ்ருதய ஹ்ருதயோல்லாஸிநீ வியாக்கியானத்துடன் கூடியது

श्रीशैलेशरमापतिदयैकपात्रे तदीयघण्टांशे ।
रचितदयाशतककृतौ रमते हृदयं मदीयमाचार्ये ॥ १ ॥
व्याख्यानवाचस्पतिरित्यनन्यसामान्यमाप्तं विरुदं महद्भ्यः ।
येनैष दासः प्रतिवादिभीकृदण्णङ्गरार्यस्सुकृती बुभूषुः ॥ २ ॥
वेङ्कटनाथमहागुरुदयाविशेषध्वजं दयाशतकम् ।
सहृदयहृदयोल्लासिन्यभिधव्याख्यासनाथमातनुते ॥ ३ ॥
कालत्रयेऽपि कतिचित् स्तोत्रस्यैतस्य विवृतिकर्तारः ।
कामं भवन्तु, सैषा विवृतिर्नियतं सतां वतंसस्स्यात् ॥ ४ ॥
देशिकहृदयाभिमतान् स्वादूनर्थान् यथायथं साधु ।
विशदीकृत्य विपश्चिद्धृदयं धिनुयां, कृती च भूयासम् ॥ ५ ॥

---

*(மேலேயுள்ள ஐந்து சுலோகங்களின் கருத்து)*

1. திருமலைமால் திருவருளுக்குக் கொள்கலமானவரும், அத்திருமாலின் திருமணியின் அம்சமாகத் தோன்றினவரும், தயாசதகமருளிச்செய்தவருமான ஆசிரியர் என்னுள்ள முகக்க நின்றார்.

2, 3. வியாக்யான வாசஸ்பதி யென்று மஹான்களால் விருதளிக்கப்பெற்ற வடியேன் விலக்ஷணபாக்யசாலியாக வேண்டி, ஸ்ரீ வேங்கடநாதனை திருவேங்கட முடையானுடையவும் அத்திருநாமங்கொண்ட மஹாசார்யனுடையவும் திருவருளுக்கு ப்ரகாசகமான தயாசதகத்திற்கு ஸஹ்ருதய ஹ்ருதயோல்லாஸினியென்னும் வியாக்கியானமிடுகிறேன்.

4. இந்த தயாசதகத்திற்கு ஏற்கெனவே சிலர் உரையிட்டிருக்கலாம்; இப்போதும் சிலர் உரை செய்துகொண்டிருக்கலாம்; மேல்வருங்காலத்திலும் சிலர் உரை யெழுதலாம். எனினும், அடியேனுடைய இந்த வியாக்கியானமொன்றே வித்வான்கள் தலைதுலுக்கிக் கொண்டாட நிற்கும்.

5. ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி திருவுள்ள முகந்தருளின இனிய நற்பொருள்களை உள்ளபடி விளக்கி வித்வான்களின் உள்ளத்தை உகப்பிப்பதோடு அடியேனும் க்ருதக்ருத்யனுவேன்.

கவிதார்க்கிக கேஸரியான நம் ஆசார்ய ஸார்வபௌமன் அருளிய ஸ்துதி நூல்கள் ஒவ்வொன்றும் ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமென்பது ஸகல ஸஹ்ருதய ஹ்ருதயைகஸாக்ஷிகம். ந்யாஸதசக மென்கிற லகுஸ்துதி முதலாகப் பாதுகாஸஹஸ்ரமென்கிற ப்ருஹத்தரஸ்துதியீறாக எந்தஸ்துதியை யெடுத்துக்கொண்டாலும் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே யென்னும்படியாக வுள்ளதேயன்றி ஸர்வோத்தமமான ஸ்துதிநூல் இன்னதுதானென்று அறுதியிடப் போகாது. *அதுவிதுவுது என்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்* என்று நம்மாழ்வாரும், * इङ्गितं निमिषितं च तावकं रम्यमद्भुतमतिप्रियङ्करम्— இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புத மதிப்ரியங்கரம்* என்று கூரத் தாழ்வானு மருளிச்செய்த கணக்கிலே 'ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தி' என்னுமதொன்றே அடியேன் போல்வார் உள்ளமுருகப் பர்யாப்தமாகும். ஆயினும், பாதுகா ஸஹஸ்ரமும் தயாசதகமும் தனிப்பெருமை வாய்ந்தவையென்று அறுதியிடத்தகும். ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனையோ ஸ்ரீ ரங்கநாதனையோ திருவேங்கட முடையானையோ உத்தேசித்து நூறாயிரம் சுலோகங்களும் இயற்றஇயலும்; அவயவைகதேசமான பாதுகையைக் குறித்து ஆயிரம் சுலோகங்களும், பல திருக்குணங்களுள் ஒன்றான தயையைமட்டும் குறித்து நூறு ச்லோகங்களும் இயற்றுவது அதிமானுஷ க்ருத்யமென்றே இயம்பத்தகும். இவ்விரண்டு ஸ்துதிகளிலும் ஸ்வாமியின் மேதாவிலாஸமும் ப்ரதிபாப்ரகர்ஷமும் ப்ரஸரித்திருக்கும் நுட்பத்தைச் சிறிது எடுத்துரைத்து ரஸிகர்களை ரஞ்ஜிப்பிக்க விரும்புகிறேனடியேன்.

முந்துறமுன்னம் பாதுகாஸஹஸ்ரத்தில் இரண்டு ச்லோகங்களைமட்டும் எடுத்துக் கொள்ளுகிறேன். ஸ்ரீபரதாழ்வானுடைய ப்ரார்த்தனையை ஒருவாறு நிறைவேற்றியருளக் கருதிய பெருமாள் *மரவடியைத் தம்பிக்கு வான்பணையம் வைத்துப்போய்* என்றும் *படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்றடி நிலையீந்தான்* என்றும் *பரதனுக்குப் பாதுகமு மரசுமீந்து* என்றும் சொல்லுகிறபடியே தாம் திருவுள்ளமிரங்கி ஸ்ரீபாதுகைகளைத் தந்தருளினதாகவும் பரதனுடைய வேண்டுகோளுக்கிணங்கித் திருவயோத்திக்கு மீண்டருளவில்லையென்பதாகவும் இதிஹாஸமுள்ளது. அதனை வெகு சமத்காரமாக வருளிச்செய்கிறார் ஸ்வாமி. பாதுகையானது முன்னம் பெருமாளுடைய திருவடிகளிலே சில மேன்மைகளைக் கண்டு அநுராகங் கொண்டு அவற்றிலே ப்ராவண்யம் பூண்டிருந்ததாகவும், பின்னை அத்திருவடிகளிலே குற்றங்குறை கண்டு அந்தப் பாதுகை, குற்றமுற்ற இத்திருவடியோட்டைச் சேர்த்தி நமக்கு வேண்டாவென்று வெறுத்து விலகியதாகவும் ஒரு விந்யாஸம் செய்தருளுகிறார். பாதுகை திருவடிகளிலே அநுராகங் கொண்டமையைக் கூறுகின்ற சுலோகமும், வெறுப்புக்கொண்டமையைக் கூறுகின்ற சுலோகமும் ஒரே ஸ்தலத்தில் இல்லை. அது வொருபத்ததியிலும் இது வொருபத்ததியிலுமாக இடம்மாறியேயுள்ளது. ஸ்தலபேத மிருந்தாலும் இரண்டையும் சேரப்பிடித்து அநுபவிக்கவேணுமென்பது ஆசிரியரின் திருவுள்ளம். அப்படியே யநுபவிப்போமிங்கு.

பாதுகைக்குத் திருவடிகளில் அநுராக முண்டானமைக்கு ஹேது கூறுகின்ற ச்லோகமிது காணீர்;—

योषिद्भूतद्दपन्त्यपोढशकटस्थेमानि वैमानिकस्रोतस्विन्युपलम्भनानि भसितोदञ्चत्परीक्षिन्ति च ।
दूत्यादिष्वपि दुर्वचानि पदयोः कृत्यानि मत्वेव यद्वत्ते तत्प्रणयं तदेव चरणत्राणं वृणे रङ्गिणः ॥ (३-९)

யோஷித்பூதத்ருஷந்தி அபோடசகடஸ்தேமாநி வைமாநிக
ஸ்ரோதஸ்விந்யுபலம்பநாநி பஸிதோதஞ்சத் பரீக்ஷிந்தி ச.
தூத்யாதிஷ்வபி துர்வசாநி பதயோ: க்ருத்யாநி மத்வேவ யத்
தத்தே தத்ப்ரணயம் ததேவ சரணத்ராணம் வ்ருணே ரங்கிண:.

(இதன் கருத்து வருமாறு.) இத் திருவடிகள் கல்லைப் பெண்ணுக்கியவை, சகடத்தைச் சாடியவை, கங்கைநீர் கான்றவை, கரியாய்ப்போன உத்தரையின் கருவை உய்யக் கொண்

டவை, பாண்டவர்களுக்காகத் தூது செல்லவும் துணியுமவை என்று இங்ஙனே சில காரியப் பெருமைகளைக் கணிசித்து பாதுகை இத் திருவடிகளோடு நேசங்கொண்டதாம். பிறகு வெறுப் புண்டாகி விட்டகன்றமைக்குக் காரணம் கூறும் சுலோகமுங் கேளீர்;—

भृशातुरसहोदरप्रणयभञ्जनस्वैरिणा पदेन किमनेन मे वनमिहावनादिच्छता ।
इतीव परिहाय तन्निववृते स्वयं यत्पुरा पदत्रमिदमाद्रिये धृतजगत्त्रयं रङ्गिणः ॥ (५·२)

ப்ருசாதுரஸஹோதர ப்ரணயபஞ்ஜநஸ்வைரிணா
பதேந கிமநேந மே வநமிஹாவநாதிச்சதா.
இதீவ பரிஹாய தத் நிவவ்ருதே ஸ்வயம் யத் புரா
பதத்ரமிதமாத்ரியே த்ருதஜகத்த்ரயம் ரங்கிண:. (5-2.)

(இதன் கருத்தாவது) * (भ्रातुः) ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்து மர்ஹஸி* என்று துடித்துத் துவண்ட பரதாழ்வானுடைய கோரிக்கையை நிறைவேற்ற கில்லாமல் [அவன் பக்கலிலே அன்பு காட்டமாட்டாமல்] வனமேமேவிச் செல்லலுற்ற இத் திருவடியோட்டைச் சேர்த்தி நமக்கேதுக்கு? என்று வெறுத்துவிட்டுத் திரும்பியதாம் பாதுகை.

இவ்விரண்டு உக்தி விந்யாஸங்களிலும் சமத்காராதிசய முள்ளதென்னு மிடத்தில் ஐயமில்லை. ஆனால் சொன்ன சரித்திரங்களெல்லாம் பெருமாள் செய்தவையேயன்றி, தனிப் படத் திருவடி செய்தவையல்ல. கல்லைப் பெண்ணாக்கியவன் திருவடியினால் இராமபிரான். சகடம் சாடியவன் திருவடியினால் கண்ணபிரான்; மருமகன்றன் சந்ததியை உயிர்மீட்டவனும் திருவடியினால் கண்ணபிரான். கங்கைநீர் கான்றவர் திருவடியினின்று உலகளந்த பெருமாள். *கோதில் செங்கோல் குடைமன்னரிடைத் தூது சென்றவன் வாஸுதேவன். பித்ருவாக்ய பரிபாலன ச்ரத்தையினால் அயோத்திக்கு மீளகில்லேனென்று சொல்லி வனமே மேவலுற்ற வர் பெருமாள். ஆக இந்தச் சரிதைகள் யாவும் எம்பெருமானை நோக்கி யுரைக்கத் தக்கவை. திருவடிகளுக்கு ஸ்வாதந்த்ர்யேண இவற்றில் ஒரு அந்வயமில்லை. முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் சரண சப்தார்த்த விவரணத்தில்—"பிராட்டியு மவனும்விடிலும் திருவடி கள் விடாது; திண்கழலாயிருக்கும்" என்று பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த சாயையிலே பகவத்க்ருத்யங்களைத் திருவடிகளின் மீதேற்றி யருளிச்செய்தவித்தனை.

இதுபோலவே இந்த தயாசதகந்தன்னிலும் பரமதயாளுவான எம்பெருமானுடைய செயல்களையே தயையின் மீதேற்றி யருளிச் செய்கிறபடி. இதற்கும் இரண்டு சுலோகங்களை மட்டும் இங்கெடுத்துக் காட்டுவோம்.

अचिदविशिष्टान्प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा ।
करणकलेवरयोगं वितरसि वृषशैलनाथकरुणे ! त्वम् ॥ १७ ॥

அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா,
கரணகலேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாத கருணே! த்வம். (17)

இதன் கருத்து;—பிரளயத்தில் அசித்தோடு வாசியற்றுக்கிடந்த பிராணிகளை நோக்கி நிர்வேதங்கொண்ட ஸ்ரீ வேங்கடநாத பகவத் கருணையே! அவர்களுக்கு நீ கரணகளேபரப்ரதா னம் பண்ணுகிறாய் என்கை. இது பரமதயாளுவான எம்பெருமான் செய்தருளுகிற காரியமே யல்லது தயை தனித்துச் செய்யும் காரியமன்று. பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில்

"अचिदविशेषितान् प्रलयसीमनि संसरतः करणकलेवरैर्घटयितुं दयमानमनाः ।
वरद ! निजेच्छयैव परवानकरोः प्रकृतिं महदभिमानभूतकरणावलिकोरकिणीम् ॥"

அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத:
கரணகலேபரைர் கட்யிதும் தயமாந மநா:
வரத! நிஜேச்சயைவ பரவாநகரோ: ப்ரக்ருதிம்
மஹதபிமாநபூதகரணாவலி கோரகிணீம்.''

என்று விஸ்தரித் தருளிச்செய்த வர்த்தமே*அசிதவிசிஷ்டாந் ப்ரலயே*என்று உபாத்தமான (தயாசதக) ச்லோகத்தில் ஸங்க்ஷிப்தமாகவுள்ளது. அசித்கல்பர்களான ஸம்ஸாரிகளை நோக்கி நிர்வேதங்கொள்ளுவதும், அந்த நிர்வேதத்தாலே அவர்கள் (भोग) போகமோக்ஷ யோக்யராம்படி கரணகலேபரப்ரதானம் பண்ணுவதும் பகவத்க்ருத்யமேயாகும். பட்டருடைய ச்லோகத்தில் இங்ஙனேயாயிற்றுச் சொல்லிற்று. மூலப்ரமாணமும் "एवं संसृतिचक्रस्थे भ्राम्यमाणे स्वकर्मभिः। जीवे दुःखाकुले विष्णोः कृपा काऽप्युपजायते—ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே து:க்காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே,'' என்றோதிற்று. ஸ்வயம் நிர்வேதரூபமான தயைக்கு நிர்வேதமுண்டானதாக இங்கு ஸ்வாமி யருளிச்செய்வதும், அதுதானே கரணகளேபரப்ரதானம் பண்ணுவதாக வருளிச் செய்வதும் பகவத்க்ருத்யத்தையே தயையின்மீ தேறிட்டுப் பணித்தபடி யென்று பாங்காக வறிய எளிது,

இங்ஙனே மற்றொரு ச்லோகமும் கேளீர்;—

निषादानां नेता कपिकुलपतिः काऽपि शबरी कुचेलः कुब्जा सा व्रजयुवतयो माल्यकृदिति।
अमीषां निम्नत्वं वृषगिरिपतेरुन्नतिमपि प्रभूतैस्स्रोतोभिः प्रसभमनुकम्पे! समयसि॥ (६५)

நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ
குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி;
அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதே ருந்நதிமபி
ப்ரபூதைஸ் ஸ்ரோதோபி: ப்ரஸபமநுகம்பே! ஸமயஸி. (65)

இதன் கருத்து;—குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர் ச்ரமணி குசேலர் கூனி ஆய்ப்பெண்கள் மாலாகாரர் என்னுமிவர்களின் தாழ்மையையும் திருவேங்கடமுடையானுடைய மேன்மையையும் ஓ கருணையே! நீ உனது பெருவெள்ளத்தினால் ஸமநிலைப் படுத்துகிறாய் என்கை. எம்பெருமானே! நீ இருகரையு மழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவனாகையாலே தனது மேன்மையைப் பாராமல் குஹப்பெருமாள் முதலான தண்ணியரோடும் கலந்து பரிமாறினாய் என்கிற விவக்ஷிதம் இங்ஙனே பரிணமித்ததாயிற்று. தயாளுவின் காரியத்தைத் தயையின்மீதேற்றி யருளிச்செய்தாரென்கை. ஆகவே, தயாசதக மென்னும் வ்யபதேசம்போலே தயாளுசதக மென்னும் வ்யபதேசமும் இந்த ஸ்துதிதனக்கு ஏற்கும் இதிலுள்ள சப்தாலங்காரங்களும் அர்த்தாலங்காரங்களும் ஸ்வாமியின் திருவுள்ளத்தையும் உளுக்கியவையென்பது முடிவில் இரண்டு ஸூக்திவிந்யாஸங்களினால் தெரியவரும். (107ல்) * पथ्यानामिह . . . धूतचूतनयतः सांपातिकोऽयं क्रमः—பத்யாநாமிஹ யத்விதேய பகவத் ஸங்கல்ப கல்பத்ருமாத் ஜஞ்ஜா மாருத தூத சூதநயதஸ் ஸாம்பாதிகோயம் க்ரம:* என்றருளிச் செய்தார். ஓட்டுமாங்கனிகள் நிறைந்த மாம்பொழிலிலே பெருங்காற்றுப்புக, அக்கனிகள்தானே பலபலவென்று உதிருமாபோலே, கனிந்த பகவத்ஸங்கல்ப கல்ப வ்ருக்ஷத்திலே காருண்ய மாருதம் வீசினவாறே உதிர்ந்த கனிகளாம் தயாசதக திவ்ய ச்லோகங்கள். இறுதி ச்லோகத்தைத் தலைக்கட்டுகிறார் * निष्प्रत्यूहवृषाद्रिनिर्झरझरत्कारच्छलेनोच्चलन् दीनालम्बनदिव्यदम्पतिदयाकल्लोलकोलाहलः—நிஷ்ப்ரத்யூஹவ்ருஷாத்ரி நிர்ஜ்ஜர ஜரத்காரச்சலேநோச்சலந் தீநாலம்பநதிவ்யதம்பதி தயா கல்லோல கோலாஹல:* என்று. *தெழிகுரலருவித் திருவேங்கடத்தில் தட்டுத் தடங்கலின்றியே பெருகு மருவியேபோன்று ஊற்று மாறாதே பெருகின தயாதரங்க கோலாஹலமே இந்த ஸ்துதிரூபமாகப் பரிணமித்ததென்னத் தட்டில்லை,

கூரத்தாழ்வா னருளிச் செய்த வரதராஜஸ்தவம் பத்து தசகங்கள் கொண்டதாய் ஒவ்வொரு தசகமும் ஒவ்வொரு வ்ருத்தத்திலே அமைக்கப்பட்டுள்ளது போலவே இந்த சதகத்திலும் தசகந்தோறும் வ்ருத்தபேதம் அமைக்கப்பட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. வரதராஜஸ்தவத்தில் அநுஷ்டுப்வ்ருத்தம் அடியோடு கிடையாது. இதில் முதல் தசகம் முழுதும் அநுஷ்டுப்பாக வமைந்தது. அந்த ஸ்தவத்தில் ஏழாவது தசகம் வ்ருத்த கதம்பகமாக அமைக்கப்பட்டு அதில் *நரஸிம்ஹ தநுரகௌணி* என்கிற ச்லோகமொன்றே ஆர்யா வ்ருத்தத்திலாயிற்று. இதில் இரண்டாவது தசகம் முழுதும் ஆர்யையிலாயிற்று. இங்ஙனே சில்வாசிகளுங் காண்க. இதிலுள்ள வ்ருத்தங்களின் வகைகள் க்ரமேண அந்தந்த தசகங்களின் வியாக்கியானத்தில் விளக்கப்படும். முதல் தசகம்'அநுஷ்டுப்பென்று காட்டியாயிற்று.

முக்கியமாக ஒரு விஷயம் விஜ்ஞாபித்து இவ்வவதாரிகை தலைக்கட்டப்படுகிறது. அடியேன் ஸங்க்ஹித காலத்தில் ஸ்ரீவரவரமுநி சதக வியாக்கியான லேகனத்தைத் தலைக்கட்டி ஸ்ரீ வரதராஜ பஞ்சாசத் வ்யாக்க்யான லேகனத்திலே வ்யாப்ருதனா யிருந்தேன். தயாசதக வியாக்க்யான விலேகனத்தைப்பற்றி ஸங்கல்ப முண்டாயிருந்ததில்லை. இது க்ரமேண ஸமயாந்தரே ஆகலாமென்றிருந்தேன். இருக்கையில் ஒரு ஸ்வப்ந ஸம்பவம்;

उत्तिष्ठोत्तिष्ठ तल्पात् निशमय वचनं मामकं प्रेमसान्द्रं
केचिन्मत्सूक्तिरत्नेष्वनघमनुपधि स्वादुमर्थं ग्रहीतुम् ।
शक्त्या रिक्ता अनर्थान् विदधति विवृतिच्छद्मना, तत्त्वसह्यं
दुःखं मे वारयंस्त्वं लिखलिख शतकव्याक्रियां प्राज्ञभोग्याम् ॥

इति वेङ्कटनाथगुरूत्तमवाक् महिता मधुरा ललिताऽधिगता ।
अत एव दयाशतकस्य विवृत्यभिलेखनमाशु तनोसि मुदा ॥

(இவ்விரண்டு சுலோகங்களின் கருத்து.) அடியேன் ஒருநாள் நித்ரையிலிருக்கையில் ஸ்வாமி கனவிலே காட்சி தந்தருளி 'துயில்விட்டெழுந்திரு; எனது அன்பார்ந்த வார்த்தையைக் கேள்; என்னுடைய ஸ்ரீ ஸூக்திகளில் மிகச் சிறந்த அர்த்தங்களை க்ரஹிக்கவில்லாத சிலர் வியாக்கியான மெழுதுவதாகப் புகுந்து அபார்த்தங்களைப் பொறித்து வைக்கின்றார்கள். என்னுடைய அஸஹ்யமான இந்த துக்கத்தைப் போக்கி மிகச் சிறந்த வியாக்கியானத்தை தயாசதகத்திற்கு விரைந்தெழுதக்கடவாய்' என்று நியமித்தருளலாயிற்று. அந்தத் திருவாணையைச் சிரமேற்கொண்டு இந்த வியாக்கியானத்தை விஜ்ஞாபிக்கின்றேனென்கை.

பகவத்கீதையின் முடிவில் "इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन । नचाशुश्रूषवे वाच्यं नच मां योऽभ्यसूयति ॥"—இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, நச அசுச்ருஷவே வாச்யம் நச மாம் யோப்யஸூயதி". என்று கீதாசார்யன் கட்டளையிட்டருளினன். அங்கு * ந ச மாம் யோப்யஸூயதி* என்றவிடத்தில் நம் ஸ்வாமி பாஷ்யம் செய்தருளுகிறார்—"मत्स्वरूपे मदैश्वर्ये मद्गुणेषु च कथितेषु यो दोषमाविष्करोति, न तस्मै वाच्यम् ; असमानविभक्तिनिर्देशः तस्यात्यन्तपरिहरणीयत्व ज्ञापनाय"*என்று. பகவத் குணங்களைத் தாம் சிந்தித்தாலும் குணாநுபவ நிஷ்ணாதர்கள் சொல்லக் கேட்டாலும் உள்குழைந்து நைந்து உருகவேண்டியிருக்க அது செய்யாததோடு அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்யப் புகுமவர்களுக்குச் சொல்லாதே யென்கை- தயையாவது பரதுக்க துக்கித்வம், வாத்ஸல்யமாவது தோஷபோக்யத்வம் என்றிங்ஙனே ச்ருதப்ரகாசிகாபட்டர் முதலானா ரருளிச்செய்தால் ஒருக்ஷணமும் ஸஹித்திருக்கவில்லாதே முஷ்டிபிடித்து வாதகேளிகளை வளர்க்குமவர்கள் தேசிக திவ்யஸூக்திவைதேசிகர்களென்னுமிடம் மேலே தத்தத்ப்ரகரணங்களிலே விசதிகரிக்கப்படுமாதலால் அன்னவர்கள் இத்தகைய திவ்யஸூக்திகளுக்கு நெடுந்தூரத்திலே வர்த்திக்கக் கடவர்களென்றதாயிற்று. ... *

வியாக்கியான அவதாரிகை முற்றிற்று.

श्रीश्रीनिवासपरब्रह्मणे नमः ॥



श्रीमद्वेङ्कटनाथार्यचरणौ शरणं वृणे ।
यौ ममोत्तंसतामेत्य ममैव शिरसि स्थितौ ॥

## ॥ दयाशतकप्रारम्भः ॥

# தயாசதகம்



प्रपद्ये तं गिरिं प्रायः श्रीनिवासानुकम्पया । इक्षुसारस्रवन्त्येव यन्मूर्त्या शर्करायितम् ॥ १ ॥

ப்ரபத்யே தம் கிரிம் ப்ராய: ஸ்ரீநிவாஸாநுகம்பயா,
இக்ஷுஸாரஸ்ரவந்த்யேவ யந்மூர்த்யா சர்க்கராயிதம், (1)

| | |
|---|---|
| இக்ஷுஸாரஸ்ரவந்த்யா சர்க்கராயிதம் இவ ஸ்ரீநிவாஸாநுகம்பயா யந்மூர்த்யா சர்க்கராயிதம் ப்ராய:, தம் கிரிம் ப்ரபத்யே. | கருப்பஞ்சாறுதானே கற்கண்டாகப் பரிணமிப்பது போலத் திருவேங்கடமுடையானுடைய திருவருளே திருமலையாகப் பரிணமித்ததோ! என்னலாம்படியுள்ள திருவேங்கடமலையைத் தொழுகின்றேன். |

*** இந்த சுலோகத்தில் அந்வயக்ரமம் கொள்ளவேண்டியபடியைப் பலர் மாறுபடுத்தியுள்ளார்கள். ஸ்வாமிக்கு விவக்ஷிதமான அந்வயக்ரமத்தை இங்ஙனே குறிக்கொண்மின்;— [इक्षुसारस्रवन्त्या यथा शर्करायते एवं श्रीनिवासानुकम्पया गिरिमूर्त्या शर्करायितम्—இக்ஷுஸாரஸ்ரவந்த்யா யதா சர்க்கராயதே, ஏவம் ஸ்ரீநிவாஸாநுகம்பயா கிரிமூர்த்யா சர்க்கராயிதம்] என்பது ஸ்வாமியின் திருவுள்ளம்' இந்த ஸ்துதிநூலானது தயாசதகமென்று திருநாமமுடைய கொண்டதற்குச் சேர "प्रपद्ये श्रीनिवासस्य दयाम्— ப்ரபத்யே ஸ்ரீநிவாஸஸ்ய தயாம்" என்று தொடங்கப்பட வேண்டியது முறை. அம்முறையைவிட்டு "கிரிம் ப்ரபத்யே" [திருமலையைத் தொழுகிறேன்] என்று உபக்ரமம் செய்யலாயிற்று. இது தகுதியோவென்கிற சங்கை தோன்றித் தீரும்; அதற்குப் பரிஹார முணர்த்தும் ப்ரக்ரியையிலே சுலோகம் அற்புதமாக அமைந்துள்ளது. எம்பெருமான்தான் அநேக திவ்ய மங்கள விக்ரஹபரிக்ரஹம் பண்ணுகிறுப்போலவும், பெரியபிராட்டியார்தாமும் அங்ஙனே பல திருமேனிகளைப் பரிக்ரஹிப்பது போலவும் தயாதேவியும் விக்ரஹ விசேஷங்களைப் ப'க்ரஹிப்பதுண்டு: முந்துற முன்னம் திருமலையாகிற திருவுருவத்தைப் பரிக்ரஹித்தாளாயிற்று, ஆகவே திருமலையைத் தொழுவதும் தயாதேவியைத் தொழுவதற்குப் பரியாயமேயாம் என்பது ஸ்வாமியின் திருவுள்ளம். இதன்மேல் ஒரு சங்கை தோன்றக்கூடியதுண்டு;- அதிஸரளப்ரக்ருதியான தயாதேவி அதிகர்க்கசமான கல்வடிவத்தைக் கொண்டாளென்றால் இது பொருத்தமாமோவென்று. இந்த சங்கையை த்ருஷ்டாந்த முகேந பரிஹரித் தருளுகிறார் இக்ஷுஸாரஸ்ரவந்த்யா இத்யாதியாலே. ரஸமயமான கருப்பஞ்சாறனது சர்க்கரா கண்டமாகப் பரிணமிப்பது காணாநின்றோம். இதனால் அதனுடைய ரஸமயத்வத்திற்கும் மாதுர்யத்துக்கும் ஒரு குறையுமில்லையே இதுபோல அதிஸரளப்ரக்ருதியான தயாதேவி மலையே திருவுடம்பாகப் பரிணமித்தாலும் அவ,

ளுடைய ஸாரள்யத்திற்கும் ஸாரஸ்யத்திற்கும் ஒரு குறையுமில்லையென்று காட்டுகிறபடி வடமொழியில் சர்க்கரா என்கிற பதம் நாநார்த்தகம்; சர்க்கரையென்கிற மதுர பதார்த்தத்திற்குப் பெயராயிருப்பதுபோல் கல்லுக்கும் பெயராயிருக்கும். இவ்விருபொருளையும் விவக்ஷித்தே இங்கு சர்க்கராயிதம் என்றருளிச்செய்தது. ஆகவே இதில் ச்லேஷம் [சிலேடை] என்று கொள்ளக்கடவது. இக்ஷுஸாரஸ்ரவந்தியானது சர்க்கரா ரூபத்தையடையாமல் அப்படியே யிருக்குமாகில் அதில் போக்யதை குன்றும்; வேறொரு ரூபத்தைப் பரிக்ரஹித்தே [த்ரவ ரூபத்தை விட்டுக் கடின ரூபத்தையடைந்தே] போக்யதை குன்றப் பெருமலிருக்குமென்பது ஸர்வாநுபவ ஸாக்ஷிகமாகையாலே தயாதேவிக்கும் ரூபாந்தரபரிக்ரஹம் ப்ராப்தமானது போக்யதாதிசயத்திற்காகவே யென்க.

நம்மாழ்வார் * உலக முண்ட பெருவாயனில் திருமலையை நோக்கியே தம்முடைய ப்ரபத்தியை ப்ரயோகித்திருக்கையாலே அதனையடியொற்றி இவரும் ப்ரபத்யே என்று தொடங்குகிறாராயிற்று. ப்ராய: என்னுமவ்யயம் ப்ரபத்யே என்கிற க்ரியையில் அந்வயிப்பதன்று; சர்க்கராயிதமென்பதில் அந்வயிப்பதாகும். * मन्ये शङ्के ध्रुवं प्रायो नूनमित्येवमादिभिः। उत्प्रेक्षा व्यज्यते शब्दैः इवशब्दोऽपि तादृशः॥ என்பது ஆலங்காரிக காரிகை. இதன்படி உத்ப்ரேக்ஷாலிங்கமாகவே இங்கு ப்ராய: பதம் பிரயோகிக்கப்பட்டது. ஸ்வாமியின் திவ்யக்ரந்தங்களில் இங்ஙனே ப்ரயோகம் பல விடங்களில் காணலாகும், * प्रायः प्रपदने पुंसां पौनःपुन्यं निवारयन् *प्रायेण देवि! भवतीव्यपदेशयोगात् * இத்யாதிகள் பரச் சதம் காண்க. ... ... (1)

विगाहे तीर्थबहुलां शीतलां गुरुसन्ततिम्। श्रीनिवासदयाम्भोधिपरीवाहपरम्पराम्॥ २॥

விகாஹே தீர்த்தபஹுலாம் சீதலாம் குருஸந்ததிம்.
ஸ்ரீநிவாஸதயாம்போதி பரீவாஹ பரம்பராம். (2)

| | |
|---|---|
| ஸ்ரீநிவாஸதயா அம்போதி பரீவாஹபரம்பராம் தீர்த்தபஹுலாம் சீதலாம் குருஸந்ததிம் விகாஹே. | திருவேங்கட முடையானுடைய அருள் வெள்ளத்தின் பரீவாஹபரம்பரைபோன்றதாய், தீர்த்தங்களினால் நிறைந்ததாய் (?) ஆசார்ய ப்ரசுரமாய் சீதளமாயிராநின்ற குரு பரம்பரையிற் படிகின்றேன். |

*** ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்னம் தொடங்கும்போது [*நமோசிந்த்யாத்புதேத்யாதியாலே] ஆசார்ய வந்தன பூர்வகமாகத் தொடங்கினவிடத்து ஸ்தோத்ர பாஷ்யத்தில் ஸ்வாமி "भगवद्वन्दनं स्वाद्यं गुरुवन्दनपूर्वकम्। क्षीरं शर्करया युक्तं स्वदते हि विशेषतः॥" என்றருளிச்செய்தவராகையாலே ஆசார்ய வந்தன பூர்வகமாக ஸ்துதியிலிறங்க வேணுமென்று திருவுள்ளம் பற்றினர். அதை இந்த சுலோகத்தினால் ஒரு சமத் காரமாகச் செய்தருளுகிறார். யதிராஜ ஸப்ததியில் * கமப்யாத்யம் குரும் வந்தே *என்று தொடங்கி பெருமாள் பெரிய பிராட்டியார் சேனையர்கோன் நம்மாழ்வார் ஸ்ரீமந்நாத முனிகள் உய்யக்கொண்டார் மணக்கால் நம்பி ஆளவந்தார் பெரிய நம்பி ஆகிய இவ்வாசாரியர்களைத் தனித்தனி ஒவ்வொரு சுலோகத்தினால் உபச்லோகித்தருளினர். இதில் ஆசாரியர்களுக்காக (இந்த) ஒரு சுலோகமும், ஆழ்வார்களுக்காக அடுத்த சுலோகமும், மஹரிஷிகளுக்காக அதற்கடுத்த சுலோகமும் அருளிச்செய்கிறாராயிற்று. குருமரம்பராவகாஹந ப்ரதிபாதகமான இந்த சுலோகத்திலும் திருவேங்கடமுடையானுடைய தயாப்ரஸ்தாவம் இல்லாமலிருக்கத் தகாதென்று திருவுள்ளம் பற்றிய ஸ்வாமி தாம் அவகாஹிக்க நினைக்கும் குருபரம்பரைக்கு ஸ்ரீநிவாஸதயாம்போதி பரீவாஹபரம்பராம் என்று விசேஷணமிட்டருளுகிறார், கீழ் ச்லோகத்தில் ஸ்ரீநிவாஸனுடைய தயை திருமலையாக வடிவெடுத்ததென்றருளிச் செய்தார். இதில் அந்த தயாபயோ நிதியின் பரீவாஹ பரம்பரைதான் ஆசார்ய ஸந்ததியென்கிறார். பவபூதி மஹாகவி உத்தரராம சரிதத்தில் * பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா * என்றான். நீர் நிலை தரிப்பதற்காகக் கலுங்கலெடுத்துவிடுவதற்குப் பரீவாஹக்ரியையென்று பெயர். ஏரிகளில் இதை ப்ரத்யக்ஷமாகப் பார்க்கிறோம்

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமத் வரவர முநயே நம:







பிரதிவாதி பயங்கரம் அண்ணா அருளிச்செய்த

# ஸ்ரீ வரவரமுநி சதகம்

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய ஸாரார்த்த ப்ரகாசிகா என்னும் வியாக்கியானத்துடன் கூடியது

மாயி மதங்கஜ மஸ்தக கோடீ பாடந பாடல பாணிதலோ ய:
ச்ருத்யடவீகுஹரேஷு ஸமிந்தே ஸ ப்ரதிவாதி பயங்கரஸிம்ஹ:

## வியாக்கியான அவதாரிகை

மாஞானிகளால் இருள் தருமா ஞாலமென வழங்கப்படும் இவ் விபூதியில் வகுளபூஷண பாஸ்கர லோக திவாகராதிகளான ஆழ்வார்களும் ஸ்ரீ ராமானுஜ திவாகராதிகளான ஆசாரியர்களும் திருவவதரித்துக் கலியிருளையும் அகவிருளையும் ஸதுபதேச ஸத்க்ரந்த நிர்மாணாதிகளாலே தொலைத்திருக்கச் செய்தேயும், பண்டு ஓர் ஆசார்யராலும் ஆகாத காரியத்தைப் பிள்ளை லோகாசாரியர் மூலமாகச் செய்வித்தருளத் திருவுள்ளம்பற்றிய எம்பெருமான் ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதுவான அம் மஹாசார்யரையும் அவருடைய திருத்தம்பியாரையும் திருவவதரிப்பித்து அவ் விருவர் முகேந அரிய பெரிய திவ்ய ஸூக்திகளை அவதரிப்பித்தருளினான். வ்யாஸ மஹர்ஷி ப்ரஹ்ம ஸூத்ரமாகிற சாரீரகமீமாம்ஸையை இயற்றியிருந்தும், பாஷ்யமின்றிக்கே அதன் பொருள் அறிவரிதென்று கருதிய கடல்வண்ணன் பகவத் பாஷ்யகாரரான எம்பெருமானாரைத் திருவவதரிப்பித்தருளினாப்போலே, அவரையே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரிப்பித்து முந்தின திருவவதாரத்தில் சேஷித்த க்ருத்யங்களை மாமுனிகளைக் கொண்டு நிறைவேற்றுவித்தான் ஸத்யஸங்கல்பன்.

மணவாள மாமுனிகளைப் போன்ற ஆசார்யர் முன்பு அவதரித்ததுமில்லை, இனி அவதரிக்கப்போகிறதுமில்லை. "उपमानोपमेयत्वं यदेकस्यैव वस्तुनः—உபமாநோப மேயத்வம் யதேகஸ்யைவ வஸ்துந:" என்னும்படியான அநந்வயாலங்காரத்திற்கு ஆசார்ய வர்க்கத்தில் லக்ஷ்யம் காட்டவேணுமானால் மணவாள மாமுனிகளையன்றி வேறொருவரையும் காட்டவொல்லாதென்பது நிர்மத்ஸர விவேகி ஸமுதாய ஸம்மதமானதே.

ஸ்வாமிமா முனிகள் திருவரங்கம் பெரிய கோயிலிலே அழகிய மணவாளனும் அடிபணிந்து அர்த்த விசேஷங்கள் கேட்கும்படி விலக்ஷண சிஷ்யஸம்ருத்தியுடன் வாழ்ந்தருளுங் காலத்திலே, ஸ்ரீ காஞ்சீபுரியிலே திருத்தண்காவில் திருவவதரித்து ஸ்ரீமங்கயன வரதாசார்யர் ஸ்வாமி பக்கலிலே அத்யாத்ம வித்யாக்ரஹணம் பண்ணி ப்ரதிவாதி பயங்கரரென்னும் விருது பெற்ற

அண்ணு திருமலையில் எழுந்தருளியிருந்து திருவேங்கடமுடையானுக்குத் திருமஞ்சன கைங்கர்யம் செய்துகொண்டிருக்கையில், நம்பெருமாள் ஸந்நிதியில் நின்றும் யாத்ருச்சிகமாக அங்கு வந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் முகமாகக் கோயிலிலே வாழ்ந்தருளும் மணவாள மாமுனிகளின் அப்ரதிம வைபவங்களைக் கேட்டு அவர் திருவடிகளிலே பணிந்து ஸத் ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்களை யுணர்ந்து உய்யக் கருதி, அன்றே திருவேங்கடமுடையான் பக்கலில் விடைபெற்றுக் கொண்டு, பயணகதியிலே கோயிலேறவந்து சேர்ந்து மணவாள மாமுனிகள் திருவடிகளிலே ஸகுடும்பமாக ஆச்ரயித்துத் திருவிலச்சினை பெற்று, * वरवरमुनितां याते यतिराजे सकललोकजीवातौ। श्रीवादिभीकरोऽभूत् श्रीमान् श्रीवत्सचिह्नमिश्रोऽपि॥ வரவரமுநிதாம் யாதே யதிராஜே ஸகல லோகஜீவாதௌ, ஸ்ரீவாதி பீகரோபூத் ஸ்ரீமாந் ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரோபி, * என்கிற படியே எம்பெருமானார்க்குக் கூரத்தாழ்வான்போலே மாமுனிகளுக்கு சிஷ்யாக்ரேஸரராய் உசாத்துணையாயிருந்து வாழுங்காலத்திலே ஆசார்யப்ரேமம் கனத்து வட மொழி தென் மொழிகளிலே மாமுனிகள் விஷயமாகச் சில ஸ்தோத்ர க்ரந்தங்களை விண்ணப்பம் செய்தாரென்று ப்ரஸித்தமாயிருக்கும், அவற்றிலே தலைமை பெற்றதான இந்த சதகம் சப்தபுஷ்டி அர்த்த புஷ்டி முதலானவற்றால் கவிகளுக்கும் வித்வான்களுக்கும் பக்தர்களுக்கும் கர்ணாம்ருதமாய் விளங்கா நிற்கும். இதில் அலங்காரபுஷ்டி அதிசயித்திருக்குமென்பதை அநுபவரஸிகர்கள் அறியக்கடவர்கள். இதுதனக்கு நாதிவிஸ்தரஸம்க்ஷேபமாக வியாக்கியானமொன்றைப் பல மஹான்களின் நியமனமடியாக விஜ்ஞாபித்து ஸத்தைபெற முயல்கின்றேன். குற்றங்குறைகளைந்து குணலேசமுண்டாகிற் கொள்வது பெரியோர் கடமை.

இந்த சதகம் தெலுங்கு லிபியில் இருமுறையும், தேவநாகரலிபியில் இருமுறையும் அச்சேறியிராநின்றது. ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர்களுக்குப் பெரும்பாலும் கண்ட பாடத்திலுமுள்ளது. ஆயினும் ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமி திருமாளிகையில் ஹயவதந லீலாஸதனத்தில் சிதிலமான தாளகோசமொன்றே யிருப்பதனால் பாடஸந்தேஹம் நேருமிடங்களில் துணிந்து நிர்ணயிப்பதற்கு ஸௌகரியமில்லையா யிருக்கின்றது. ஆனாலும் ஒருவாறு நிர்ணயித்தே வியாக்கியானிக்கப்படுகின்றது. எறும்பியப்பாபணித்த சதகம் பெரும்பாலும் மந்தாக்ராந்தாவ்ருத்தத்திலே யமைந்தது. இந்த சதகம் பெரும்பாலும் ஸகல வ்ருத்தங்களும் அமையப்பெற்றுள்ளது. அன்றியும், உபமை ச்லேஷம் [சிலேடை] என்னு மலங்காரங்கள் இதில் அற்புதமாகவும் அநாயாஸஸித்தமாகவும் விளங்குவதால் உத்தமகாவ்யங்களிலே பரிகணநீயமாகவுள்ளது. ஸ்தோத்ரக்ரந்தங்களில் இதுபோன்ற நூல் வேறொன்று புலப்படவில்லையென்று துணிந்து சொல்லலாம்.

திருவல்லிக்கேணியி லேழுந்தருளியிருந்த விமர்சகுசல பண்டிதோத்தமரான ஸ்ரீமத் கவிபூஷண குமார தாதாசார்ய ஸ்வாமியின் திருமுன்பே (ஐம்பதாண்டுகட்குமுன்பு) இந்த சதகத்தை ஒருமுறை விஜ்ஞாபிக்க நேர்ந்தது. அப்போது அந்தஸ்வாமி அனேக ச்லோகங்களை மூன்று நான்குபர்யாயமும் சொல்லச் சொல்லிக் கேட்டு இந்த ரசநாவைகரியில் மிக மிக ஈடுபட்டு, அப்போது தாம் பதிப்பித்த ஸ்தோத்ரார்ணவத்தின் மூன்றாவது ஸம்புடத்தில் இதனைப் பதிப்பித்துள்ளார்.

இந்த உத்தமோத்தம காவ்யத்தை வியாக்கியானிக்கப் பர்யாப்தமான பாண்டித்யம் அடியேன்பால் இல்லையென்பது ஸத்யம். ஆனதுபற்றியே இதுகாறும் இதை வியாக்கியானிக்கப் புகுந்திலேன். கோயிலில் வாழும் ஸம்ருதய ரஸிகமணியான திருமலையனந்தாண்பிள்ளை. சதாபிஷேகாசாரியர் ஸமீபகாலத்தில் வற்புறுத்தித் தெரிவித்ததனால் மணவாள மாமுனிகளும் அழகிய மணவாளனும் அவரையிட்டு நியமித்தருள்வதாகக் கொண்டு வியாக்கியானிக்கத் துணிந்தெழுந்தேன். அர்த்தம் ஸ்புரியாத விடங்களிலே மணவாள மாமுனிகளின் திருவடிகளைச் சிந்தனை செய்து ஸ்புரிக்கப்பெற்ற அதிசயம் ஆத்மைகவேத்யம். ... ... ...

வியாக்கியானாவதாரிகை முற்றிற்று.

# ஸ்ரீ

# ஸ்ரீ வரவரமுநி சதகப்ராரம்பம்



मूलेऽवतीर्णमिह मूलमनूदितार्थतत्वावबोधसुखितां वसुधां विधातुम्।
रामानुजार्यचरणाम्बुजचञ्चरीकं रम्योपयन्तृयमिनं शरणं प्रपद्ये ॥ १ ॥

மூலேவதீர்ணமிஹ மூலமநூதிதார்த்த தத்வாவபோதஸுகிதாம் வஸுதாம் விதாதும்,
ராமாநுஜார்ய சரணும்புஜ சஞ்சரீகம் ரம்யோபயந்த்ரு யமிநம் சரணம் ப்ரபத்யே. (1)

வஸுதாம் மூலமநு உதித அர்த்த தத்வ அவபோத ஸுகிதாம் விதாதும் மூலே இஹ அவதீர்ணம் ராமாநுஜார்ய சரணும் புஜ சஞ்சரீகம் ரம்யோபயந்த்ரு யமிநம் சரணம் ப்ரபத்யே.

பூமண்டலத்தை திருவஷ்டாக்ஷரமஹா மந்த்ரத்தில் சொல்லப்பட்ட அர்த்தங்களின் தத்துவத்தை யறிந்து இன்புறச் செய்வதற்காகத் திருமூல நன்னாளில் இந் நிலத்தில் திருவவதரித்தவரும் எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளில் வண்டு போல் ரமிப்பவருமான மணவாள மாமுனிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறேன்.

*** இந்த ஸ்துதி க்ரந்தம் இடையூறின்றி முடிவதற்காக மங்களா சரணமாக அமைந்தது இந்த ச்லோகம். எம்பெருமானுடைய அவதார ப்ரயோஜனம் கீதையில்* பரித்ராணாய ஸாதூநா மித்யாதியால் சொல்லப்பட்டது. ஆசாரியர்களின் திருவவதாரத்திற்கும் அவையே ப்ரயோஜநமா யிருக்கவடுக்கும். ஆனால், ஸமீசீனமான அர்த்த விசேஷங்களை உபதேசித்தருள்வதனாலும் ஏடுபடுத்தி வைப்பதனாலும் ஸாது பரித்ராணம் செய்ததாகும். புறச்சமயிகள் கூறும் அபார்த்தங்களை நிரஸித் தொழிப்பதனாலே துஷ்க்ருத்விநாசநம் செய்ததாகும். இங்கு [வஸுதாம் மூலமநூதிதார்த்த தத்வாவபோத ஸுகிதாம் விதாதும் மூலே அவதீர்ணம்] என்று திருமந்த்ரார்த்த தத்துவத்தை யுணர்த்தி உலகத்தை வாழ்விப்பதற்காகத் திருவவதரித்தருளினதாய்ச் சொன்னது ரஹஸ்யத்ரயமென்ன, தந்மூலகமான ஸகல சாஸ்த்ரங்களென்ன ஆக எல்லாவற்றினுடையவும் உண்மைப் பொருளை வெளியிட்டருள்வதற்காகவே ஸ்வாமியின் திருவவதாரம் என்று சொன்னபடி. மநு: என்று மந்த்ரத்திற்குப் பெயர்; மூலமநு என்றது மூலமந்த்ர மென்றபடியாய் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தைச் சொன்னபடியாம். "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவ ஆதர்வணாநி ச, ஸர்வமஷ்டா க்ஷராந்தஸ்ஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம்" என்கிறபடியே ஸகல வேத சாஸ்த்ரங்களும் அஷ்டாக்ஷர அந்தர்க்கத மாகையாலே ஸகலார்த்த தத்துவத்தையு முணர்த்தி லோகோஜ் ஜீவனார்த்தமாகவே ஸ்வாமியின் திருவவதார மென்றதாயிற்று. ராமாநுஜார்யசரணும்புஜசஞ்சரீகமென்பதனால் யதீந்த்ரப்ரவண திருநாமத்தை விவரித்தபடி. ரம்யோபயந்தா, காந்தோபயந்தா, ரம்யஜா மாதா— இவை பர்யாயம். ... (1)

यद्वतरणमूलं मुक्तिमूलं प्रजानां शठरिपुमुनिदृष्टाम्नायसाम्राज्यमूलम्।
कलिकलुषसमूलोन्मूलने मूलमिन्धे स भवतु वरयोगी नस्समस्तार्थमूलम् ॥ २ ॥

யதவதரணமூலம் முக்திமூலம் ப்ரஜாநாம் சடரிபுமுநித்ருஷ்டாம்நாயஸாம்ராஜ்யமூலம்
கலிகலுஷஸமூலோந்மூலநே மூலமிந்தே ஸ பவது வரயோகீ நஸ் ஸமஸ்தார்த்தமூலம். (2)

| | |
|---|---|
| யத் அவதரணமூலம் ப்ரஜாநாம் முக்திமூலம், சடரிபு முநித்ருஷ்ட ஆம்நாய ஸாம்ராஜ்ய மூலம், கலி கலுஷஸமூல உந்மூலநே மூலம் இந்தே, ஸ: வரயோகீ ந: ஸமஸ்தார்த்த மூலம் பவது, | யாவரொரு மணவாள மாமுனிகளின் திருவவதார நன்னாளாகிய திருமூலமானது ஸகல ஜனங்களுக்கும் முக்தி மூலமாகவும், த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதையின் ஸர்வதோமுகமான வெற்றிக்கு மூலமாகவும், கலிகல்மஷத்தை வேரறவறுப்பதற்கு மூலமாகவும் விளங்குகின்றதோ, அந்த மணவாள மாமுனிகள் நமக்கு ஸகலார்த்த ஸித்திக்கும் அடியாகக்கடவர். |

*** இந்த ச்லோகத்தினால் மணவாள மாமுனிகளின் *அழகு திகழ்ந்திடு மைப்பசியில் திருமூல நன்னாளின் சிறப்பை யனுபவிக்கிறார். *யந்மூல மாச்வயுஜமாஸ்யவதார மூலம்* என்கிற எறும்பியப்பாவின் சுலோகத்திற் காட்டிலும் மேம்பட்ட முறையில் அவதரித்ததிது. [யதவதரண மூலம்] *செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடவும், சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடவும், மந்த மதிப்புவி மானிடர் தங்களை வானிலுயர்த்திடவும், மாசறு ஞானியர் சேரெதிராசர் தம் வாழ்வு முளைத்திடவும், கந்தமலர்ப் பொழில்சூழ் குருகாதிபர் கலைகள் விளங்கிடவும், *காரமர் மேனியரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடவும் அந்தமில் சீர் மணவாள முனிப்பர னவதாரஞ் செய்த ஐப்பசியில் திருமூல நன்னாளானது. [ப்ரஜாநாம் முக்தி மூலம்] "மந்த மதிப்புவிமானிடர் தங்களை வானிலுயர்த்திடு நாள்" என்கிற படியே *அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக் கடலுள் நின்று துளங்கும் மக்களுக்கெல்லாம் நற்கதி நண்ணுவதற்கு மூலமாயிருக்கும். எம்பெருமானுடைய *அலம்புரிந்த நெடுந்தடக்கைக்கு மெட்டாதவர்களாய் * நானே நானாவித நரகம் புகும் பாவஞ் செய்தேன்* என்றிருக்குமவர்களான ஸம்ஸாரிகளனைவரும் மாமுனிகளின் திருவடி ஸம்பந்தத்தாலேஉய்ந்து போனார்களிறே. [சடரிபு முநித்ருஷ்ட ஆம்நாய ஸாம்ராஜ்ய மூலம்] "சேற்றுக் கமல வயல் சூழரங்கர்தம் சீர்தழைப்பப், போற்றித் தொழு நல்ல வந்தணர் வாழவிப் பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே" என்று அக்காலத்திலேயே அநுஸந்தித்துப் போந்தார்களிறே. மணவாளமாமுனிகளின் ரஹஸ்ய வ்யாக்கியான ஸ்ரீஸூக்திகள் அவதரித்திலவாகில், நம்பிள்ளை ஸ்ரீஸூக்திகளவதரித்திருந்தும் பயனொன்றுமில்லை யாகுமன்றோ. சடரிபு முநித்ருஷ்டாம்நாயமென்று திருவாய்மொழியை மட்டும் சொல்லுகிறதன்று; "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்கிறபடியே அருளிச்செயலனைத்தும் நம்மாழ்வார் திருவாக்கிலிருந்தே ஆவிர்ப்பூதமாகையாலே ஸகல திவ்ய ப்ரபந்தங்களையுஞ் சொல்லுகிறது. அவை வடமொழி மறையினும் விஞ்சி வீறுபெற்று விளங்குவதற்கு மூலகாரணம் மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளே யாதலால் இங்ஙனே யருளிச்செய்யக் குறையில்லை.

[கலிகலுஷ ஸமூலோந் மூலநே மூலம் இந்நே] "கலியுங்கெடுங் கண்டு கொண்மின்" என்கிற நம்மாழ்வார் திருவாக்கின்படி திருமங்கையாழ்வாரும் எம்பெருமானாரும் திருவவதரித்துக் கலியிருளைக் கடிந்திருக்கச்செய்தேயும் அதில் சேஷம் கிடந்தபடியாலே நிச்சேஷ நிபர்ஹணம் ஸ்வாமி திருவவதாரத்தாலேயாயிற்று. [ஸ: வரயோகீ ந: ஸமஸ்தார்த்த மூலம் பவது] கீழ்ச் சொன்ன பெருமைகளுக்கெல்லாம் நிதியான மாமுனிகளின் திருவருளாலே நமக்கு ஸகலார்த்த ஸித்தியுமுண்டாகுக வென்கை. வேத வேதாந்த வேதாங்கங்களிலுள்ள ஸகலார்த்தங்களும் மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளில் பொதிந்து கிடக்கையாலே அவ்வர்த்த விசேஷங்களெல்லாம் நமக்குக் கை வந்ததாம் படி க்ருபை செய்தருள வேணுமென்றதாயிற்று. ... (2)

जनिविपदपवादौ यस्य पादौ विदन्तः सततमपि महान्तस्स्वान्त एवोद्वहन्ति ।
स जयति भजदन्तर्ध्वान्तकल्पान्तभानुर्निरवधिगुणकान्तो हन्त कान्तोपयन्ता ॥ ३ ॥

ஜநிவிபதபவாதௌ யஸ்ய பாதௌ விதந்தஸ் ஸததமபி மஹாந்தஸ் ஸ்வாந்த ஏவோத்வஹந்தி,
ஸ ஜயதி பஜதந்தர்த்வாந்தகல்பாந்தபாநுர் நிரவதிகுணகாந்தோ ஹந்த! காந்தோபயந்தா. (3)

மஹாந்த: யஸ்ய பாதெள ஜநிவிபத் அபவாதெள விதந்த: ஸதமபி ஸ்வாந்தே ஏவ உத்வஹந்தி, பஜத் அந்தர் த்வாந்த கல்பாந்த பாநு: குணகாந்த: ஸ: காந்தோபயந்தா ஜயதி.

மேலோர்கள் யாவரொரு மணவாளமாமுனிகளின் திருவடிகளை ஸம்ஸாராநுபந்திகளான ஸகல துக்கங்களையும் போக்க வல்லனவாக அறிந்து அந்தத் திருவடிகளை நிச்சலும் தமது சிந்தையிலேயே தாங்கியிருக்கின்றார்களோ, பக்தர்களின் அகவிருளை அகற்றவல்ல விலக்ஷணஸூர்யனுகவும் ஸகலகுணுபிராமராகவுமுள்ள அந்த மாமுனிகள் ஸர்வோத்கர்ஷசாலியாய் விளங்குகின்றார்.

*** மணவாள மாமுனிகளின் செய்ய தாமரைத் தாளிணையின் சிறப்பைப் பேசுகிறார் பூர்வார்த்தத்தில். சாஸ்த்ரங்களில் விதி சாஸ்த்ரமென்றும் அபவாத சாஸ்த்ரமென்றும் ப்ரதிப்ரஸவ சாஸ்த்ரமென்றும் மூன்றுண்டு. முந்துறவுண்டான விதிக்கு விலக்கானது அபவாத சாஸ்த்ரமெனப்படும்; அதை விலக்கி விதி சாஸ்த்ரத்தையே ஸ்தாபிக்கவல்லது ப்ரதிப்ரஸவமெனப்படும். "அபவாதாபவாத: ப்ரதிப்ரஸவ:" என்பர் சாஸ்த்ரஜ்ஞர்கள். இங்கு மாமுனிகளின் திருவடிகளை ஜநி விபத்துக்கு அபவாதமென்றது சாஸ்த்ரஜ்ஞஸரணியிலே அவதரித்த திருவாக்கு. "ஜநுர் ஜநந ஜந்மாநி ஜநி ருத்பத்திருத்பவ:" என்ற அமரகோசத்தின் படியே ஜநியாவது பிறப்பு. "புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே சயநம்' என்கிற ஸம்ஸரணத்தைச்சொன்னபடி. அதற்கு அநுபந்திகளான விபத்துக்கள் பலவுண்டே "கொன்றுயிருண்ணும் விசாதி பகைபசி தீயனவெல்லாம்" என்றும் "போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை" என்றும் ஆழ்வாரருளிச்செய்தவை; அவற்றுக்கெல்லாம் [யஸ்ய பாதெள அபவாதெள விதந்த:] மணவாள மாமுனிகளின் திருவடிகளே நிவர்த்தகங்களென்று அறிந்தவர்களாய். இவ்வுணர்ச்சி ஸாமான்யர்களுக்கு உண்டாக மாட்டாதாதலால் [மஹாந்த:] என்கிறார். அவர்கள் தாம் செய்வதென்னென்னில், [ஸ்வாந்த ஏவ உத்வஹந்தி] 'தெள பாதாவேவ ஸ்வாந்தே உத்வஹந்தி' என்று யோஜிப்பது. ஸம்ஸாரபந்தஸ்திதி மோக்ஷ ஹேதுவான ஸ்ரீமந்நாராயண சரணங்களை விட்டு மாமுனிகளின் திருவடிகளையே அநவரதம் சிந்தனை செய்கின்றார்களென்கை. அப்படிப்பட்ட பெருமை பொலிந்த திருவடிகளையுடையரான மாமுனிகளின் பெருமை சொல்லுகிறது உத்தரார்த்தம். தம் அடி பணிந்தவர்களின் அகவிருளை அகற்றும் விஷயத்தில் கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்திருப்பர். அக்காலத்தில் உபதேச ரூபங்களான ஸ்ரீஸூக்திகளாலும், பிற்காலத்தில் ஸ்ரீகோச ரூபங்களான ஸ்ரீஸூக்திகளாலும் அகவிருளை அகற்றவல்லவர். மற்றும் கல்யாண குணங்களென்று பேர் பெற்றவை யெல்லாவற்றாலும் ஸ்ப்ருஹணீயராய் விளங்குபவர். ... ... (3)

इन्धे वाक्यविभूषणस्य महितं यद्भाषणं भूषणं यत्पादाम्बुरुहद्वयं सुमनसां मूर्ध्नस्सदा भूषणम् ।
यद्भक्ताङ्घ्रिरजःकणो वितनुते दुःखोदधेश्शोषणं वन्दे कान्तवरं मुनिं तमनघं नित्यं कलेर्भीषणम् ॥ ४ ॥

இந்தே வாக்யவிபூஷணஸ்ய மஹிதம் யத்பாஷணம் பூஷணம்
யத்பாதாம்புருஹத்வயம் ஸுமநஸாம் மூர்த்நஸ் ஸதா பூஷணம்
யத்பக்தாங்க்ரிரஜ:கணோ விதநுதே து:க்கோததேச் சோஷணம்
வந்தே காந்தவரம் முநிம் தமநகம் நித்யம் கலேர் பீஷணம். (4)

வாக்ய விபூஷணஸ்ய யத்பாஷணம் மஹிதம் பூஷணம் இந்தே; யத்பாதாம்புருஹத்வயம் ஸுமநஸாம் மூர்த்ந: ஸதா பூஷணம் இந்தே; யத் பக்த அங்க்ரிரஜ: கண: து:க்கஉததே: சோஷணம் விதநுதே; கலே: பீஷணம் அநகம் தம் காந்தவரம் முநிம் நித்யம் வந்தே.

ஸ்ரீவசன பூஷணத்திற்கு யாவரொரு மாமுனிகளின் வியாக்கியானமானது சிறந்த பூஷணமாக விளங்காநின்றதோ, யாவரொரு மாமுனிகளின் திருவடித் தாமரையிணையானது வித்வான்களின் முடிக்கு நித்ய பூஷணமாய் விளங்குகின்றதோ, யாவரொரு மாமுனிகளின் அடியார்களின் திருவடித்துகளின் லேசமும் ஸாம்ஸாரிக துக்கக் கடலை வற்றுவிக்கின்றதோ, கலி புருஷனுக்கு பயங்கரரும் ஹேயப்ரதிபடருமான அந்த மணவாள மாமுனிகளை நிச்சலும் தொழுகின்றேன்.

*** மணவாள மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் ஸ்ரீவசன பூஷணத்தின் பெருமையை ஏழு பாசுரங்களினால் அமோகமாக அருளிச்செய்துள்ளார். "साङ्गाखिलद्रविडसंस्कृतरूपवेदसारार्थसंग्रहमहारसवाक्यजातम् । सर्वज्ञलोकगुरुनिर्मितमार्यभोग्यं वन्दे सदा वचनभूषणदिव्यशास्त्रम्—ஸாங்காகிலத்ரவிட ஸம்ஸ்க்ருத ரூபவேத ஸாரார்த்த ஸங்க்ரஹ மஹாரஸவாக்ய ஜாதம், ஸர்வஜ்ஞலோக குரு நிர்மித மார்ய போக்யம் வந்தே ஸதா வசந பூஷண திவ்ய சாஸ்த்ரம்." என்கிறபடியே திவ்ய சாஸ்த்ரமாக ப்ரஸித்தமான ரஹஸ்யக்ரந்தம் வியாக்கியான மின்றிக்கே பயன் படாதாதலாலும், *சச்சம் பிரதாயம் தாமுடையோர் கேட்டக்கால், மெச்சு வியாக்கியைகளுண்டாகில்—நச்சியதிகாரியும்நீர் வசன பூடணத்துக்கற்ற மதியுடையீர்* என்று மாமுனிகள் தாமே யருளிச்செய்தபடி ஸத்ஸம்ப்ரதாய சுத்தியுள்ள வியாக்கியானம் அரிதாகி ஸ்வாமி யருளிச்செய்த வியாக்கியானமே விசதவாக் சிகாமணிகளென்கிற விருதை அந்வர்த்தமாக்க வல்லதாய் விளங்குகையாலும் இது ஸ்ரீவசன பூஷணத்திற்கு மிகச் சிறந்த பூஷணமாய் விளங்கும்படியை யருளிச்செய்கிறார் முதல் பாதத்தாலே. வஸ்துஸ்திதியில் மாமுனிகளின் வியாக்கியானம் அவதரித்ததில்லையாகில் ஸ்ரீவசந பூஷணம் காநநசந்த்ரிகையாகு மத்தனையிறே. திருவாக்கின் பெருமையைப் பேசின வனந்தரம் திருவடிகளின் பெருமையைப் பேசுகிறார் இரண்டாவது பாதத்தால். "கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்றும் "அடிச்சியோந் தலை மிசை நீயணியாய் ஆழியங் கண்ணாவுன் கோலப்பாதம்" என்றும் மநோரதிக்கை தவிர்ந்து மாமுனிகளின் திருவடிகளையே தம் தம் சென்னிக்கு மலர்ந்த பூவாகக் கொண்டிருப்பர்களாயிற்று மநீஷிணுமக்ரேஸரர்கள். இனி மூன்றாவது பாதத்தால் மாமுனிகளடியார்களின் ஸ்ரீபாத தூளிப்பெருமை சொல்லுகிறது. 'கடல் வற்றிற்று' என்னும் வார்த்தை ஒரு நாளும் கேட்டதில்லை. அது தன்னிலும் ரஜ:கணத்தாலே கடல் வற்றுகை ஸர்வாத்மநா அஸம்பாவிதம். "பறவையேறு பரம் புருடா! நீ யென்னைக் கைக்கொண்ட பின், பிறவியென்னும் கடலும் வற்றி" என்று பெரியாழ்வாரருளிச்செய்தது அத்யுக்தியென்னலாம்படி ஸ்ரீமத் வரவரமுநி பக்தர்களின் ஸ்ரீ பாத தூளியின் ஏக தேசமே ஸாம்ஸாரிக ஸகல துக்க ஸாகரசோஷண நிபுணமாயிரா நின்றதென்கிறார். அடியார்களின் பாதரஜ: பரமாணு பராக்ரமமிதுவானால் ஸ்வாமியின் திருவடித்துகள் பெருமை கிம்புநர்ந்யாய ஸித்தமிறே. [அநகம்] ஸதாசார்ய லக்ஷண ஸம்பத்தியில் குறையற்றவரென்கை. ... ... ... (4)

यत्पादाम्बुजसंश्रयेण विमला यल्लब्धबोधोज्वला यत्सेवैकरसास्स्वशिष्यनिवहव्याप्ताखिलाशान्तराः ।
प्रख्याता हि वरप्रदप्रभृतयस्ते नित्यसिद्धोपमास्तस्मात्कान्तवरान्मुनेरनुपमाद्दैवं परं नाद्रिये ॥ ५ ॥

யத்பாதாம்புஜஸம்ச்ரயேண விமலா யல்லப்தபோதோஜ்ஜ்வலா:
யத்ஸேவைக்த்யேகரஸாஸ் ஸ்வசிஷ்யநிவஹவ்யாப்தாகிலாசாந்தரா:
ப்ரக்க்யாதா ஹி வரப்ரதப்ரப்ருதயஸ் தே நித்யஸித்தோபமா:
தஸ்மாத் காந்தவராந்முநேரநுபமாத் தைவம் பரம் நாத்ரியே. (5)

நித்யஸித்தோபமா: வரப்ரதப்ரப்ருதய: தே யத் பாதாம்புஜ ஸம்ச்ரயேண விமலா:, யல்லப்த போத உஜ்ஜ்வலா:, யத்ஸேவைக்த்யேக ரஸா:, ஸ்வசிஷ்ய நிவஹ வ்யாப்த அகில ஆசாந்தரா:, தஸ்மாத் அநுபமாத் காந்தவராத் முநே: பரம் தைவம் நாத்ரியே.

நித்ய முக்தர்களையொத்த கோயிலண்ணன் முதலான அப்பெரியார்கள் யாவரொரு மாமுனிகளின் திருவடித் தாமரைகளைப் பற்றியதனால் நிர்மலர்களாயினரோ, யாவரொரு மாமுனிகள் பக்கலில் பெற்ற ஞானத்தினால் விளங்குகின்றார்களோ, யாவரொரு மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலேயே ரஸிகர்களாய் தங்கள் சிஷ்ய ஸமூஹங்களாலும் வியாபிக்கப்பட்ட ஸகல திங்மண்டலங்களையு முடையவர்களா யிருக்கின்றனரோ, அப்படிப்பட்ட நிகரற்ற மாமுனிகளிற் காட்டிலும் வேறொரு தெய்வத்தை ஆதரியேன்.

*** கோயிலண்ணன் முதலான சிஷ்யவர்க்கங்கள் பெருமை பெற்றதும் ஸ்வாமி ஸம்பந்தவிசேஷத்தினுலேயே யென்கிறது இந்த சுலோகம். கோயிலண்ணனுக்கு வரதநாராயணரென்று திருநாமமாகையாலே ததேகதேசத்தையிட்டு வரப்ரதரென்கிறது. மேலே 8,14 சுலோகங்களிலும் வரதகுருவென்பது இவரையே. மற்றும் வானமாமலை ஜீயர் ஸ்வாமி, பட்டர்பிரான்ஜீயர் ஸ்வாமி முதலான உத்தமாச்ரமிகள் மாமுனிகள் திருவடிகளிலே ப்ரவணர்களாயிருக்க அவர்களைவிட்டு இவரையெடுத்தது இவரிடந்துள்ள அஸாதாரணமான பெருமையையிட்டு. அதாகிறதென்னென்னில், இவர் அபிஜந வித்யாவ்ருத்தங்களோடு கூட சிஷ்ய ஸம்பத்தும் மிக்கவராகையாலே தம்முடைய ஆசார்ய பும்ஸ்த்வத்தை ஒன்றாக மதியாதே ஸ்வாமி திருவடிகளில் சிஷ்ய வ்ருத்தியே தமக்கு உஜ்ஜீவநஹேது வென்று அறுதியிட்டு ஆச்ரயித்ததேயாம். நித்யமுக்தர்களையும் ச்வேதத்வீபவாஸிகளையு மொத்திருப்பவர்களான விவர்கள் ஸ்வாமிதிருவடிகளிலே யாச்ரயித்து நிர்மலஜ்ஞாந நிதிகளாகப் பெற்றார்கள். இவர்களுக்கு ஸகலார்த்த விஜ்ஞானமும் மாமுனிகள் பக்கலிலேயாயிற்று. மாமுனிகளுக்குப் பணிவிடை செய்கையொழிய வேறென்றறியார்கள். தாங்களும் சிஷ்யவர்க்கங்களைத் திசை தோறும் படைத்தவர்கள். இத்தகைய சிஷ்ய ஸம்ருத்தி பொருந்தியவரான மாமுனிகளிற் காட்டிலும் வேறொரு தெய்வமிருப்பதாக மதிக்ககில்லேனென்றாராயிற்று. ... (5)

यत्सूक्त्येकरसा यदङ्घ्रियुगलीसेवैकहेवाकिनो यद्वात्सल्यदयादिसद्गुणगणाकूपारमग्नाशयाः ।
मन्यन्ते न परं विमुक्तिकरणं सन्तो यदालोकनात् तन्यान्नस्स शुभान्यवेलमहिमा कान्तोपयन्ता मुनिः ॥

யத்ஸூக்த்யேகரஸா யதங்க்ரியுகலீஸேவைகஹேவாகிந:
யத்வாத்ஸல்யதயாதிஸத்குணகணகூபாரமக்நாசயா:
மந்யந்தே ந பரம் விமுக்திகரணம் ஸந்தோ யதாலோகநாத்
தந்யாந்நஸ் ஸ சுபாந்யவேலமஹிமா காந்தோபயந்தா முநி:. (6)

யத்ஸூக்தி ஏக ரஸா: யத்அங்க்ரியுகளீ ஸேவைக ஹேவாகிந: யத்வாத்ஸல்ய தயாதி ஸத்குண கண அகூபாரமக்நாசயா: ஸந்த: யத்ஆலோகநாத் பரம் விமுக்திகரணம் ந மந்யந்தே, ஸ: அவேல மஹிமா காந்தோபயந்தா முநி: ந: சுபாநி தந்யாத்.

யாவரொரு மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலேயே ரஸிகர்களும், யாவரொருமாமுனிகளின் திருவடியிணைகளில் ஸேவைசெய்வதிலேயே ருசுஹூலங் கொண்டவர்களும், யாவரொரு மாமுனிகளின் வாத்ஸல்யம் தயை முதலான ஸத்குணஸமூஹஸாகரத்திலே ஆழ்ந்த மனமுடையவர்களுமான ஸத்துக்கள் யாவரொருமாமுனிகளின் கடாக்ஷ வீக்ஷணத்திற்கு மேற்பட்ட முக்திஸாதன மிருப்பதாக நினைக்கின்றிலர்களோ, அப்படிப் பட்ட அளவு கடந்த வைபவம் வாய்ந்த மணவாளமாமுனிகள் நமக்கு நன்மைகளை வளர்த்தருளவேணும்.

*** கீழ் ச்லோகத்தில் கோயிலண்ணன் முதலான ஸச்சிஷ்யவர்க்க ப்ரஸ்தாவமுண்டாகவே அவர்களின் பெருமையைப் பரக்கப்பேசுவதும் ஸ்வாமியின் பெருமையிலே அந்தர்ப்பவிக்குமென்கிற தத்துவமுணர்ந்து இந்த சுலோக மருளிச்செய்கிறார். "ஸ்திதே அரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே" என்கிற நியாயத்தாலே மாமுனிகளின் திவ்யஸூக்திரஸாநுபவ மொழிய வேறொன்றறியார்கள். எம்பெருமானார் திருவடிகளில் கைங்கர்ய மொழிய வேறொன்றறியாத வடுக நம்பியைப்போலே மாமுனிகளின் திருவடிகளில் கைங்கர்யமல்லது வேறொன்றறியார்கள். பகவத் குணங்களிலும் ஈடுபடாதே மாமுனிகளின் திருக்கல்யாண குணங்களிலே யீடுபட்டிருப்பர்களாயிற்று. மாமுனிகளின் கடைக் கண்ணோக்கம்பட்டவளவிலே பேறு கைபுகுந்ததாக நினைப்பவர்களாயிற்று. இத்தகைய சிஷ்ய ஸம்ருத்தி வாய்ந்த மணவாளமாமுனிகளே நமக்குத் தஞ்சமென்றாராயிற்று. ... ... ... ... (6)

यद्वाणी शठवैरिसूक्तितरुणीमाङ्गल्यदीपावलिः यद्वीक्षा स्वशरव्यसर्वजनतासर्वार्थचिन्तामणिः ।
यन्मूर्तिर्भजदार्तिभञ्जनचणां सूक्तिं विवक्तयञ्जसा भूयान्नस्सततं स मे हृदि गुरुः कान्तोपयन्ता मुनिः ॥ ७ ॥

யத்வாணீ சடவைரிஸூக்திதருணீமாங்கல்யதீபாவலீ:
யத்வீக்ஷா ஸ்வசரவ்யஸர்வஜநதாஸர்வார்த்தசிந்தாமணி:,
யந்மூர்த்திர் பஜதார்த்திபஞ்ஜநசணும் ஸூக்திம் விவக்த்யஞ்ஜஸா
பூயாந்நஸ் ஸததம் ஸ மே ஹ்ருதி குரு: காந்தோபயந்தா முநி:. (7)

யத்வாணீ சடவைரிஸூக்தி தருணீ மாங்கள்ய தீபாவளீ:, யத்வீக்ஷா ஸ்வசரவ்ய ஸர்வ ஜநதா ஸர்வார்த்த சிந்தாமணி:, யந்மூர்த்தி: பஜத் ஆர்த்தி பஞ்ஜநசணும் ஸூக்திம் அஞ்ஜஸா விவக்தி, ஏஷ: மே குரு: காந்தோபயந்தா முநி: ந: ஹ்ருதி ஸததம் ஜீயாத்.

யாவரொரு மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியானது திருவாய் மொழியாகிற தருணியின் மங்கலஸூத்ரத்தை விளக்கும் தீபமாலிகை போல் விளங்குகின்றதோ, யாவரொரு மாமுனிகளின் கடாக்ஷமானது தனக்கு இலக்கானோரெல்லார்க்கும் ஸர்வார்த்த ஸாதகமாகின்றதோ, யாவரொரு மாமுனிகளின் திருமேனியானது பக்தர்களின் விடாயைத் தீர்க்கவல்ல ஸ்ரீஸூக்தி வெளிவரப்போகின்றதென்பதை நன்கு தெரிவிக்கின்றதோ, அந்த மதாசார்ய ச்ரேஷ்டரான மாமுனிகள் நம்முள்ளத்தில் நிச்சலும் விளங்குக.

*** மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப் பெருமை, தத்கடாக்ஷவீக்ஷண மஹிமை, திருமேனியின் ஒளிவிளக்கம் ஆகிய இம்மூன்றையும் விலக்ஷணமாக ப்ரசம்ஸிக்கிறாரிதில். திருவாய் மொழிக்குப் பல வியாக்கியானங்கள் அவதரித்திருந்தாலும் மாமுனிகளின் ரஹஸ்ய வ்யாக்கியான திவ்யஸூக்திகள் அவதரித்திலவாகில் அவை நிஷ்ப்பலமே யாகுமென்பதை முதல்பாதம் மூதலிக்கின்றது. மாமுனிகளின் கடாக்ஷத்திற்கு இலக்கானவாறே அவரவர்கள் ஸர்வார்த்த தத்வ வித்துக்களாவர் என்னுமிடத்தை இரண்டாம்பாதம் மூதலிக்கின்றது. அவருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை ஸேவித்தவாறே *ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே* என்று வேதமோதின கணக்கிலே திருவுள்ளத்திலே அபரிமிதங்களான அர்த்த விசேஷங்கள் பொதிந்து கிடக்கின்றன வென்னுமிடம் தெரியவருமென்கிறார் மூன்றாவது பாதத்தாலே. இத்தகைய வைபவம் வாய்ந்த ஆசார்ய ஸார்வபௌமர் தம்முடைய உள்ளத்துள்ளே உறைந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையோடே தலைக்கட்டினபடி. ... (7)

अवाग्भूषाजुष्टैरभुवनगुरुप्रेमभरितैरमूलर्क्षोद्भूतैरवरदगुरूपासितपदैः ।
कृतं तैस्तैस्सर्वैर्गुरुभिरमहायोगिभिरिति व्यवस्यन्तस्सन्तो हृदि मम लसन्तु प्रतिकलम् ॥ ८ ॥

அவாக்பூஷாஜுஷ்டை: அபுவநகுருப்ரேமபரிதை:
அமூலர்க்ஷோத்பூதை: அவரதகுருபாஸிதபதை:
க்ருதம் தைஸ் தைஸ் ஸர்வைர் குருபிரமஹாயோகிபிரிதி
வ்யவஸ்யந்தஸ் ஸந்தோ ஹ்ருதி மம லஸந்து ப்ரதிகலம். (8)

அவாக்பூஷாஜுஷ்டை: அபுவந் குருப்ரேம பரிதை: அமூலர்க்ஷ உத்பூதை: அவரதகுரு உபாஸித பதை: அமஹாயோகிபி: தைஸ் தை: ஸர்வை: குருபி: க்ருதம் இதி வ்யவஸ்யந்த: ஸந்த: மம ஹ்ருதி ப்ரதிகலம் லஸந்து.

ஸ்ரீவசன பூஷணத்தில் அன்வயமில்லாதவர்களும், பிள்ளையுலகாசிரியர் பக்கலிலே பக்தியற்றவர்களும் திருமூலத் திருநாளில் அவதரியாதவர்களும் கோயிலண்ணன் வழிபாடு செய்யப் பெறாதவர்களும் பெரிய ஜீயரென்று திருநாமம் பெறாதவர்களுமான அவ்வோ ஆசாரியர்களால் பயனொன்று மில்லையென்று அத்யவஸாயங் கொண்டிருக்கின்ற பெரியார்கள் என்னுள்ளத்தில் அநுக்ஷணமும் விளங்குவார்களாக.

*** இதுவொரு விலக்ஷணபக்தி விசேஷ ப்ரகாசகமான ச்லோகரத்னம். திருமங்கையாழ்வார் " கடன்மல்லைத் தலசயனத் துறைவாரை எண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுது

மெண்ணேமே'' என்றும், ''கண்ணுளன் கண்ணமங்கை நகராளன் கழல்சூடி அவனை யுள்ளத்தெண்ணுத மானிடத்தை யெண்ணுத போதெல்லாமினியவாறே'' என்றும், ''ஆன்விடை யேழன் றடர்த்தாற்கு ஆளானரல்லாதார் மானிடவரல்ல ரென்று என்மனத்தே வைத்தேனே'' என்றும் அருளிச்செய்த கட்டளையிலே வ்யதிரேகோக்தியாலே அருளிச்செய்கிறவிது பக்தியின் கனத்தைக்காட்டும். ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்திரத்தில் ப்ரதிபத்தியற்ற ஆசாரியர்களைப் பணிந்து பயனென்கொல? பிள்ளை லோகாசாரியர் பக்கலிலே பக்தியற்ற குரவர்களைப்பேணி ப்ரயோஜனமென்? ''ஆண்மூலம் அரசாளும்'' என்னும் பெருமைவாய்ந்த திருமூல நன்னுளில் தோன்றுதவர்களைத் தொழுது பெறும்பலனென்? கோயிலண்ணனென்னும் மஹாசார்யர் அபிஜநவித்யா வ்ருத்தாவலேபதூரஸ்தராய்த் தொழுது வழிபாடு செய்யப்பெறுத ஆசிரியரை ஆச்ரயிப்பதனுல் என்னுகும்? பெரிய ஜீயரென்று பெருமைப் பெயர் பெருதாரைப் பணிந்துபெறும் பேறு என்கொல்? என்று இங்ஙனே துணிந்து இதராசார்ய ஸேவையில் விரக்திகொண்டு மணவாள மாமுனிகளையே தஞ்சமாகக் கொண்டிருக்கும் பரமபாக்யசாலிகள் என்னுள்ளத்துள்ளே உறைய வேணுமென்றுராயிற்று. க்ருதம் என்பது 'அலம்' என்பதற்குப் பர்யாயமான ஓர் அவ்யயம். ... ... ... (8)

न खल्ववरयोगिनां भजनतः फलस्योद्भवः तदन्यविमुखास्सदा वरमुनिं भजध्वं जनाः! ।
तदङ्घ्रिभजनं सकृत्कृतमशेषतो दुष्कृतं निवारयति भूयसीं श्रियमनुत्तमां पुष्यति ॥ ९ ॥

ந கல்வவரயோகிநாம் பஜநத: பலஸ்யோத்பவ:
ததந்யவிமுகாஸ் ஸதா வரமுநிம் பஜத்வம் ஜநா:!,
ததங்க்ரிபஜநம் ஸக்ருத் க்ருதமசேஷதோ துஷ்க்ருதம்
நிவாரயதி பூயஸீம் ச்ரிய மநுத்தமாம் புஷ்யதி. (9)

| | |
|---|---|
| அவரயோகிநாம் பஜநத: பலஸ்ய உத்பவ: ந கலு; ஹே ஜநா:! தத் அந்யவிமுகா: வரமுநிம் ஸதா பஜத்வம்; ததங்க்ரி பஜநம் | மணவாள மாமுனிகளல்லாதாரைத் தொழுவதனுல் பெறலாகும் பேறு ஒன்றுமில்லை கிடீர்! ஓ உலகர்களே! பிறரைப் பணியாதே மாமுனிகளையே நிச்சலும்பணிமின்; |
| ஸக்ருத் க்ருதம் (ஸத்) துஷ்க்ருதம் அசேஷத: நிவாரயதி; அநுத்தமாம் பூயஸீம் ச்ரியம் புஷ்யதி. | அந்த மணவாள மாமுனிகளின் ஸேவை ஒருகால் செய்யப்பட்டவளவில் பாபத்தை யெல்லாம் நிச்சேஷமாகப் போக்கி, மிகச் சிறந்த அளவற்ற நன்மையைத் தரவல்லது. |

*** அவரயோகிநாம் என்பதற்கு இரண்டு பொருள். வரயோகிநோ ந பவந்தீதி அவரயோகிந:; வரவரமுனி யல்லாதார் என்றபடி. (மற்றொரு பொருளாவது) அவர சப்தம் தாழ்ந்ததென்கிற பொருளைக்கொண்டது. கீதையில் நான்காமத்யாயத்தில் ''அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:'' என்றது காண்க. உயர்த்தியற்ற யோகிகளைப் பணிவதால் பயனென்றுமில்லையென்கிற பொருளும் தோனிக்கும். அன்னவர்களைப் பணிவதை விட்டு ஸ்ரீவரயோகியையே பணிமின் என்றுராயிற்று. மாமுனிகளைப் பணிவதால் பெறும் பேறு சொல்லுகிறது உத்தரார்த்தத்தால். அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமான இஷ்ட ப்ராபணம் பெறலாகுமென்கிறுர். ''அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' என்ற அவனுடைய வார்த்தை ப்ரதிஜ்ஞாமாத்ரமாய் நிற்கும். இங்கு அங்ஙனன்றிக்கே பேறு கைமேலே காணலாகும். [அநுத்தமாம்.] 'ந வித்யதே உத்தமா யஸ்யா:ஸ் ஸா' என்கிற வ்யுத்பத்திகாண்க. மிகச் சிறந்ததென்கை. [பூயஸீம்] அத்யந்தம் பஹ்வீ—பூயஸீ. இங்கு ஸ்ரீசப்தத்தாலே விவக்ஷிதம் ''ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்'' என்பதாகும். ஐஹிகாமுஷ்மிகங்களான ஸகலைச்வர்யங்களையும் சொல்லக்கடவதாயினும் ஆமுஷ்மிகைச்வர்யமே இங்கு முக்கியமாக விவக்ஷிதம். ... (9)

सुराहारासारीकरणचणयत्सूक्तिलहरीगरीयस्तां स्तोतुं प्रभवति न वाचस्पतिरपि।
स नस्तन्यादन्यादृशमहिमशाली वरवरो मुनीन्द्रो निस्तन्द्रः कुशलमनुवेलं गुरुवरः ॥ १० ॥

ஸுராஹாராஸாரீகரணசணயத்ஸூக்திலஹரீ-
கரீயஸ்தாம் ஸ்தோதும் ப்ரபவதி ந வாசஸ்பதிரபி,
ஸ நஸ் தந்யாத் அந்யாத்ருசமஹிமசாலீ வரவரோ
முநீந்த்ரோ நிஸ்தந்த்ர: குசலமநுவேலம் குருவர: (10)

ஸுர ஆஹார அஸாரீ கரண சண யத்ஸூக்திலஹரீ கரீயஸ்தாம் ஸ்தோதும் வாசஸ்பதிரபி ந ப்ரபவதி; ஸ: அந்யாத்ருச மஹிமசாலீ குருவர: நிஸ்தந்த்ர: வரவரோ முநீந்த்ர: அநுவேலம் ந: குசலம் தந்யாத்.

தேவர்களுக்கு உணவான அமுதத்தை அஸார மாக்கவல்லதான யாவரொரு மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப்ரவாஹத்தின்காம்பீர்யத்தைப் புகழ்வதற்கு ப்ருஹஸ்பதியும் அஸமர்த்தரோ, அத்தகைய ஒப்பில்லாப் பெருமை வாய்ந்த ஆசார்ய ச்ரேஷ்டரும் சோர்வு சோம்பலில்லாதவருமான மணவாள மாமுனிகள் அநுக்ஷணமும் நமக்கு நன்மை பயந்தருள வேணும்.

*** இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தில் அருளிச்செய்யும் அர்த்தத்தில் அதிசயோக்திலேசமும் கிடையாதென்பதை அநுபவ ரஸிகர்கள் தாம் அறியக்கடவர்கள். ஆசிரியர் தாம் அநுபவித்த ரீதியை அந்யூநாதிரிக்தமாகப் பேசி வைத்தபடி. ஸுராஹாரமென்று தேவபோக்யமான அம்ருதத்தைச்சொல்லுகிறது. அதையும் அஸாரமென்று தள்ளும்படியாகச்செய்வது மாமுனிகளின் திவ்யஸூக்தி கங்காப்ரவாஹம். அதன் பெருமையைப் பற்றிப் பேசவேணுமானால் வாசஸ்பதியென்று பேர் பெற்ற ப்ருஹஸ்பதியும் வல்லவனல்லன். இந்நிலவுலகத்தாரைப் பற்றிச் சொல்லவேணுமோ? சொல்லில், "மஹாகஜா: பலாயந்தே மசகாநாம் து கா கதி:" என்னலாமத்தனை. [கரீயஸ்தாம்] அத்யந்தம் குர்வீ - கரீயஸீ; தஸ்யா: பாவ:- கரீயஸ்தா. மிக்க பெருமையென்றபடி. அநந்வயாலங்காரமொன்றுக்கே லக்ஷ்யமானதென்று சொல்லி நிற்கவேண்டுமத்தனை. [அந்யாத்ருச மஹிமசாலீ] அந்யாத்ருசம், அத்யத்புதம், அதிவிலக்ஷணம் என்பதெல்லாம் வாசாமகோசர மென்கைக்குப் பர்யாயமென்க. [நிஸ்தந்த்ர:] ஸுதர்சநசதகத்தில் பலச்ருதியில்லாத சுலோகமே கிடையாது; ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொரு விதமான பலன் கூறப்படுகிறது. அதில் (சுலோ.95) "ஸ தநுஜவிஜயீ ஹந்து தந்த்ராலுதாம் வ:" என்றுள்ளது. 'உங்களுடைய சோம்பலைத் தவிர்க்கவேணும்' என்று ஆசாஸிக்கிறபடி, வஸ்து ஸ்திதியில் சோம்பலை வெல்லுவதென்பது ஒரு தேவதாப்ரஸாதமடியாகவே விளையவேண்டிய பேறு என்னுமிடம் இதனால் தெரிவித்ததாகிறது. யாரும் உபதேசத்தில் மிகமிக வல்லவர்களாயிருக்கலாம்; ஸ்வாநுஷ்டானத்தில் தந்த்ரையே இடையூறாகி நிற்கும். மாமுனிகள் பக்கலிலே உபதேசம் போலே அநுஷ்டானமும், அநுஷ்டானம் போலே உபதேசமும் ஒருங்கே விளங்குமென்று சொல்லிற்றாயிற்று. அநுவேலம்—அநுக்ஷணமென்றபடி. ... ... ... (10)

कलानिधिशिरोमणिर्जितमनोभवस्सद्वचस्सुधाशनतरङ्गिणीं दधदनारतं मूर्धनि।
शिवोऽपि यदुपाश्रितो विषमदृष्टितादूरगस्स मे दिशतु मङ्गलं वरवरो मुनीनां वरः ॥ ११ ॥

கலாநிதிசிரோமணிர் ஜிதமநோபவஸ் ஸத்வசஸ்-
ஸுதாசநதரங்கிணீம் தததநாரதம் மூர்த்தநி,
சிவோபி யதுபாச்ரிதோ விஷமத்ருஷ்டிதாதூரக:
ஸ மே திசது மங்கலம் வரவரோ முநீநாம் வர:. (11)

| | |
|---|---|
| யத் உபாச்ரித: கலாநிதி சிரோமணி: ஜிதமநோபவ: ஸத்வசஸ் ஸுதாசந தரங்கிணீம் அநாரதம் மூர்த்நி ததத் சிவோபி விஷமத்ருஷ்டிதாதுரக: (பவதி)' ஸ: முநீநாம் வர: வரவர: மே மங்கலம் திசது. | யாவரொரு மாமுனிகளை யாச்ரயித்த சிஷ்யவர்க்கம் சந்திரனை சிரோபூஷணமாக வுடைத்தாயும் (2) வித்வான்களுக்குள்ளே தலைமை பெற்றதாயும், மன்மதனை ஜயித்ததாயும் (2) காம வேதனைக்கு வசப்படாததாயும், ஸ்ரீஸூக்தியாகிற தேவகங்கையை எப்போதும் தலையில் தாங்கியிருப்பதாயும், சிவனுயிருக்கச்செய்தேயும் விஷமத்ருஷ்டி வைதேசிகமாயுமுள்ளதோ, அந்த மணவாள மாமுனிகள் அடியேனுக்கு நன்மை டயக்கவேணும். |

*** மணவாள மாமுனிகளின் சிஷ்ய வர்க்கத்திற்குச் சில வகைகளாலே சிவ ஸாதர்மியமும், ஒரு வகையாலே சிவ வைதர்மியமும் ஆலங்காரிக ஸஹ்ருதய ஹ்ருதய ஹாரியாக வருளிச்செய்கிருரிதில். [கலாநிதி சிரோமணி:] 'கலாநிதி: சிரோமணி: யஸ்ய ஸ:' என்கிற பஹுவ்ரீஹியாலே சந்த்ரசேகரனுன சிவனைச்சொல்லுகிறது. மாமுனிகளின் சிஷ்ய வர்க்கம் கலாநிதீநாம் [வித்யாநிதீநாம்] சிரோமணியாயிருக்கிறபடி. ஏவஞ்ச கலாநிதி சிரோமணித்வத்தாலே ஸாதர்மியம். [ஜிதமநோபவ:] சிவன் மன்மதனை வென்றவனென்பது ப்ரஸித்தம். சிஷ்யவர்க்கம் காமக்ரோதாதி துர்க்குணங்களை வென்றிருப்பதாம். * காயாதி தோஷ ஹரமாத்மபதாச்ரிதாநாம் * மதந கதநைர் ந க்லிச்யந்தே யதிச்வரஸம்ச்ரயா: * இத்யாதிகளை நினைப்பது. [ஸத்வசஸ் ஸுதாசந தரங்கிணீமித்யாதி.] ஸுதாசநாநாம் தேவாநாம் தரங்கிணி— நதி. (அதாவது) தேவகங்கை. அதைத் தன்சடைமுடியில் தரிப்பவன் சிவபிரான். சிஷ்யவர்க்கமோ வென்னில் மாமுனிகள் ஸாதித்தருளும் ஸ்ரீஸூக்தி ப்ரவாஹமாகிற கங்கையை " அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே " என்னும்படி கொள்ளவல்லதென்கை. ஆக இவ்வளவும் ஸாதர்மியம் சொன்னபடி. இனி வைதர்ம்யமொன்று சொல்லுகிறது. [சிவோபி விஷமத்ருஷ்டிதாதுரக:] சிவன் முக்கண்ணனுகையாலே விஷமத்ருஷ்டியாயிருப்பன். ஸமமல்லாதது விஷமம்; ஒற்றைப்பட்ட கண்ணையுடையவனென்கை. ஸ்வாமி சிஷ்யவர்க்கம் விஷமத்ருஷ்டிவைதேசிகம். வ்யதிகரண ஜ்ஞானமின்றிக்கே ஸமாநாதிகரண ஜ்ஞாந நிதியென்கை. சிவ: என்பது ருத்ரனிடத்திலே நாமமாத்ரம்; ப்ரக்ருதே மங்களாநாமாகர மென்றபடி. இப்படிப்பட்ட சிஷ்ய ஸம்ருத்திவாய்ந்த மணவாள மாமுனிகள் அடியேனுக்கு நன்மைகளை நல்கியருளவேணும். ... ... (11)

कल्याणाचलधर्मभागसमगुर्यत्संश्रितो भूतिमान् बिभ्रच्छुभ्रकलानिधेरविकलां मूर्ध्ना गिरीशः कलाम् ।
क्लृप्ताहीनविभूषण स्स्मरजितस्सायुज्यमाटीकते सोऽव्यान्नस्सततं मुनिर्वरवरोऽनन्यार्हतेजोनिधिः ॥ १२ ॥

கல்யாணசலதர்மபாக்அஸமகுர் யத்ஸம்ச்ரிதோ பூதிமாந்
பிப்ரச் சுப்ரகலாநிதேரவிகலாம் மூர்த்நா கிரீச: கலாம்
க்லப்தாஹீநவிபூஷணஸ் ஸ்மரஜிதஸ் ஸாயுஜ்யமாடீகதே
ஸோவ்யாந்நஸ் ஸததம் முநிர்வரவரோநந்யார்ஹதேஜோநிதி: (12)

| | |
|---|---|
| யத்ஸம்ச்ரித: கல்யாணசல தர்மபாக் அஸமகு: பூதிமாந் க்லப்த அஹீநவிபூஷண: சுப்ரகலாநிதே: அவிகலாம் கலாம் மூர்த்நா பிப்ரத் கிரீச: ஸ்மரஜித: ஸாயுஜ்யம் ஆடீகதே, அநந்யார்ஹதேஜோநிதி: ஸ: வரவர: முநி: ந: ஸததம் அவ்யாத். | யாவரொரு மாமுனிகளைப் பணிந்த சிஷ்யவர்க்கமானது மேருமலையோடொத்த நிறத்தை யுடைத்தாய், (2) ஸத்யாதிகளிலே சலியாத நிஷ்டையை யுடைத்தாய், ஒப்பற்ற எருதையுடைத்தாய், (2) ஒப்பற்ற திருவாக்கை யுடைத்தாய். நீறணிந்ததாய் (2) ஐச்வர்ய முடைத்தாய், நாகபூஷண பூஷிதமாய், (2) சிறந்த ஆத்மாலங்கார பூஷிதமாய், கலாநிதியின் விமலமான கலையைத் தலையால் தாங்குமதாய், கைலாஸபதியாய், (2) வாக்கில் வல்லமை பெற்றதாய். சிவனோடு ஒப்புமையை யடைந்துள்ளதோ, தமக்கே உரியதான தேஜஸ்ஸுக்கு நிதியான அம் மணவாளமா முனிகள் நம்மை எப்போதும் காத்தருள்க. |

*** இந்த ச்லோகத்தினால் மணவாள மாமுனிகளின் சிஷ்யவர்க்கத்திற்கு சிவபெருமானோடு ஸாம்யம் ச்லேஷபங்கியாலே பேசப்படுகிறது. ஆறு விசேஷணங்களினால் சிலேடை அமைக்கப்பட்டுள்ளது. [கல்யாணாசலதர்மபாக்] கல்யாணமென்று ஸுவர்ணத்திற்கும் பெயராகையாலே கல்யாணாசலமென்று மேரு பர்வதத்தைச்சொல்லுகிறது; அதனுடைய தர்மமாவது ஸாதர்மியம்; அதை யடைந்தவன் சிவபெருமான். * பொன் திகழுமேனிப்புரி சடையம் புண்ணியன் *என்கிற பொய்கையார் பாசுரப்படியும், * நின்கூறு கொண்ட தழல்நிறவண்ணன் *என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியும் மேருமலையின் நிறம்போன்ற நிறத்தையுடையனாகையாலே சிவனைக் கல்யாணாசல தர்மபாக்காகச் சொல்லிற்று. இனி வரவரமுநி சிஷ்யவர்க்க பக்ஷத்தில், பக்திஸாதனங்களாகச் சொல்லப்பட்ட விவேக விமோகாப்யாஸக்ரியா கல்யாணாநவஸாதாநுத்தர்ஷங்களாகிற ஏழில் 'ஸத்யார்ஜவ தயாதாந அஹிம்ஸா அநபித்யா: ஷட் கல்யாணி'' என்கிறபடியே ஸத்யம் ஆர்ஜவம் தயை தானம் அஹிம்ஸை அநபித்யை என்கிற ஆறு நலங்களும் கல்யாண சப்தவாச்யமாகையாலே அந்த கல்யாணத்தையும்; சலியாத தர்மநிஷ்டையையும் உடையதென்கை. असमः गौः यस्य सः— असमगुः। ஒப்பற்ற வாஹனமான ரிஷபத்தையுடையவன் சிவன். நாநார்த்தகமான गो (கோ) சப்தத்திற்குக் கண்ணும் பொருளாகையாலே விஷமவிலோசனன் என்றதாகவுமாம். சிஷ்யப்ருந்த பக்ஷத்தில் கோசப்தத்திற்கு வாக்கென்று பொருளாய், ஒப்பற்ற வாக்கென்று பொருளாய் ஒப்பற்ற வாக் வைபவமுடையதென்கை. [பூதிமாந்] பூதியென்று பஸ்மத்திற்கும் ஐச்வர்யத்திற்கும் பெயராகையாலே, சிவன் பஸ்மதாரி, சிஷ்யவர்க்கம் ஐச்வர்யசாலி என்றதாகிறது. [சுப்ர கலாநிதே: அவிகலாம் கலாம் மூர்த்நா பிப்ரத்] சிவன் பிறை தங்கு சடையானாகையாலே கலாநிதியான சந்திரனுடைய கலையைத் தலையால் சுமப்பவன். சிஷ்யவர்க்கமோ வென்னில்; விசுத்த ஸகலகலாவல்லபரான மாமுனிகளின் நிரவத்யமான ஸ்ரீஸூக்தியை சிரஸா வஹிப்பதாம். [கிரீச:] "கிரீசோ கிரிசோ ம்ருட:'' என்கிற அமரகோசத்தின்படியே கைலாஸபதித்வத்தாலே கிரீசனாயிருப்பன் சிவன். ஸ்வாமியின் சிஷ்ய ஸங்கமோவென்னில், [கிரி ஈச:] ரேபாந்தமான கிர் சப்தம் வாக்கென்னும் பொருளுடையது. கிரி என்று ஸப்தமியாய், வாக்கிலே என்றபடி. வாக்கில் வல்லவர்களென்கை. [க்லப்தஅஹீநவிபூஷண:] சிவன் நாகபூஷணனாகையாலே க்லப்தமான அஹீநவிபூஷணத்தையுடையவன். அஹி-ஸர்ப்பம்; இந-ச்ரேஷ்டம். சிஷ்யப்ருந்த பக்ஷத்தில் அஹீந—ஹீநமல்லாத [உயர்ந்த] பூஷணம்—சமதமாதி ஆத்மகுணங்களையே பூஷணமாகக்கொண்டதென்கை. ஆக இவ்வகைகளாலே [ஸ்மரஜித்ஸ் ஸாயுஜ்யம் ஆடீகதே] காமனைவென்ற சிவனையொத்திரா நின்றது. இத்தகைய சிஷ்யவர்க்க ஸமந்விதரும், தமக்கேயுரித்தான தேஜஸ்ஸையுடையவருமான மணவாள மாமுனிகள் நம்மை என்றும் காத்தருளவேணுமென்றதாயிற்று. ... ... (१२)

यद्भक्तो नाभिभूतो मदनमथनकृद्वाग्विलासैकभूमिः नालीकस्थोऽकृतोक्तिव्यवहृतिचतुरास्यत्वसंप्राप्तभूमा
संप्राप्यानन्यलभ्यां कमलभवतुलामेधते सत्यधामा सोऽव्यान्नः क्षान्तिसिन्धुर्निरवधिमहिमा सौम्यजामातृयोगी ॥ १३ ॥

யத்பக்தோ நாபிபூதோ மதநமதநக்ருத் வாக்விலாஸைகபூமி:
நாலீகஸ்தோக்ருதோக்திவ்யவஹ்ருதிசதுராஸ்யத்வஸம்ப்ராப்தபூமா
ஸம்ப்ராப்யாநந்யலப்யாம் கமலபவதுலாமேததே ஸத்யதாமா
ஸோவ்யாந்ந: க்ஷாந்திஸிந்துர் நிரவதிமஹிமா ஸௌம்யஜாமாத்ருயோகீ. (13)

| | |
|---|---|
| பத்பக்த: நாபி பூத: மதநமதநக்ருத் வாக்விலாஸ ஏகபூமி: நாலிகஸ்த: | யாவரொரு மாமுனிகளின் சிஷ்யவர்க்கமானது திருநாபியிலிருந்து தோன்றினதாய் (2) எங்கும் அபிபவ மடையாததாய், மன்மத ஹந்தாவாள ருத்ரனை யுண்டுபண்ணுமதாய் (2) காமாதி தோஷ ஹாரியாய், ஸரஸ்வதி விலாஸத்திற்கு முக்கியாஸ்பதமாய், தாமரை மலரிலிருப்பதாய் (2)பொய்ம்மொழியொன்றில்லாததாய், |
| அக்ருதஉக்தி வ்யவஹ்ருதி சதுராஸ்யத்வ ஸம்ப்ராப்தபூமா ஸத்யதாமா (ஸந்) அநங்யலப்யாம் கமலபவதுலாம் ஸம்ப்ராப்ய ஏததே, க்ஷாந்தி ஸிந்து: நிரவதிமஹிமா ஸ: ஸௌம்ய ஜாமாத்ருயோகீ ந: அவ்யாத். | நான்கு வேதங்களையும் உச்சரிப்பதற்காக நான்கு முகங்களை யுடைத்தாய், (2) வேதவ்யவஹார சதுரமான திருமுக மண்டலத்தை யுடைத்தாய், ஸத்யலோகத்தை இருப்பிடமாகவுடைத்தாய் (2) ஸத்யமான பெருமையை யுடைத்தாய்க்கொண்டு(இவ்வகைகளாலே) பிறர்க்கு அரிதான பிரமனுடைய ஸாம்யத்தையடைந்து விளங்குகின்றதோ, பொறுமைக் கடலாய் எல்லை கடந்த வைபவமுடையரான அந்த மணவாள மாமுனிகள் நம்மைக் காத்தருள்க. |

*** மணவாள மாமுனிகளின் சிஷ்யவர்க்கம் நான்முகனை யொத்திருப்பதாக அதிமநோஹரச்லேஷ பங்கியாலே யருளிச்செய்கிறார். இந்த சதுர்முக ஸாம்யத்தை ஆறு விசேஷணங்களாலே மூதலிக்கிற அழகு வித்வான்கள் ரஸிக்கவே நிலமானது. [நாபி பூத:] திசைமுகன் கொப்பூழ்ச் செந்தாமரைமேல் தோன்றினவனென்பது ப்ரஸித்தம். மாமுனிகளின் பக்தவர்க்கம் [ந அபிபூத:] नैकशब्दवत् नशब्देन समासः! *லாபஸ் தேஷாம் ஜயஸ் தேஷாம் குதஸ் தேஷாம் பராபவ:*என்னுமாபோலே எங்கும் என்றும் திரஸ்காரமடையகில்லாதது. அபிபூத:—திரஸ்க்ருத:- [மதந மதந க்ருத்] मदनं मथ्नातीति मदनमथनः— காமனுடலெரித்த சிவனைச் சொல்லுகிறது. तं करोतीति मदनमथनकृत्— *நான் முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான் *என்கிறபடியே சிவனைப் படைத்தவன் சதுமுகனிறே. பக்தவர்க்கமோவென்னில் मदनस्य मथनकृत्— காமாதி தோஷங்களைத் தொலைக்கவல்ல தென்கை. [வாக் விலாஸைகபூமி:] பிரமன் ஸரஸ்வதிவல்லபனாகையாலே தன் மனைவியான அவளுடைய விப்ரமங்களுக்கு ஆஸ்பதமாயிருப்பன். பக்தவர்க்கம் திருநாவீறுடைத்தாயிருக்கும்படியைச் சொன்னதாகிறது. [நாலீகஸ்த:] நாளீகமென்று தாமரைக்குப் பெயர். அதிலேயிருப்பவன் பிரமன். பக்தவர்க்கமோவென்னில்; [ந அலீகஸ்த;] *अलीकं त्वप्रियेऽनृतम्— அலீகம் த்வப்ரியேந்ருதம்*என்கிற அமரகோசத்தின்படியே அஸத்யோக்தியையும் அப்ரியோக்தியையும் அறியாதது. *ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்* என்கிற நிஷ்டையையுடைத்தென்கை. [அக்ருதோக்தி வ்யவஹ்ருதி சதுராஸ்யத்வ ஸம்ப்ராப்த பூமா] பிரமன் நான் முகனென்னும் பெயரையுடையவனாகையாலே சதுராஸ்யன், சதுராநநன்—நான்கு முகங்களையுடையவனென்றபடி. எதற்காக நான்கு முகங்கள் பெற்றனனென்னில், அக்ருதோக்திவ்யவஹ்ருதயே— அக்ருதோக்தியென்று நித்யாபௌருஷேயமான வேதத்தைச்சொல்லுகிறது. நான்கு வேதங்களையும் ஸ்வரவிபர்யய மின்றிக்கே உச்சரிப்பதற்குப் பாங்காக நான்கு முகங்களைப்பெற்று அதனால் பெருமை படைத்தவன் பிரமன். பக்த வர்க்கமோ வென்னில், [சதுராஸ்ய] என்பதிலே ‘சதுர ஆஸ்ய’ என்று விபாகம் கொள்வது. வேதவ்யவஹார சதுரமான திருமுகமண்டல முடைமையாலே பெருமை பெற்றதென்கை. [ஸத்ய தாமா] ஸத்யபதத்தாலே ஸத்யலோகம் விவக்ஷிதம். அதனை யிருப்பிடமாகவுடையவன் பிரமன். பக்தவர்க்கமோ வென்னில், * गृहदेहत्विट्प्रभावा धामानि * என்கிற அமரகோசத்தின்படியே தாம சப்தம் ப்ரபாவபரமாய் சொன்ன சொன்ன ஏற்றமெல்லாம் ஸத்யமாயிருக்கப் பெற்றதென்கை. * அப்கதமதமாநை ரந்திமோபாய நிஷ்டை; * இத்யாதி ச்லோக ரத்னப்ரஸித்தமான பெருமைகள் அதிசயோக்தியன்றிக்கே யதாபூதார்த்த கதனமாயிருக்கை. இத்தகைய பெருமை வாய்ந்த சிஷ்யர்களாலே ஸேவிதரான மாமுனிகள் நம்மைக் காத்தருள வேணுமென்றாராயிற்று. (13)

शिरसि वहतां यत्पादाम्भः कलानिधिमौलिता जयति वरदाचार्यादीनामनन्यसमाश्रया।
स हि वरमुनिस्साक्षान्नारायणस्तत एव तच्चरणशरणास्सर्वेऽप्युर्व्यां तरन्ति भवार्णवम् ॥ १४॥

சிரஸி வஹதாம் யத்பாதாம்ப: கலாநிதிமௌலிதா
ஜயதி வரதாசார்யாதீநாம் அநந்யஸமாச்ரயா,
ஸஹிவரமுநிஸ் ஸாக்ஷாந்நாராயணஸ் ததஏவ தச்
சரணசரணாஸ் ஸர்வேப்யுர்வ்யாம் தரந்தி பவார்ணவம். (14)

யத்பாத அம்ப: சிரஸி வஹதாம் வரதாசார்ய ஆதிநாம் அநந்ய ஸமாச்ரயா கலாநிதி மௌலிதா ஜயதி, ஸஹிவரமுநி: ஸாக்ஷாத் நாராயண: தத: ஏவ உர்வ்யாம் தத்சரணசரணா: ஸர்வே அபி பவ அர்ணவம் தரந்தி.

யாவரொரு மாமுனிகளின் ஸ்ரீபாத தீர்த்தத்தை மிகவும் கௌரவிக்கின்ற கோயிலண்ணன்முதலானோர்க்கு, பிறர்க்கு அரிதான கலாநிதிமௌலியென்னும் பெருமை விளங்குகின்றதோ, அந்த மணவாள மாமுனிகள் ஸாக்ஷாத் நாராயணனேயாவர், ஆகவேதான் இந்நிலவுலகில் அந்த மாமுனிகளின் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றினவர்களெல்லாரும் பிறவிக் கடலைக் கடக்கின்றனர்.

*** மணவாள மாமுனிகளினடியார்களுக்கு சிவஸாம்யமும் சதுர்முகஸாம்யமும் சொல்லிற்று கீழே. மாமுனிகளுக்கு ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயண தாதாத்ம்யம் சொல்லுகிறது இதில். பரமஸாத்விகரான மாமுனிகளினடியார்களுக்கும் பரமஸத்வ நிதியான ஸ்ரீமந்நாராயணனுடைய ஸாம்யம் சொல்லலாமாயிருக்க. ராஜஸதாமஸர்களான ப்ரஹ்மருத்ரர்களின் ஸாம்யம் ஏதுக்காகச்சொல்லிற்றென்று சிலர் சங்கிக்கக்கூடும்; திவ்ய தேசங்களை வருணிக்கின்ற திருமங்கையாழ்வார் அங்குவாழும் ஸ்ரீவைஷ்ணவர்களை ப்ரஹ்மருத்ரஸமர்களாகவருளிச் செய்திருப்பது காண்கிறோமிறே. *சிவனயனே போல்வார்மன்னு திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே * (2—10—9) என்ற பெரிய திருமொழிப் பாசுரங்காண்க. இந்த ச்லோகத்தில் மாமுனிகளுக்கு ஸாக்ஷாந் நாராயணத்வ மருளிச்செய்யப்படுவது எங்ஙனேயென்னில்; நாராயணன் தன்னுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை [கங்கையை] சிரஸா தாங்கினவனுக்குக் கலாநிதிமௌலித்வத்தைக்கொடுத்தார்; कलानिधिः (चन्द्रः) मौलौ यस्य सः, तस्य भावः— कलानिधिमौलिता। चन्द्रशेखरत्वमिति यावत्। ப்ரக்ருதே, ஸ்வாமியின் திநசர்யையிலே * ததஸ்ஸ்வ சரணாம்போஜ ஸ்பர்ச ஸம்பந்நஸௌரபை:, பாவநை ர்த்திகஸ் தீர்த்தைர் பாவயந்தம் பஜாமி தம் * என்று பணித்தபடியே ஸ்வாமி ஸமயவிசேஷங்களிலே ஸ்ரீபாத தீர்த்தம் ப்ரஸாதித்தருள, அதை நிதி பெற்றாற்போலே பெற்றுவருகின்ற கோயிலண்ணன் முதலானோர் கலாநிதி மௌலிகளாக விளங்கா நின்றார்கள். கலாநிதிகளென்று ஸகலகலாவல்லபர்களைச் சொல்லுகிறது; அவர்களுக்குள்ளே தலைவர்களாயிருக்கும்படியைச் சொல்லுகிறது. இன்னமும் நாராயணன் ஸ்ரீராமாவதாரத்திலே தன் திருவடியைப் பற்றி வாழ்ந்து திருவடியென்றே நிருபகமாயிருந்தவன் * உல்லங்க்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம் * என்றும் * கோஷ்பதீக்ருத வாராசிம் * என்றும் சொல்லுகிறபடியே கடலைக் கடந்தானென்று ப்ரஸித்தமாயிருக்கும். இங்கும் * மணவாள மாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை உன்னிச் சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக் கரத்தாலே தீண்டல் கடன்* என்கிறபடியே, மாமுனிகளின் திருவடிகளைத் தஞ்சமாகக்கொண்டவர்கள் அந்த மாருதியாலும் கடக்கவரிதான ஸம்ஸாரக் கடலைக் கடக்கின்றார்கள். இப்படிகளாலே மாமுனிகள் ஸாக்ஷாந் நாராயணனேயாவார் என்றதாயிற்று. ... ... ... ... (14)

जलजनिलयैकान्तोऽनन्तद्विजोत्तमसेवितो जलजविलसत्पाणिर्नित्यं करस्थसुदर्शनः ।
सकलसुमनोवैरिव्राताचलेपविलोपकृत् मधुरिपुतुलाकान्तः कान्तोपयन्तृमुनीश्वरः ॥ १५ ॥

ஜலஜநிலயைகாந்தோநந்தத்விஜோத்தமஸேவித:
ஜலஜவிலஸத் பாணிர் நித்யம் கரஸ்தஸுதர்சந:
ஸகலஸுமநோவைரிவ்ராதாவலேபவிலோபக்ருத்
மதுரிபுதுலாகாந்த: காந்தோபயந்த்ருமுநீச்வர: 15

ஜலஜநிலயா ஏகாந்த: அநந்தத்விஜோத்தமஸேவித: ஜலஜவிலஸத்பாணி: நித்யம் கரஸ்தஸுதர்சந: ஸகலஸுமநோ வைரிவ்ராத அவலேப விலோபக்ருத் காந்தோபயந்த்ருமுநீச்வர: மதுரிபுதுலாகாந்த:

ஜலஜ நிலயா ஏகாந்த:, மலர்மகளுக்கு அஸாதாரணனாய், (2) ஜட ஜநி லய ஏகாந்த:- மூட ஜன்மத்தைப் போக்குவதில் மிக வல்லவராய், திருவனந்தாழ்வானும் பக்ஷிராஜனும் ஸேவிதனாய், (2) அளவுகடந்த ப்ராஹ்மணோத்தமர்களாலேஸேவிதராய், ஸ்ரீபாஞ்ச ஜந்யம் விளங்கும் திருக்கையையுடையனாய் (2) தாமரைபோல் விளங்கும் திருக்கையையுடையராய், எப்போதும் கைகழலாநேமியானாய் (2) எம்பெருமானார் தர்சனார்த்தங்கள் கைப்பட்டவராய், ஸகல அஸுரராக்ஷஸ வர்க்கங்களின் செருக்கையடக்கினவனாய் (2) ஆஸுரப்ரக்ருதிகளானாரெல்லாரையும் செருக்கொழித்தவரான மணவாள மாமுனிகள் எம்பெருமானோடு ஸாம்யத்தாலே ஸ்ப்ருஹணீயராவர்.

· *** இந்த ச்லோகத்தினால் மணவாள மாமுனிகளுக்கு ஸ்ரீமந்நாராயணனோடு ஸாம்யம் நிர்வஹிக்கப்படுகின்றது. [ஜலஜ நிலயைகாந்த:] எம்பெருமான் லக்ஷ்மிக்குப் பதியென்னுமிடம் விவரண நிரபேக்ஷம். மாமுனிகள் திறத்தில் [ஜலஜநி-லய-ஏகாந்த:] 'लडयोरभेदः லடயோரபேத:' என்கிற மர்யாதையாலே (ஜல) என்றது ஜடமென்றபடியாம். ஜநி என்பது (கீழ் மூன்றும் ச்லோகத்திற்போலே) பிறப்பைச்சொல்லுகிறது. ஜடமான பிறப்புக்கு லயம் செய்வதில் வல்லவர் என்கை. யதாஜாதர்களையும் திருத்திப் பணிகொள்ள வல்லவரென்றதாயிற்று. [அநந்தத்விஜோத்தம ஸேவித:] திருவனந்தாழ்வானையும் பெரிய திருவடியையும் கொண்டு ஸ்ரீமந்நாராயண பக்ஷத்தில் நிர்வஹிப்பது. மாமுனிகள் பக்ஷத்தில் அனந்தர்களான [அபரிமிதர்களான] த்விஜோத்தமர்களாலே—த்விஜர்களில் உத்தமர்களான ஸ்ரீவைஷ்ணவர்களாலே ஸேவிதரென்கை. [ஜலஜவிலஸத்பாணி:] ஸ்ரீபாஞ்சஜந்யம் கடலிற் பிறந்ததாகையாலே ஜலஜமென்னும் பெயர் அதற்கு முண்டு. பாஞ்சஜந்யாலங்க்ருதமான இடத்திருக்கையை யுடையவன் எம்பெருமான். மாமுனிகள் ஜலஜம்போலே [தாமரைபோலே] விளங்குகின்ற திருக்கைத் தலத்தையுடையவர். [நித்யம் கரஸ்தஸுதர்சந:] * எப்போதும் கைகழலாநேமியான் எம்பெருமான். மாமுனிகள் பக்ஷத்தில் ஸுதர்சநமென்றது ஸத்தர்சனமென்றபடியாய் எம்பெருமானார் தர்சனார்த்தங்களெல்லாம் கைப்பட்டிருப்பவரென்கை. அன்றிக்கே ஜலஜேத்யாதியான விரண்டாலும் திருக்கைத்தலத்திலே உத்தம புருஷ லக்ஷணமான சங்க சக்ரரேகைகள் விளங்கப்பெற்றவரென்னவுமாம். [ஸகல ஸுமநோவைரிவ்ராதாவலேப விலோபக்ருத்] ஆஸுரப்ரக்ருதிகளின் செருக்கை யடக்கவல்ல ஸாமர்த்தியம் உபய ஸாதாரணம். * அசுரரிராக்கதரை யிண்டக்குலத்தையெடுத்துக்களைந்த விருடீகேசன் அவன். மாமுனிகளோவென்னில்; *பொலிக பொலிகவிலே "ஐயமொன்றில்லை அரக்கரசுரர் பிறந்திருள்ளிரேல், உய்யும் வகையில்லை தொண்டீர்" என்றருளிச்செய்தது ஸபலமானபடி. ஆக இவ்வகைகளாலே [மதுரிபுதுலாகாந்த:] மதுகைடப ஸம்ஹாரகனான எம்பெருமானோடு ஸாம்யம் பெற்றவரென்று ஸபங்கச்லேஷத்தாலும் அபங்க ச்லேஷத்தாலும் மூதலித்தபடி. ... ... ... ... (15)

यद्वाग्जालं मधुजिदतनुच्छेदिनालीकवासोत्कृत्तोद्वृत्तासुरसमुदयैस्साम्यमासेवमानम् ।
पद्मावासाक्षितिधरसुतावाक्छचीकान्तरूपैः कान्त्या कान्तस्स जयतु महायोगिकान्तोपयन्ता ॥ १६ ॥

யத்வாக்ஜாலம் மதுஜிததநுச்சேதிநாலிகவாஸோத்
க்ருத்தோத்வ்ருத்தாஸுரஸமுதயைஸ் ஸாம்யமாஸேவமாநம்
பத்மாவாஸாக்ஷிதிதரஸுதாவாக்சசீகாந்தரூபை:
காந்த்யா காந்த: ஸ ஜயது மஹாயோகிகாந்தோபயந்தா 16

யத்வாக்ஜாலம் பத்மாவாஸா க்ஷிதி தரஸுதா வாக் சசி காந்தரூபை: மதுஜித் அதநுச்சேதி நாலிக வாஸ உத்க்ருத்த உத்வ்ருத்த அஸுரஸமுதயை: ஸாம்யம் ஆஸேவமாநம்; ஸ: காந்த்யா காந்த: மஹாயோகிகாந்தோ பயந்தா ஜயது.

யாவரொரு மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ப்ருந்தமானது, மலர்மகள் மலைமகள் ஸரஸ்வதி இந்திராணி ஆகிய இவர் களுக்கு நாயகர்களாயிருக்கின்ற ஸ்ரீ மஹாவிஷ்ணு சிவன் பிரமன் இந்திரன் என்னுமிவர்களோடே (மேல்விவரிக்கப் படுகிறபடியே) ஸாம்யத்தை யடைந்ததாகவுள்ளதோ, அந்த அழகிய மணவாள மாமுனிகள் ஸர்வோத்கர்ஷசாலியாய் விளங்குக.

*** இந்த ச்லோகத்தில், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகள் ஸ்ரீமந் நாராயணனோடும் சிவபெருமானோடும் நான்முகனோடும் இந்திரனோடும் ஸாம்யம் பெற்றுவிளங் கும்படியை அதிவிலக்ஷண ச்லேஷபங்கியாலே அருளிச்செய்கிறார். உத்தரார்த்தத்தில் [பத்மா வாஸே த்யாதி] பத்மாவாஸா காந்த:, க்ஷிதிதரஸுதாகாந்த:, வாக்காந்த:, சசிகாந்த: என்று யோஜிக்கக்கடவது. முறையே த்ரிமூர்த்திகளையும் இந்திரனையும் சொல்லிற்றாகிறது. பூர் வார்த்தத்தில் மதுஜித்இத்யாதி சப்தங்களில்தான் சிலேடை. இந்த சப்தங்கள் ஸ்ரீவரவர முநிஸூக்திஸ்வபாவத்தையும் சொல்லும், ஸ்ரீமந்நாராயணாதிகளின் தன்மையையும் சொல் லும். எங்ஙனேயென்னில்; [மதுஜித்] பத்மாவாஸா காந்தனான நாராயணன் (கைடபஸஹ சரிதனான) மதுவென்னு மசுரனை வென்றவன். ஸ்வாமியின் வாக்ஜாலமானது, மதுவை வென் றது; தேனைக் காட்டிலும் பரமபோக்யமென்றபடி. [அதநுச்சேதி] க்ஷிதிதரஸுதா காந்த னான ருத்ரன் அதநுவை-அநங்கனென்னும் மன்மதனையொழித்தவன். ஸ்வாமியின் வாக்ஜால மானது காமக்ரோதாதிகளைத் தொலைப்பது. [நாலிகவாஸ] வாக்காந்தனான நான்முகன் நாளீ கத்தை [தாமரையை] வாஸஸ்தானமாகவுடையவன். ஸ்வாமியின் வாக்ஜாலமோவென்னில் [ந-அலிகவாஸ] மாமுனிகள் பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளராகையாலே அவ ருடைய திருவாக்கு அலீகஸம்பந்த மற்றதென்கை. கீழ்ப் பதின்மூன்றும் சுலோகத்தில் நாலீகஸ்த: என்றவிடமும் காண்க. [உத்க்ருத்த-உத்வ்ருத்த அஸுரஸமுதய,] சசிகாந்தனை இந்திரன் துர்மார்க்கஸ்தர்களான அசுரர் குழாங்களைத் தொலைத்தவன். மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஜாலமானது *நண்ணுவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த* என்னுங் கணக்கிலே ஆஸுரப்ரக்ருதிகளின் அவலேபங்களை யடியறுப்பது. ஆக இவ்வகைகளாலே திரிமூர்த்திகளோடும் இந்திரனோடும் ஸாம்யம் பெற்ற ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்தவரான மணவாள மாமுனிகள் நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்கவேணுமென்றாராயிற்று. ... (16)

हृद्या यस्य सरस्वती सुविमला तापानशेषानपि द्रागुन्मूलयति श्रुताऽपि भविनां शुद्धिं विधत्ते पराम् ।
भङ्गं नैति कदाऽपि कुत्रचिदपि प्राप्ताऽपि गम्भीरतां सोऽव्यान्मामतिवेलवैभवनिधिः कान्तोपयन्तामुनिः ॥

ஹ்ருத்யா யஸ்ய ஸரஸ்வதீ ஸுவிமலா தாபாநசேஷாநபி
த்ராகுந்மூலயதி ச்ருதாபி பவிநாம் சுத்திம் விதத்தே பராம்
பங்கம் நைதி கதாபி குத்ரசிதபி ப்ராப்தாபி கம்பீரதாம்
ஸோவ்யாந்மாம் அதிவேலவைபவநிதி: காந்தோபயந்தா முநி: 17

# பச்சைப் பசும்பொய்யைப்பற்றிப் பதினாறு.

( அல்லது தஞ்சாவூர் புளுகு. )

—⊰⊱—

தஞ்சை மாமணிக்கோயிலுக்குப் பல பெருமைகளை யெழுதி வெளியிடுமொரு பண்டிதர் "தேசிகன் தமது திருமாளிகைக்குக் கதவிலக்கம் (டோர் நம்பர்) 24. என்றிருந்ததுபற்றி இருபத்து நான்கு பிரபந்தங்கள் கொண்ட ஸ்ரீதேசிகப் பிரபந்தம் சாதித்தார்" என்றும், அது முதன் முதலாகத் தஞ்சை மாமணிக்கோயிலிலேயே அநுஸந்தானம் தொடங்கப்பெற்று பின்பே மற்ற திவ்யதேசங்களிலும் அவ்வநுஸந்தானம் தொடர்ந்ததாகவும் எழுதுகிறார். திருவாரூர் புளுகென்றும், தஞ்சாவூர் புளுகென்றும் நெடு நாளாகவே ஒரு வழக்கச்சொல் வருவதுண்டு. திருவாரூர் புளுகு சைவர்திரளில் பிரசித்தமென்றும், தஞ்சாவூர் புளுகு ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டிகளில் பிரசித்தமென்றும் சொல்லுவர். பிரகிருதம் தஞ்சாவூர் புளுகைப்பற்றியே விவரிக்க அவசியமேற்பட்டது. அலங்கார சாஸ்திரத்தில் இப்படியுமொரு அலங்காரமுள்ளது. இதற்கு மித்த்யாத்யவஸிதி யென்று பெயரிட்டார்கள். किञ्चिन्मिथ्यात्वसिद्ध्यर्थं मिथ्यार्थान्तर कल्पनम्-मिथ्याध्यवसितिः [கிஞ்சிந்மித்த்யாத்வஸித்த்யர்த்தம். மித்த்யார்த்தாந்தர கல்பநம்; -மித்த்யாத்யவஸிதி: ] என்று லக்ஷணம் கூறினார்கள். वेश्यां वशीचकाराश्वः खपुष्पकृतशेखरः (வேச்யாம் வசீசகாராச்வ: கபுஷ்பக்ருத சேகர:) என்று இதற்கு லக்ஷ்யமும் காட்டினார்கள். 'குதிரையானது ஆகாசமலரைச் சூடிக்கொண்டு தாஸியை வசப்படுத்திக் கொண்டது' என்பது இதன்பொருள். தாஸி ஒருவர்க்கும் வசப்படுபவளல்லள். குதிரைக்கு தாஸியை வசப்படுத்தி ஆகவேண்டியதுமில்லை; அது இதை நெஞ்சாலும் நினைக்கவல்லதுமன்று. ஆகாச மலரென்கிற வஸ்துவும் கிடையாது. அதனைக் குதிரை சூடிக்கொண்டதென்பதும் அஸம்பாவிதம். ஆக அக்ஷரந்தோறும் பொய்யான விஷயங்களையே பெய்து பேசுவதும் ஒரு அலங்காரமாகப் பரிகணிதமாய்விட்டது. "இருபத்து நான்கு பிரபந்தங்கள்கொண்ட ஸ்ரீதேசிகப் பிரபந்தம்.... இத்யாதியாக நாம் எடுத்துக்காட்டிய ப்ரக்ருதவிஷயமும் இவ்வலங்காரத்திற்கே லக்ஷியமாமத்தனை. இனி வரிசையாக விவரிப்போமிதனை.

1. வேதாந்தவாசிரியர் ஸம்ப்ரதாயபரிசுத்தி முதலாக, ரஹஸ்யத்ரயஸாரம் நடுவாக, முநிவாஹநபோகமீறாக முப்பத்திரண்டு ரஹஸ்யங்கள் பணித்துள்ளாரென்பது ப்ரஸித்தமானது. இவற்றில், ப்ரகரணவிச்சேதமில்லாத சிறிய ரஹஸ்யங்களுக்கு ஆதியிலும் அந்தத்திலும், ப்ரகரணவிச்சேதமுள்ள பெரிய ரஹஸ்யங்களுக்கு ஒவ்வொரு பிரகரணத்திலும் ஆதியந்தங்களிலும் பெரும்பாலும் சிறிய பெரிய சுலோகங்களை யியற்றிச் சேர்த்துள்ளாரென்பதை அனைவரும் காண்கிறோம்.

2. இவ்வண்ணமாகவே, அந்த ஸம்ஸ்கிருத சுலோகங்களோடு கூடவே வெவ்வேறு வகைப்பட்ட யாப்பமைந்த தமிழ்ச்செய்யுள்களையும் இயற்றிச் சேர்த்துள்ளாரென்பதையுங் காணநின்றோம். ஸம்ஸ்கிருத சுலோகங்களை ஆதியந்தங்களில் மட்டுமன்றிக்கே இடையிடையிலும் சிலவற்றை யெழுதிச் சேர்த்திருப்பதுண்டு. அவை காரிகைகளெனப்படும். இந்த ப்ரக்ரியையானது தமிழ்ச் செய்யுள்களுக்கு கிடையாது. இடையிடையே தமிழ்ப்பாட்டுகளைச் செய்து சேர்த்திருப்பது கிடையாதென்றபடி. ஆதியந்தங்களில் மட்டுமே தமிழ்ச் செய்யுள்களைச் செய்து சேர்த்திருக்கிறாரென்கை.

3. ஆகவிப்படி ஆதிமத்யாந்தங்களில் சேர்க்கப்பட்டுள்ள ஸம்ஸ்க்ருத சுலோகங்களைத் தனியே பிரித்தெடுத்துச் சில நூல்களாக்கி இன்ன நூல் இன்னநூலென்று வியவஹரிப்பதுமில்லை, அவற்றைத் தனிப்பட அநுஸந்தானத்தில் ஒருவரும் ஓரிடத்திலும் கொண்டுவந்ததுமில்லை, கொண்டுவர முயன்றதுமில்லை. அந்த சுலோகங்களெல்லாம் ரஹஸ்யநூல்களிலேயே அந்தர்க்கதங்களாய்த் தனிப்பட வ்யபதேசம் பெறுமையினாலே ரஹஸ்யாநுஸந்தான காலங்களிலே மட்டும் அந்த சுலோகங்களுக்கும் அநுஸந்தானம் ப்ராப்தமாகி வந்திருக்கின்றது. அவற்றுக்கு வேறுவிதமான அநுஸந்தானம் எங்குமே கண்டதில்லையென்பது புநருக்தம்.

4. தத்ஸஹபடிதங்களான தமிழ்ப்பாட்டுகளுக்கும் இதே நியாயந்தான். அமிருதரஞ்சனியென்றோ அம்ருதாஸ்வாதினியென்றோ அதிகாரசங்கிரகமென்றோ ஸ்வாமி தாம் பெயரிட்டதாக ஒரு பிரபந்தமும் தோன்றிற்றிலது. பின்புள்ளவர்கள் கோவில்களிலே ஸம்பந்தத்தை ஏறிட்டுக்கொண்டு புகுந்தபோது அந்த ராமாயணத்தின் தொடக்கமே யுத்தகாண்டமாக அமைந்தபடியால் ஸ்பர்த்தை முற்றினகாலத்திலே பாத்ரத்தனியனென்றும் வாழிதிருநாமமென்றும் நாள்பாட்டென்றும் ப்ரதிகல்பனைகள் பலவற்றைப் பண்ணினதுபோல தேசிகப் பிரபந்த ஸ்ருஷ்டியும் பண்ணினூர்கள். உண்மையில் தேசிகர் ஸாதித்த பாட்டுக்களையே [அதாவது கீழே நாம் விவரித்தபடி ரஹஸ்ய நூல்களில் ஸ்வாமி இட்டுவைத்த பாட்டுக்களையே] சில பிரபந்தங்களாக்கியும், வேறு சிலர் இயற்றிவைத்திருந்த பிரபந்தங்களையும் சேர்த்துக்கொண்டும், பிரபந்த ஸாரம் முதலான ஒன்றிரண்டு பிரபந்தங்களைப் புதிதாகவே யியற்றியும் இவற்றுக்கு தேசிகப் பிரபந்தமென்று பெயரிட்டுச்சில கோவில்களில் கத்தத்தொடங்கினூர்கள்.

5. ஆக, கீழ் நான்கு பாராக்களில் தெரிவித்த விஷயங்கள் இனிப் பன்னிரண்டு பாராக்களில் அசைக்கமுடியாதபடி ப்ரதிஷ்டாபனம் செய்யப்படுகின்றன. 'பலவாண்டுகளாக ஒரு பெரிய வகுப்பினர் சொல்லிப் போரும் விஷயங்களை இன்றாக நீயொருவன் நவீன கற்பனையாக எழுதிவிட்டதனுலே அஸூயையினாலும் ஆக்ரஹத்தினாலும் எழுதியதாகத் தேறுமேயல்லது லவலேசமும் ப்ராமாணிகமாகத் தேறுவதற்கு வழியில்லை'யென்று சிலர் சொல்லவும் எழுதவும்கூடும். தாராளமாகச் சொல்லுக வெழுதுக. 'இவன் ஆக்ரஹத்தாலே சொல்லுகிறான், அஸூயையினாலே யெழுதுகிறான்' என்றிவ்வளவே சொல்லக் கூடுமேயல்லது நாம் உப பாதிக்கும் விஷயங்களில் ஏகதேசமும் வாய்திறக்க வழியில்லையென்பது பிரளயத்திலும் அழியகில்லாத வார்த்தையேயாகும். தேசிகப் பிரபந்தமென வழங்கப்படும் நூல்தொகுதி உண்மையாகவே தேசிகரால் இயற்றப்பட்டு இருந்ததென்றே வைத்துக்கொள்வோம். துஷ்யதுந்யாயேநவன்றிக்கே முழுமனமாகவே கொள்வோம். இவற்றின் அநுஸந்தானம் தஞ்சை மாமணிக்கோயிலில் தொடங்கப்பட்டதென்று சொல்லப்படுகிறதே, இதனை ஆர அமர ஆராய்வோம். முதலில் தஞ்சையில் தொடங்கப்பட்டுப் பிறகு இதர தேவாலயங்களில் அநுஸந்தான பரம்பரை நிகழ்ந்து வருவதாக எழுதப்படுகிறது இந்த நமது வியாஸத்திற்கு இலக்கான வ்யக்தியால். இப்போது எழுபத்து நான்காம் பிராயத்திலிருக்கிற நான் தஞ்சை மாமணிக்கோயிலை முதன் முதலாகப் பதினாறு பதினேழு பிராயத்தில் ஸேவிக்கப்பெற்றவன். அப்போது ஒரு நாள் காலையில் தஞ்சையையும் மாலையில் திருக்கண்டியூரையும் ஏழெட்டு வயஸ்யர்களுடன் ஸேவிக்கப்ராப்தமாயிற்று. இவ்விரண்டு திருப்பதிகளும் அப்போது தென்கலைத் திருமண்காப்புடன் விளங்கியவை. ஆனால் பக்கத்திலேயே காவியாலும் திருமண்கட்டியாலும் வேறொரு திருமண்ரேகையும் போடப்பட்டிருந்த தப்போதே. இவ்விரண்டிடங்களிலும் தென்கலைஸம்பிரதாயஸ்தர்கள் மிகச்சிலரும், வடகலைஸம்பிரதாயஸ்தர்கள் மிகப்பலருமாயிருந்ததனால் ஆக்ரமணம் மிகவெளிதாக ஏற்பட்டது. அடியேன் இருபத்தைந்தாவது பிராயத்தில் மறுபடியும் அத்தலங்களுக்குச் செல்ல நேர்ந்தபோது கலை பரிஷ்காரமாகவே மாறுபாடடைந்ததைக் கண்டேன். திருக்குடந்தை, திருவிண்ணகர், தேரழுந்தூர்....என்னும் சிற்சில திருப்பதிகள் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் புண்ட்ரம் மாறப்பெற்றவை; மேலே ப்ரஸ்தாவித்த இரு தலங்கள் நிகழும் (கி. பி.) இருபதாம் நூற்றாண்டில் மாறப்பெற்றவை. என்னுமிவ்வளவே வாசி.

6. கபிஸ்தலம், திருமெய்யம், திருநாகை, திருக்கண்ணங்குடி, அப்பக்குடத்தான் ஸன்னிதி யென்கிற திருப்பேர்நகர் முதலான பத்திருபது திவ்யதேசங்களில் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்கள் அடியோடு இல்லையென்று சொல்லவேண்டும்படியான நிலைமை ஏற்பட்டிருந்தாலுங்கூட இவ்விடங்களில் பிறர் மலிந்திராண்மையினாலும், (இவற்றில் சில தலங்களில்) சேஷ்டைபண்ணமுடியாதபடி அரசாங்க மூலமாகக் கனமான காப்பு [ரக்ஷை] ஏற்பட்டுவிட்டபடியாலும் மாறுபாடு தோன்றப் பெறுமலிருக்கின்றது. ப்ராஸங்கிகமான இவ்விஷயமிருக்கட்டும். தேசிகர் ஜீவித்திருந்த

காலத்திலும், அவர் பரமபதித்த பிறகு நெடுநாள் வரையிலும் ஸ்ரீவைஷ்ணவர்களுள் எவ்விதமான பிளவும் ஏற்பட்டிருக்கவில்லை. ஏற்பட்டிருந்தால், தென்னாசார்ய ஸம்பிரதாயத்திற்கே திலகமான திவ்யதேசங்களில் தேசிகவிக்ரஹம் ப்ரவேசித்திருக்க ப்ரஸக்தியே யிராது. அன்றியும், தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களான வாதிகேஸரி ஜீயர், மணவாள மாமுனிகள் முதலான பல ஆசாரியர்கள் தேசிக ஸூக்திகளைத் தங்கள் கிரந்தங்களில் கையாளவும் ப்ரஸக்தியிராது. ஆகவே அக்காலத்தில் தேசிகரும் பிறிகதிர்ப்பட்டவரன்றிக்கே ஒத்துவாழ்ந்தவரென்பது யாவர்க்கு முடன்பாடு,

7. அவருடைய பிரபந்தங்களை யநுஸந்திக்க ப்ரமேய மேற்பட்டால், கோவிலைக் காத்தவர்களென்று இற்றைக்கும் ப்ரஸித்தவ்யபதேசபாகிகளான தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்கள்தாம் ஓதியிருக்கவேண்டும். மற்றையோர் வாய்திறக்க ப்ரஸக்தியே கிடையாது. ஸ்ரீபெரும்பூதூரில் யதிராஜஸப்ததி ஓதுவது, திருக்கோவலூரில் தேஹளீச ஸ்துதி யோதுவது, ஸ்ரீவில்லிபுத்தூரில் கோதாஸ்துதி யோதுவது இத்தகைய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரானுஸந்தானமே இற்றைக்கும் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களுக்கு உரித்தாயிருக்கும்போது, நாளைக்கும் த்ராவிடபாஷா தூஷணமும் திவ்யஸூரி நிந்தையும் திவ்யதேச உபாலம்பமுமே போதுபோக்காயிருக்கின்ற வகுப்பினர் பிரபந்தஞ் சொல்லத் தொடங்கினார்களென்று எழுதினவர் எப்படித்தான் வெட்கமற்று எழுதினாரோ அறியோம். (வெள்கிப்போ யென்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே) என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்தபடி தமக்குள் தாம் விலவறச் சிரித்துக்கொண்டேதாம் எழுதியிருக்கவேண்டும்.

8. தேசிகப் பிரபந்தமென்கிற ககநாரவிந்தத்தை முதன் முதலாகச் சொல்லத் தொடங்கினவர்கள் நால்வர் ஐவர் அறுவராக இருக்கமுடியாது; ஒரு பெருந்திரளாகத்தானிருக்கவேண்டும். அவர்களது பரம்பரை இப்போது உள்ளதா? இல்லையாவென்று கேட்டால் (திசி திசி விலோலநயநம்) என்கிறபடியே திசைதோறும் விழிக்கவேண்டியது தவிர வேறுண்டோ? கோயில் திருமலை பெருமாள் கோயிலென்று ப்ரக்க்யாதமான திவ்ய தேசத்ரயத்தில் தலைகாட்ட வகையில்லாதவர்கள் வண்ணாத்தங்கரையிலே தோன்றி அவ்வாற்றிலேயே அன்றே அமிழ்ந்துபோனார்களென்று சொல்லித் தீரவேண்டியது தவிர வேறில்லையே. தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டில் திருவெவ்வுளூரென்கிற ஒரு திருப்பதியைப் பற்றிக்கொண்டு இவர்கள் மன்றாடலாம். இத்தலத்தைப்பற்றி நீதிமன்றத்து வியவஹார இதிஹாஸ புராணங்கள் இன்னமும் ஓய்ந்தபாடில்லை. இத்தகைய நவீநாக்ரமண விஷயீபூதங்களாய் அங்குலிகணநீயங்களாயுள்ள சில திவ்யதேசங்களில் நேற்று காலையிலும் இன்று மாலையிலுமாகத் தோன்றி ஸர்வஜநமநஸ்ஸாக்ஷிகங்களாகவுள்ள க்ஷேபங்களை விட்டொழித்து நெஞ்சை நடுநிலையிலே வைத்து உண்மை காணப்புக்கால் பொய்யும் புளுகுந்தவிர வேறொன்றும் தேறாது.

9. நெடுநாளாக நமது கேள்வியொன்று பிரபலமாகவுள்ளது. அதில் இவர்கள் அத்ருஷ்டியை அபிநயிப்பது தவிர வேறொன்றும் செய்யப்போகாது. தேசிகன் அவதரித்த காலமும் திருநாட்டுக்கெழுந்தருளின காலமும் ஸர்வஜநவிதிதமாகவுள்ளது. அன்று தொடங்கி இன்றளவாக அவிச்சிந்நபரம்பரையில் வருமவர்கள் ப்ரதிவாதி பயங்கராசார்ய வம்சஸ்தர்களேயல்லது வேறெவருமிலர். இவ்வம்சஸ்தர்கள் இன்றைக்கும் தங்கள் பரம்பரையில் வேதாந்தாசார்யரென்றும் நயனாராசாரியரென்றும் நாமகரணம் செய்து வருகிறார்கள். இவர்களை அசலாக்கி வேறுசிலர் தங்களை தேசிகாநுபந்திகளாகச் சொல்லிக்கொள்ளவாரம்பித்தது எந்தவாண்டிலென்பதை எளிதாக அறிந்துகொள்ள இயலும். தேசிகனுடைய பரச்சதக்ரந்தரத்னங்களில் ஏதேனுமொன்றுக்காவது இந்த நவீனர்களின் முன்னோர்கள் வியாக்கியானமியற்றியதுண்டோ? இவர்களுக்கு ப்ரவசநபரம்பரையில் கிடைத்த தேசிகக்ரந்தம் ஒன்றாவது உண்டோ? கி. பி. ஆ 1860க்கு மேலல்லவோ இவர்களில் சிலர் ரஹஸ்யவியாக்கியானமெழுதவும், சிலர் ஸ்தோத்ரவ்யாக்கியானமெழுதவும், சிலர் (தேசிகப்) பிரபந்தவியாக்கியானமெழுதவும் புகுந்திருக்கிறார்கள். இதை நாம் எத்தனை தடவையெடுத்துக்காட்டியிருக்கிறோம். "இது சர்விதசர்வணம், பிஷ்டபேஷணம்" என்று தோஷம்கூறலாமிவர்கள். இதுவும் ஒரு தூஷணமேயாதலால் இந்தவகையில் நம்மைக் கண்டித்துவிட்டதாக இவர்கள் த்ருப்தியடையலாமத்தனை.

10. தேசிகன் அவதரித்துப் பரச்சதப்ரபந்தங்களை யருளிச்செய்து திருநாட்டுக் கெழுந்தருளியபின் நானூறு ஸம்வத்ஸரகாலம் இவர்கள் எங்கிருந்தார்கள்? என்ன செய்துகொண்டிருந்தார்கள்? என்கிற நம்முடைய கேள்வி நாற்பது வருடங்களுக்கு மேலாகத் தொடர்ந்து வருகின்றது. தேசிகனைப்பற்றியோ ஸ்ரீராமாநுஜரைப்பற்றி யோ மற்றுமுள்ள நாதயாமுநாதிகளைப்பற்றியோ ஆழ்வார்களைப்பற்றியோ இவர் க்ளில் ஒருவராவது ஓரெழுத்தாவது எழுதியிருப்பதுண்டோவென்று நாம் கேட்கிற கேள்வியை இவர்கள் உபேக்ஷிக்க முடியாது. இக்கேள்வியை இவர்கள் நம்மைநோக் கிக் கேட்கிறபக்ஷத்தில் நாம் தாராளமாக விடையிறுக்கவல்லோம். ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸாபாஷ்யம், ரஹஸ்யத்ரயமீமாம்ஸாபாஷ்யம், தாத்பர்யதீபிகை முதலாக விளங்கிவரும் வடமொழி நூல்களும், பெரிய வாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளுக்கும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளுக்கும் அரும்பதவிளக்கங்களாகவும் காப்பாக வும் அவதரித்துள்ள தென்மொழி நூல்களும் ஸமீபகாலத்தில் (அதாவது இரண்டு மூன்று நூற்றூண்டுகளுக்குள்) தோன்றியவையல்ல.

11. பூருவாசாரியர்களுள் பெரும்பான்மையோர்க்கு ஸந்ததி அநுஸ்யூதமாய் இடை யூறுதுவந்துகொண்டிருக்கிறது. உடையவர்காலத்து ஆசார்ய புருஷர்களோ, மண வாளமாமுனிகளின்காலத்து ஆசார்யபுருஷர்களோ [ அஷ்டதிக்கஜாசாரியர்கள் ] இவர்களின் ஸந்நதிபரம்பரையார்கள் ஆங்காங்கு திவ்யதேசங்களில் ப்ரதிஷ்டிதர் களாக விளங்குவதொன்றே போதுமானது.

12. பெரியநம்பிஸந்ததியார் நாங்கள் என்றோ, திருமாலையாண்டான் வம்சஸ்தர்கள் நாங்கள் என்றோ, திருக்கோட்டியூர் நம்பி பரம்பரையினர் நாங்கள் என்றோ, அனந் தாழ்வான்திருவம்சத்தவர்கள் நாங்கள் என்றோ, எம்பார் ஆழ்வான் முதலியாண்டான் வம்சத்தவர்கள் நாங்கள் என்றோ, பிரதிவாதிபயங்கரவம்சீயர்கள் நாங்கள் என்றோ, சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர்ஸ்வாமி குலத்தவர் நாங்கள் என்றோ, கிம்பஹுநா? வேதாந்தாசார்யவம்சஸ்தர்கள் நாங்கள் என்றோ சொல்லிக்கொண்டு திவ்யதேசங்களில் தலைகாட்டுவதற்கு எதிர்வகுப்பில் ஒருவருளரோ?

13. ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயஸ்தர்களுக்கு உபயவேதாந்த ப்ரவர்த்தகத்வம் சிறப்புப்பெயராகக் கிடைத்தது. அது தன்னிலும் ஸம்ஸ்க்ருதவேதாந்தத்தை இடக் கண்ணாகவும், த்ராவிடவேதாந்தத்தை வலக் கண்ணாகவும் கொள்பவர்களே உத்தம ஸ்ரீவைஷ்ணவர்களென்கிற அத்யவஸாயமும் அநபாயமாகவுள்ளது. இதனால் ஸம்ஸ் க்ருதவேதாந்தத்திற்குக் குறை கூறினதாக ஆகாது. ஸ்ரீமந்நாதமுனிகள் கோரமாத வஞ்செய்து திராவிட வேதாந்தத்தை ஆர்ஜித்தருளினபடியால் "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் - இதமகிலதம: கர்சநம் தர்சநம் ந:" என்று தேசிகன் கொண்டாடின நம் தரிசனத்தில் திராவிட் வேதாந்த் ப்ரவர்த்தகர்களுக்கே ப்ரசஸ்தி விளைந்தது. அந்த ப்ரசஸ்தியைப்பெற்றவர்கள் தென்னாசார்யஸம்பிரதாயஸ்தர்களே யென்பது ஊர்ஜிதம். எங்கும் திவ்யதேசபரிபாலகர்கள் இவர்களேயன்றோ. தேசிகப்பிரபந்தங் களை ஓதியிருக்கவேண்டுமானாலும் இவர்களைத் தவிர்த்து வேறுயாரிடம் அவ்வதிகாரம் செல்லும்? இதைப்பற்றி ஒரு பாரதமெழுதினாலும் போராது.

14. அருளாளப்பெருமாளெம் பெருமானார் பணித்த ஞானஸாரப்ரமேயஸாரங் களுக்கோ, பிள்ளைப்பெருமாளையங்கார்பணித்த அஷ்டப்பிரபந்தங்களுக்கோ ஒரு கோ விலிலும் பரிக்ரஹமேற்படவில்லை. அவற்றில் என்ன குறைகூறமுடியும்? பகவந்நிய மனம் ஏற்படவில்லையென்பதே குறை. மற்றுள்ள ஆசாரியர்களின் தனியன்களிற் காட்டிலும் மணவாளமாமுனிகளின் தனியனுக்குச் சிறப்பு ஏற்பட்டதுபோல மண வாளமாமுனிகளின் திவ்வியப்பிரபந்தங்களுக்கும் அப்ரத்ருஷ்யமான சிறப்பு ஏற்பட்ட தென்றால் இதற்குப்பொறாமைப்பட்டுப் பயனென்கொல்? விச்வாமித்ரஸ்ருஷ்டிகள் ஒருகாலும் ஓரிடத்திலும் விலைச்செல்லமாட்டா.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



*15.* ''தேசிகன் தஞ்சை மாமணிக்கோயிலிலிருந்துகொண்டு தத்வமுக்தர்கலாபம் ஸாதித்தார்; திருக்கண்டியூரிலிருந்துகொண்டு ஸர்வார்த்தஸித்தியெழுதினுர்; உப்பி லியப்பன் ஸன்னிதியிலிருந்துகொண்டு நியாயஸித்தாஞ்ஜநம் பணித்தார்; தேரழுந் தூரிலிருந்துகொண்டு நியாய பரிசுத்தியெழுதினுர்'' என்றிப்படி இவர்கள் எழுதி வைத்துப் பெருமைபெறலாம், பெறுவிக்கலாம். அஸம்பாவிதங்களையெழுதி அவஜ் ஞைபெறவேணுமென்பதே இவர்களது ஸங்கல்பமர்தலாலும், மூலைமுடுக்குகளில் எழு திவைத்திருந்தர்ல் இதைப்பார்த்துச்சில பாமரர்களாவது வஞ்சிக்கப்படமாட்டார் களா? என்னுமெண்ணத்திஞலும் ஒருவர்மாறியொருவராக இத்தகைய அஸம்பத்தங் களை யெழுதிவைப்பதே போது போக்காக இருந்துவருகிருர்கள்.

*16.* செங்கற்பட்டு, ஸப் ஜட்ஜ் கோர்ட்டு O. S. No. 7, (ஷ 1945) காஞ்சீபுரம் R. வரததாதாசாரி யென்பவர் -- ''தமிழ்ப்பிரபந்தங்கள் வேதத்தில் பிரவேசமில்லாத ஸ்திரீ சூத்ரர்களுக்காகவே ஏற்பட்டவை. ஆகையர்ல் வடகலை தாதாசாரிகள் இது நமக்குவேண்டாமென்று தென்கலை ஆத்தான்ஜீயருக்கு விட்டுக்கொடுத்துவிட்டார் கள்'' என்று ஸ்டேட்மெண்டு பேர்ட்டிருக்கிருர். அந்த ஜட்ஜ் இதையெடுத்துக்காட்டி எழுதியிருப்பதாவது :-

> ''இதனுல் வடகலையாருக்குப் பிரபந்தங்கள் விஷயத்தில் எவ்வளவு அலக்ஷியம் இருக்கிறதென்பதை நன்கு உணரலாம்; இப்படியிருந்தும் இவர்கள் தாங்களும் தமிழ்ப்பிரபந்தம் சொல்லவேணுமென்று ஆக்ர ஹம் கொள்வதுதர்ன் மிகவும் வேடிக்கையாயிருக்கிறது'' --- என்று.

''தேவராஜஸ்வர்மி தேவஸ்தானமும் தாதாசார்ய குடும்பமும்'' என்கிற அடுத்த வியாஸம் இதற்கு அநுபந்தமர்கவே வர்சிக்கத்தக்கது....



## முடிவாக வொரு வார்த்தை.

அடியேனுடைய கண்டனங்களுக்கு இலக்காகநூல்களையோ வியாஸங்களையோ எழுதிவருகின்ற வகுப்பினருடைய திரளில் வித்வான்களும் விவேகிகளும் இல்லாமற்போக வில்லை. தாங்கள் சொல்லிவருவதும் எழுதிவருவதும் அபத்தம் அஸம்பந்தம் அந்ருதம் என்பதை யுணரமாட்டாதவர்கள் அந்த வகுப்பில் ஒருவர்கூட இருக்கமுடியர்து. உண் மையைத் தாங்களே தெரிந்துகொள்ள முடியாமற்போனுலும் அலசியலசி அடியே னெடுத்துக்காட்டியபின்பும் உண்மை தெரிந்துகொள்ளாமலிருக்க முடியவே முடியாது. பெண்களும் பேதையருங்கூடவன்ருே தெரிந்துகொண்டிருக்கிருர்கள். உள்ளது உள்ள படியே தெரிந்துகொண்டிருந்துங்கூட, படித்தவர் படியாதவர் என்கிற வாசியின்றியும், விவேகிகள் அவிவேகிகள் என்கிற வாசியின்றியும் அஸம்பத்தப்ரலாப பரம்பரையை இடையருது நடத்திக்கொண்டு போருவதுண்டே, இது வியப்பினும் வியப்பே...





பெரிய காஞ்சிபுரம் சுக்லயஜுர்வேத பாடசாலையில் நடந்த யாஜ்ஞவல்க்ய ஜயந்தி மஹோத்ஸவத்தில் 17-11-64 இரவில் P. B. A. ஸ்வாமியின் வைதிகோபந்யாஸ கோஷ்டி

Rgd. No. 2975




ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

---

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,

L. KANCHEEPURAM.



29. Sri Vengoopuram Raghavacharya
MELKOTE. (Mysore)




Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.